# கத்தோலிக்க திருமறை

## தரம்

## 10

கல்வி வெளியீட்டுத் திணைக்களம்



# தேசிய கீதம்

சிறீ லங்கா தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நல்லெழில் பொலி சீரணி
நலங்கள் யாவும் நிறை வான்மணி லங்கா
ஞாலம் புகழ் வள வயல் நதி மலை மலர்
நறுஞ்சோலை கொள் லங்கா
நமதுறு புகலிடம் என ஒளிர்வாய்
நமதுதி ஏல் தாயே
நம தலை நினதடி மேல் வைத்தோமே
நமதுயிரே தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதாரருள் ஆனாய்
நவை தவிர் உணர்வானாய்
நமதேர் வலியானாய்
நவில் சுதந்திரம் ஆனாய்
நமதிளமையை நாட்டே
நகு மடி தனையோட்டே
அமைவுறும் அறிவுடனே
அடல் செறி துணிவருளே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதார் ஒளி வளமே
நறிய மலர் என நிலவும் தாயே
யாமெலாம் ஒரு கருணை அனைபயந்த
எழில்கொள் சேய்கள் எனவே
இயலுறு பிளவுகள் தமை அறவே
இழிவென நீக்கிடுவோம்
ஈழ சிரோமணி வாழ்வுறு பூமணி
நமோ நமோ தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

ஒரு தாய் மக்கள் நாமாவோம்
ஒன்றே நாம் வாழும் இல்லம்
நன்றே உடலில் ஓடும்
ஒன்றே நம் குருதி நிறம்

அதனால் சகோதரர் நாமாவோம்
ஒன்றாய் வாழும் வளரும் நாம்
நன்றாய் இவ் இல்லினிலே
நலமே வாழ்தல் வேண்டுமன்றோ

யாவரும் அன்பு கருணையுடன்
ஒற்றுமை சிறக்க வாழ்ந்திடுதல்
பொன்னும் மணியும் முத்துமல்ல - அதுவே
யான்று மழியாச் செல்வமன்றோ.

**ஆனந்த சமரக்கோன்**
கவிதையின் பெயர்ப்பு.



''புதிதாகி, மாற்றமடைந்து சரியான அறிவின் மூலம்
நாட்டுக்குப் போன்றே முழு உலகிற்கும் அறிவுச் சுடராகுங்கள்''

## கௌரவ கல்வி அமைச்சரின் செய்தி

கடந்து சென்ற இரு தசாப்தங்களுக்கு அண்மிய காலமானது உலக வரலாற்றில் விசேட தொழினுட்ப மாற்றங்கள் நிகழ்ந்ததொரு காலமாகும். தகவல் தொழினுட்பம் மற்றும் ஊடகங்களை முன்னணியாகக் கொண்ட பல்வேறு துறைகளில் ஏற்பட்ட துரித வளர்ச்சியுடன் இணைந்து மாணவர் மத்தியில் பல்வேறு சவால்கள் தோன்றியுள்ளன. இன்று சமூகத்தில் காணப்படும் தொழில்வாய்ப்பின் இயல்பானது மிக விரைவில் சிறப்பான மாற்றங்களுக்கு உட்படலாம். இத்தகைய சூழலில் புதிய தொழினுட்ப அறிவையும் திறனையும் அடிப்படையாகக் கொண்டதொரு சமூகத்தில் வெவ்வேறு விதமான இலட்சக் கணக்கான தொழில்வாய்ப்புகள் உருவாகின்றன. எதிர்கால சவால்களை வெற்றிகொள்ளும் பொருட்டு நீங்கள் பலம்பெற வேண்டுமென்பது கல்வி அமைச்சரென்ற வகையில் எனதும் எமது அரசினதும் பிரதான நோக்கமாகும்.

இலவசக் கல்வியின் சிறப்புமிக்கதொரு பிரதிபலனாக உங்களுக்கு இலவசமாகக் கிடைத்துள்ள இந்நூலை சீராகப் பயன்படுத்துவதும் அதன்மூலம் தேவையான அறிவைப் பெற்றுக்கொள்வதுமே உங்கள் ஒரே குறிக்கோளாக இருக்க வேண்டும். அத்துடன் உங்கள் பெற்றோர்களுட்பட மூத்தோரின் சிரமத்தினதும் தியாகத்தினதும் பிரதிபலனாகவே இலவசப் பாடநூல்களை அரசினால் உங்களுக்குப் பெற்றுத்தர முடிகிறது என்பதையும் நீங்கள் விளங்கிக்கொள்ள வேண்டும்.

ஓர் அரசாக நாம், மிக வேகமாக மாறி வரும் உலக மாற்றத்திற்குப் பொருந்தும் விதத்தில் புதிய பாடத்திட்டத்தை அமைப்பதும் கல்வித் துறையில் தீர்க்கமான மாற்றங்களை மேற்கொள்வதும் ஒரு நாட்டின் எதிர்காலம் கல்வி மூலமே சிறப்படையும் என்பதை மிக நன்றாகப் புரிந்து வைத்துள்ளதனாலேயேயாகும். இலவசக் கல்வியின் உச்சப் பயனை அனுபவித்து நாட்டிற்கு மாத்திரமன்றி உலகுக்கே செயற்றிறன்மிக்க ஓர் இலங்கைப் பிரசையாக நீங்களும் வளர்ந்து நிற்பதற்கு தீர்மானிக்க வேண்டியுள்ளது. இதற்காக இந்நூலைப் பயன்படுத்தி நீங்கள் பெற்றுக்கொள்ளும் அறிவு உங்களுக்கு உதவுமென்பது எனது நம்பிக்கையாகும்.

அரசு உங்கள் கல்வியின் நிமித்தம் செலவிடுகின்ற மிகக் கூடிய நிதித்தொகைக்கு பெறுமதியொன்றைச் சேர்ப்பது உங்கள் கடமையாவதுடன் பாடசாலைக் கல்வியூடாக நீங்கள் பெற்றுக்கொள்ளும் அறிவு மற்றும் திறன்கள் போன்றவையே உங்கள் எதிர்காலத்தைத் தீர்மானிக்கின்றன என்பதையும் நீங்கள் நன்கு கவனத்திற்கொள்ள வேண்டும். நீங்கள் சமூகத்தில் எந்த நிலையிலிருந்தபோதும் சகல தடைகளையும் தாண்டி சமூகத்தில் மிக உயர்ந்ததொரு இடத்திற்குப் பயணிக்கும் ஆற்றல் கல்வி மூலமாகவே உங்களுக்குக் கிடைக்கின்றது என்பதை நீங்கள் நன்கு விளங்கிக்கொள்ள வேண்டும்.

எனவே இலவசக் கல்வியின் சிறந்த பிரதிபலனைப் பெற்று, மதிப்பு மிக்கதொரு பிரசையாக நாளைய உலகை நீங்கள் வெற்றி கொள்வதற்கும் இந்நாட்டில் மட்டுமன்றி வெளிநாடுகளிலும் இலங்கையின் நாமத்தை இலங்கச் செய்வதற்கும் உங்களால் இயலுமாகட்டும் என கல்வி அமைச்சர் என்ற வகையில் நான் பிரார்த்திக்கின்றேன்.

**அகில விராஜ் காரியவசம்**
**கல்வி அமைச்சர்**

## முன்னுரை

உலகின் சமூக, பொருளாதார, தொழினுட்ப, கலாசார விருத்தியுடன் சேர்ந்து கல்வியின் நோக்கங்கள் மிக விரிந்த தோற்றமொன்றைப் பெற்றுள்ளன. மானிட அனுபவங்கள், தொழினுட்ப மாற்றங்கள் ஆராய்ச்சி மற்றும் புதிய குறிகாட்டிகளின்படி கற்றல் கற்பித்தல் செயற்பாடும் நவீனமயமாக்கப்பட்டுள்ளது. அதன்போது மாணவர் தேவைக்குப் பொருந்தும் விதமான கற்றல் அனுபவத்தை ஒழுங்கமைத்து கற்பித்தல் செயற்பாட்டை நடைமுறைப்படுத்திச் செல்வதற்கு பாடத்திட்டத்தில் காணப்படுகின்ற நோக்கங்களிற்கிணங்க பாடம் தொடர்பான விடயங்களை உள்ளடக்கிப் பாடநூல்களை ஆக்குவது அவசியமாகும். பாடநூல் என்பது மாணவரின் கற்றல் சாதனம் மாத்திரமல்ல. அது கற்றல் அனுபவங்களைப் பெறுவதற்கும் அறிவு, பண்பு விருத்திக்கும் நடத்தை மற்றும் மனப்பாங்கு வளர்ச்சியுடன் உயர்ந்த கல்வியொன்றை பெற்றுக் கொள்வதற்கும் மிகவும் உதவக்கூடியதுமாகும்.

இலவசக் கல்விக் கருத்திட்டத்தை நடைமுறைப்படுத்தும் நோக்கில் தரம் 6 முதல் தரம் 11 வரை சுமார் 91 வகையான பாடநூல்கள் அரசினால் உங்களுக்கு வழங்கப்படுகின்றன. அந்நூல்களிலிருந்து உயர்ந்தபட்சப் பயன்களைப் பெற்றுக்கொள்வதுடன், அவற்றைப் பாதுகாப்பதும் உங்களது கடமையாகும் என்பதையும் நினைவூட்டுகின்றேன். பூரண ஆளுமைகொண்ட நாட்டிற்குப் பயனுள்ள சிறந்ததொரு பிரசையாகுவதற்கான பயிற்சியைப் பெற்றுக்கொள்வதற்கு இப்பாடநூல் உங்களுக்குக் கைகொடுக்கும் என நான் எண்ணுகிறேன்.

இப்பாடநூலாக்கத்தில் பங்களிப்புச் செய்த எழுத்தாளர், பதிப்பாசிரியர் குழு உறுப்பினர்களுக்கும் கல்வி வெளியீட்டுத் திணைக்கள உத்தியோகத்தர்களுக்கும் எனது நன்றிகள் உரித்தாகட்டும்.

டபிள்யூ. எம். ஜயந்த விக்கிரமநாயக்க
கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்
இசுருபாய
பத்தரமுல்ல.
2019.04.10

## கண்காணிப்பும் மேற்பார்வையும்

**திரு டபிள்யூ. எம். ஜயந்த விக்கிரமநாயக்க**
கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## வழிகாட்டல்

**திருமதி டபிள்யூ. ஏ. நிர்மலா பியசீலி**
கல்வி வெளியீட்டு ஆணையாளர் (அபிவிருத்தி)
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## ஆலோசனைகள்

**மேதகு கலாநிதி மக்ஸ்வெல் சில்வா ஆண்டகை**
**மேதகு கலாநிதி ஒஸ்வெல்ட் கோமஸ் ஆண்டகை (ஓய்வு)**
**அருட்பணி தயா ஷெல்ட்டன் வெலிகட ஆராச்சி**

## இணைப்பாக்கம்

**திரு. சி. காண்டீபன்**
அபிவிருத்தி அலுவலர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

**திருமதி. ஆர். டி. விஜய விக்கிரம**
உதவிக் கல்வி ஆணையாளர் (அபிவிருத்தி)
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## பதிப்பாசிரியர் குழு

**அருட்பணி. அந்திரியாஸ் பர்ணான்டோ அ.ம.தி.**
உதவி விரிவுரையாளர் - சமயப்பிரிவு
தேசிய கல்வி நிறுவகம் - மகரகம.

**அருட்பணி. பியால் ஜானக பர்னாந்து**
பணிப்பாளர்
தேசிய கத்தோலிக்க மறைக்கல்வி நடு நிலையம், கொழும்பு - 8.

**அருட்பணி. டி.எம்.டீ.ஏ. ஜீட் சி. தஸநாயக்க**
சிரேஷ்ட விரிவுரையாளர்
வயம்ப தேசிய கல்வியற் கல்லூரி, பிங்கிரிய.

**அருட்பணி. ஹால்டல் த சில்வா**
சிரேஷ்ட விரிவுரையாளர் - சமயப்பிரிவு
தேசிய கல்வி நிறுவகம் - மகரகம.

**அருட்பணி எம்.ஜி.எல். பர்னாந்து**
உதவிக் கல்விப் பணிப்பாளர் - சமயப்பிரிவு
கல்வியமைச்சு.

## நூலாக்கக் குழு

**அருட்சகோதரி டபிள்யூ. ஜே. மேரி ஜசிந்தா பர்னான்டோ**
ஒய்வு பெற்ற அதிபர்
ராஜகிரிய றோமன் கத்தோலிக்க மகா வித்தியாலயம்.

**செல்வி ஜே. பிலோமின்**
ஆசிரிய ஆலோசகர்
மட்டக்களப்பு வலயம்.

**செல்வி டெய்சி இம்மகுலேற் ஜோசவ்**
ஆசிரிய ஆலோசகர்
கொழும்பு - நீர்கொழும்பு வலயம்.

**திரு.ரி. ஐ. ரங்கநாயகம்**
ஆசிரியர்
புனித அந்தோனியார் மகளிர் மகா வித்தியாலயம், கொழும்பு - 3.
பகுதிநேர விரிவுரையாளர், புனித யோசேவாஸ் இறையியல் கல்லூரி.

**அருட்சகோதரி என்.சி. மேரி இமல்க்கா**
ஆசிரியர்
புனித ஜோசப் ஆண்கள் பாடசாலை, நுகேகொட.

**திரு. எஸ்.ஜி.கே.டீ.எல்.சி. பிரசாத்**
ஆசிரிய ஆலோசகர்
வலயக் கல்வி காரியாலயம் - ஹோமாகம.

**திருமதி. கே. பத்மினி எஸ்தர் பெரேரா**
ஆசிரிய ஆலோசகர்
கோட்டக் கல்வி காரியாலயம், களனி.

**திருமதி.டபிள்யூ.கே. எம்.ஐ.எஸ்.கே. பர்னாந்து**
ஆசிரிய ஆலோசகர் - ஓய்வு.

**செல்வி எம்.எஸ். ரேணுகா பர்னாந்து**
ஆசிரியர்
போலவளான நிமல மரியா மகா வித்தியாலயம், நீர்கொழும்பு.

## பதிப்பாசிரியர் (மொழி)

**அருட். சகோ. பெனடிக் பொன்வெஞ்சர்** FSC,
அதிபர்
புனித பெனடிக் கல்லூரி, பிரதம பகுதி, கொழும்பு - 13.

## கணினி வடிவமைப்பு

**திருமதி. பிரியதர்ஷினி ரமேஸ்குமார்**
கணினி உதவியாளர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## சித்திரம் அட்டைப்படம்

**திரு. சஜித் இஷான் எட்டியாராய்ச்சி.**

# பொருளடக்கம்

# 1 பழைய ஏற்பாட்டு நூல்களின் வகைகள்



1.1 திருவிவிலியம்

எழுத்து வடிவம் பெற்ற இறைவெளிப்பாடான திருவிவிலியம், கிறிஸ்தவர்களின் அதி மேன்மையான புனித நூல் ஆகும். அது ஒரு தனி நூல் அல்ல. பல நூல்களைக் கொண்ட ஒரு நூலகமாகும். அதிலுள்ள எழுபத்துமூன்று நூல்களும் இறை ஏவுதலால் எழுதப்பட்டவை ஆகும்.

திருவிவிலியத்தின் பிரதான ஆசிரியர் இறைவன், துணை ஆசிரியர் மனிதன். கி.மு 950 - கி.பி 100க்கிடையிலான காலப்பகுதியிலேயே திருவிவிலியம் எழுதப்பட்டதாக பொதுவாக ஏற்றுக்கொள்ளப்படுகிறது. திருவிவிலியத்தை பழைய ஏற்பாடு புதிய ஏற்பாடு என இரு பகுதிகளாகப் பிரிக்கலாம். பழைய ஏற்பாட்டில் 46 நூல்கள் உள்ளன. அவற்றை ஐந்து பகுதிகளாகப் பிரிக்கலாம்.

**பழைய ஏற்பாடு**
**(46 நூல்கள்)**

**ஐந்நூல்**
1. தொடக்கநூல்
2. விடுதலைப் பயணம்
3. லேவியர்
4. எண்ணிக்கை
5. இணைச் சட்டம்

**வரலாற்று நூல்கள்**
1. யோசுவா
2 நீதித்தலைவர்கள்
3. ரூத்து
4. I சாமுவேல்
5. 2 சாமுவேல்
6. I அரசர்கள்
7. 2 அரசர்கள்
8. I குறிப்பேடு
9. 2 குறிப்பேடு
10. எஸ்ரா
11. நெகேமியா
12. தோபித்து
13. யூதித்து
14. எஸ்தர்
15. I மக்கபேயர்
16. 2 மக்கபேயர்

**ஞானநூல்கள்**
1. யோபு
2. திருப்பாடல்கள்
3. நீதிமொழிகள்
4. சபை உரையாளர்
5. இனிமை மிகு பாடல்
6.சாலமோனின் ஞானம்
7. சீராக்கின் ஞானம்

**இறைவாக்கினர் நூல்கள்**
1. எசாயா
2. எரேமியா
3. புலம்பல்
4. பாரூக்கு
5. எசேக்கியேல்
6. ஓசேயா
7. யோவேல்
8. ஆமோஸ்
9. ஒபதியா
10. யோனா
11. மீக்கா
12. நாகூம்
13. அபகூக்கு
14. செப்பனியா
15. ஆகாய்
16. செக்கரியா
17. மலாக்கி

**வெளிப்பாடு இலக்கியம்**
1. தானியேல்

## வரலாற்று நூல்கள்

பழைய ஏற்பாட்டில் மீட்பின் வரலாறு விளக்கப்பட்டுள்ளது. இது வரலாற்று நிகழ்வையோ, மனித வரலாற்றினையோ கால எல்லையையோ, விளக்கும் நூல் அல்ல. இஸ்ரயேல் மக்களின் வாழ்வில் இடம்பெற்ற அனுபவங்களையும் நிகழ்வுகளையும் நம்பிக்கையின் கண்ணோட்டத்தில் விளக்கி நிற்கிறது. ஏனெனில் அதன் நோக்கம் இறைநம்பிக்கையை வளர்ப்பதாகும். இந்நூல்களுக்குள் இஸ்ரயேல் மக்கள் இறைவனை அனுபவித்த பல நிகழ்வுகள் உள்ளடக்கப்பட்டிருக்கின்றன. வரலாற்று நூல்கள் 16 ஆகும். அவற்றை மேலே தரப்பட்டுள்ள அட்டவணையின் மூலம் அறிந்துக்கொள்ளலாம்.

யோசுவா தொடக்கம் 2 அரசர்கள் வரையிலான நூல்களை நாம் கற்கும் போது, சீனாய் உடன்படிக்கையின் (பத்துக்கட்டளை) படி செயலாற்றும் போது தலைவர்களும், இஸ்ரயேல் இனத்தவரும் தம் வாழ்வில் உயர்ச்சியையும் வெற்றியையும் அனுபவித்ததையும்; உடன்படிக்கையின் படி செயலாற்றாதபோது வீழ்ச்சியையும், தோல்வியையும் பெற்றுக் கொண்டதையும் அறியமுடிகிறது. அதாவது

உடன்படிக்கைக்கு ஏற்ற வாழ்க்கை வாழ்ந்தவர்கள் இறை ஆசீரைப் பெற்றதுடன் அதனை நிராகரித்தவர்கள் தம் வாழ்வில் வீழ்ச்சியையும், இறை தண்டனையையும் பெற்றுக் கொண்டனர். எனவே சீனாய் உடன்படிக்கையான பத்துக்கட்டளைக்கேற்ப வாழும் போது இறையாசீர் எமக்கு உரிமையாகக் கிடைக்கின்றது.

ரூத், எஸ்தர் எனும் நூல்கள் மக்களால் விரும்பப்படுகின்ற இரு வரலாற்று நூல்களாகும். அவற்றில் தனிநபர் அல்லது இனத்தின் பிரச்சினைகளும் அவற்றுக்குரிய தீர்வுகளும் இறைகண்ணோட்டத்துடன் முன்வைக்கப்பட்டுள்ளன.

எஸ்ரா, நெகேமியா நூல்களில் இஸ்ரயேலர் பபிலோனியாவுக்கு நாடு கடத்தப்பட்ட பின், திரும்பவும் தம் சொந்த நாட்டுக்கு வந்து, சமய, சமூக, புனரமைப்புப் பணிகளில் ஈடுபட்டமை தொடர்பான விளக்கங்கள் தரப்பட்டுள்ளன.

மேற்கூறியவற்றை நோக்கும் போது பழைய உடன்படிக்கையில் வரலாற்று நூல்கள், வேத வரலாற்று கதைகள் எனவும் அறிமுகப்படுத்தப்படுகிறது. இதன் மூலம் மனித வரலாற்றிலே இறைவன் செயலாற்றுகிறார் என்பது தெளிவாகிறது.

## திருவிவிலியமும் உயிருள்ள திருச்சபையின் பாரம்பரியமும்

கத்தோலிக்க திருமறை இறைவார்த்தையினை அடிப்படையாகக் கொண்டுள்ளது. இறைவன் தம் வார்த்தையின் வல்லமையால் உலகைப் படைத்தார். இவ் இறை வார்த்தையானது பரம்பரை பரம்பரையாக வாய்மொழிப் பாரம்பரியத்தின் மூலம் உலகத்திற்கு அளிக்கப்பட்டு வருகின்றது. உதாரணமாகப் புதிய ஏற்பாட்டில் முதன் முதலாக எழுதப்பட்ட நூல் மாற்கு நற்செய்தியாகும். அது கி.பி 64 - 66ற்கும் இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்டதாகும். அதுவரை இயேசு மொழிந்த எந்த ஒரு வார்த்தையும் எழுத்துவடிவம் பெற்றிருக்கவில்லை. இயேசுவின் வாழ்க்கை, போதனைகள் நான்கு நற்செய்தி நூல்களாக வடிவம் பெற்ற போதிலும் அவற்றில் இயேசுவின் செயல்கள், போதனைகள் கையளவே உள்ளடக்கப்பட்டுள்ளன என்பதற்கு யோவான் நற்செய்தி இவ்வாறு சான்று பகருகிறது.

''வேறு பல அரும் அடையாளங்களையும் இயேசு தம் சீடர்கள் முன்னிலையில் செய்தார். அவையெல்லாம் இந்நூலில் எழுதப்படவில்லை.''(யோவா. 20:30)

''இயேசு செய்தவை வேறு பலவும் உண்டு. அவற்றை ஒவ்வொன்றாக எழுதினால், எழுதப்படும் நூல்களை உலகமே கொள்ளாது எனக் கருதுகிறேன்.'' (யோவா. 21:25)

*இதன் மூலம் இயேசு கூறியவற்றிலும் செய்தவற்றிலும் எழுத்துவடிவம் பெறாத விடயங்கள் அதிகளவு உண்டு என்பது புலனாகின்றது. அவை எழுத்துவடிவம் பெறாவிட்டாலும் அவற்றை ஒதுக்கிவிட முடியாது. அவற்றைத் திருச்சபை எமக்கு வாய்மொழிப்பாரம்பரியத்தின் மூலம் தொடர்ந்து வழங்கி வருகின்றது. வாய்மொழிப் பாரம்பரியத்தில் அடங்கியுள்ள படிப்பினைகள் இறைவார்த்தைகளாகும். அந்த இறைவார்த்தைகள் என்றென்றும் நிலைத்திருக்கும். அதனைத் தூய பேதுருவின் திருமுகத்தின் வழியாக நாம் அறிந்துகொள்ளலாம்.*

*''நம் ஆண்டவரின் வார்த்தையோ என்றென்றும் நிலைத்திருக்கும். இவ் வார்த்தையே உங்களுக்கு அறிவிக்கப்பட்ட நற்செய்தி.'' (1 பேதுரு 1:25)*

## இறைவார்த்தையின் (வெளிப்பாட்டு) மூலங்கள் இரண்டு

1. *திருவிவிலியம்*
2. *திருச்சபை பாரம்பரியம் (*Living tradition of the church*)*

*திருச்சபைப் பாரம்பரியத்தில் திருத்தூதர் காலம்முதல் நிலைத்துவரும் படிப்பினைகள் அடங்கியுள்ளன. இது கத்தோலிக்க திருச்சபையின் மேலான பண்பினை எடுத்துக்காட்டுகின்றது. ஏனைய கிறிஸ்தவ சபைகளனைத்தும் பின்னரே ஆரம்பிக்கப்பட்டாலும், கத்தோலிக்க திருச்சபையே திருத்தூதர்களின் காலத்தில் இருந்து தொடர்ந்து வருவதோடு, திருத்தூதர்கள் வழிவந்த திருச்சபை பாரம்பரியமும் கத்தோலிக்க திருச்சபைக்கே உரித்துடையதாகும். எனவே அப்பாரம்பரியத்தைப் பின்பற்றி அதில் அடங்கியுள்ள படிப்பினைகளையும், சடங்குகளையும் கத்தோலிக்க திருச்சபை தொடர்ந்து பின்பற்றிவருகிறது. திருவிவிலியத்தில் உள்ளடங்காத ஆனால் திருச்சபையினால் பின்பற்றப்படுகின்ற விடயங்கள் யாவும் பாரம்பரியத்தின் வழிவந்ததோடு, தூய ஆவியின் வல்லமையினால் வழிநடத்தப்படுகிறது.*

## செயற்பாடு

1. இறைவெளிபாட்டின் மூலங்கள் இரண்டு தருக.

2. திருவிவிலியத்தில் உள்ளடங்காத, கத்தோலிக்க திருச்சபையால் ஏற்றுக் கொள்ளப்பட்ட போதனை மூலங்கள் எவை?

3. விடுதலைப்பயணம், யோசுவா, திருப்பாடல்கள், எரேமியா, தானியேல் ஆகிய நூல்கள் பழைய ஏற்பாட்டின் எப்பிரிவுக்குள் அடங்குகின்றன?

4. சமய வரலாறு என்ற பதத்தால் நீர் விளங்குவது யாது?

5. உமது வாழ்வில் இறைவனை அனுபவித்த சந்தர்ப்பம் ஒன்றினை எழுதுக.



**வாழ்க்கைக்கு**

★ அன்றாட வாழ்க்கைப் பிரச்சினைக்குரிய விடையை திருவிவிலியத்திலிருந்து தேடுவோம்.

★ எம் வாழ்வில் ''இறைவன் செயலாற்றுகிறார்'' என்பதை அறிந்து கொள்வோம்.

★ பத்துக் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்து நல்வாழ்வு வாழ்வோம்.

★ வாழ்வின் நிகழ்வுகளை நம்பிக்கைக் கண்கொண்டு பார்ப்போம்.

★ துன்பதுயரங்கள், பிரச்சினைகள் போன்ற சவால்களின் மத்தியில் தவறான தீர்வுகளை எடுக்காமல் இறைநம்பிக்கைக்கு சான்று பகர்வோம்.

# 2 புதிய ஏற்பாட்டு நூல்களின் வகைகள்



## திருத்தூதர் பணி நூல்

ஆலயத்தின் வருடாந்த செயற்பாட்டுத் திட்டத்தில் தரம் 10 மாணவர்களின் புதிய ஆலோசனை ஒன்று முன்வைக்கப்பட்டது. அதற்கிணங்க அப்பங்கிலுள்ள எழுத வாசிக்க முடியாத மாணவர்களை ஒன்று சேர்த்துக் கற்பிப்பதற்கு அவ்வேலைத்திட்டம் ஒழுங்கு செய்யப்பட்டது. குருவானவரின் அனுமதியுடன் மாணவர்கள் கற்பித்தல் செயற்பாட்டில் ஆர்வத்துடன் ஈடுப்பட்டனர். மாணவர்களின் ஆர்வத்தையும் உற்சாகத்தையும் கண்டுணர்ந்த பங்கு மக்கள் அவர்களுக்குத் தேவையான உணவு, குளிர்பானம், கற்றல் உபகரணங்கள் போன்றவற்றை வழங்கித் தமது ஒத்துழைப்பை நல்கினர்.

இவர்களின் செயற்பாட்டைக் கேள்வியுற்ற அக்கிராமத்தின் ஏனைய பிள்ளைகளும் இன, மத பேதமின்றி இவ் வேலைத்திட்டத்தில் பங்குபற்றினர். பங்குக்குருவும், கிராம வாசிகளும் மாணவர்களின் இந்த முயற்சிக்குத் தமது பாராட்டுக்களைத் தெரிவித்து அவர்களை மென்மேலும் ஊக்கப்படுத்தினர்.

இவ்வாறு திருச்சபை இன்றும் முன்மாதிரிகையான செயல்களிலும், பணிகளிலும் ஈடுபடுகிறது. இதே போன்ற பல உதாரணங்களை திருத்தூதர் பணி நூலிலும் நாம் காணமுடியும் (திப 2 : 42 -47)

திருத்தூதர் பணிநூலின் ஆசிரியரும், லூக்கா நற்செய்தியின் ஆசிரியரும் லூக்காவே ஆவார். திருத்தூதர் பணிநூல், லூக்கா நற்செய்தியின் இரண்டாம் பாகமாகக் கருதப்படுகிறது. இவ் இருநூல்களும் 'தெயோபில்' எனும் உயர் அதிகாரிக்கு அர்ப்பணிக்கப்பட்டவையாகும்.(லூக் 1:1-4) (திப 1 : 1). தெயோபில் என்ற பெயரின் அர்த்தம் **"ஆண்டவரின் நண்பன்"** என்பதாகும்.

தூய லூக்கா வரலாற்று ஆசிரியரும், ஓவியக்கலைஞரும், மருத்துவரும் ஆவார். இவர் தூய பவுலின் இரண்டாம், மூன்றாம் தூதரைப் பயணங்களில் பயணத்தோழராக இணைந்திருந்தார்.

திருத்தூதர் பணி நூலானது கிரேக்க தேசத்திலே ''அகாயா'' என்னுமிடத்தில் கி.பி 80 - 90க்கு இடைப்பட்ட காலப்பகுதியில் எழுதப்பட்டதாகக் கருதப்படுகிறது.

தூய ஆவியால் நிரப்பப்பட்ட திருத்தூதர்கள் முதலில் எருசலேமிலும் பின்னர் யூதேயாவிலும், சமாரியாவிலும் நற்செய்தியை அறிவித்து மற்றும் பிற இனத்தவர் மத்தியிலும் இறுதியாக உலகின் கடைஎல்லை வரைக்கும் நற்செய்தியைப் போதித்தமை இதில் உள்ளடக்கப்பட்டுள்ளது (தி. பணி 1:8).

அவ்வாறே நாமும் இறைவனின் நண்பராக, இயேசுக்கிறிஸ்துவின் நற்செய்தியை ஏனையவர்கள் மத்தியில் எடுத்துச் செல்ல முயற்சி செய்ய வேண்டும்.

## திருத்தூதர் பணி நூலின் அமைப்பு

- ★ *மறைபரப்புப் பணிக்கான ஆயத்தம் (திப1 அதிகாரம்)*
- ★ *எருசலேமில் சான்று பகர்தல்(திப 2-7அதிகாரங்கள்)*
- ★ *யூதேயாவிலும், சாமாரியாவிலும் சான்று பகர்தல்(திப 8-12அதிகாரங்கள்)*
- ★ *தூய பவுலின் மறைத்தூதுரைப் பணி (திப 13-28அதிகாரங்கள்)*

### செயற்பாடு

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| தி | மொ | த் | தே | யு | எ | பே | சி | ய | ர் |
| X | ரு | ர் | ய | பி | ப் | லி | பி | ய | டு |
| X | தீ | த் | து | கா | க் | லூ | சை | X | பா |
| X | ர் | உ | தூ | X | X | லோ | யு | னி | ப் |
| ன் | ய | ரோ | மா | த | கொ | X | தே | லோ | ளி |
| வா | தி | மை | ற் | X | ர் | X | த் | ச | வெ |
| யோ | ந் | ய | கு | ய | X | ப | ம | தெ | ரு |
| X | ரி | ர் | ரே | ரு | து | பே | ணி | யூ | தி |
| X | கொ | பி | ர் | ய | தி | த் | லா | க | X |
| X | எ | பு | கோ | க் | யா | பி | ல | மோ | ன் |

1. *மேலேயுள்ள அட்டவணையில் புதிய ஏற்பாட்டு நூல்கள் மறைந்துள்ளன. அவற்றைத் தெரிந்தெடுத்து எழுதுங்கள்.*
2. *முதல் கிறிஸ்தவர்களின் வாழ்க்கையில் காணப்பட்ட பண்புகள் நான்கைக் குறிப்பிடுக.*
3. *இறைவனின் நண்பனாவதற்கு உம்மால் செய்யக்கூடிய செயல்கள் 4 தருக.*
4. *திருத்தூதர்பணி நூலைப்பற்றி ஆக்கம் ஒன்று எழுதி சிறுவர் சஞ்சிகை ஒன்றுக்கு அனுப்புங்கள்.*



**வாழ்க்கைக்கு**

- ★ *வீட்டில் நாளாந்த செபத்தின் போது திருத்தூதர் பணி நூலிலிருந்து ஒரு பகுதியை வாசிக்கவும்.*
- ★ *தொடக்க கிறிஸ்தவர்களின் வாழ்க்கை முறையை, உமது வீட்டில் பின்பற்ற தலைமை தாங்கிச் செயற்படவும்.*
- ★ *உமது வகுப்பறையில் சக மாணவர்களோடு சேர்ந்து உம்மிடம் உள்ளவற்றை பகிர்ந்து ஒற்றுமையுடன் செயற்படவும்.*
- ★ *உமது வாழ்க்கை முன்மாதிரிகையால் நற்செய்தியைப் பரப்பும் மறைபரப்பாளராகத் திகழ முயற்சிக்கவும்.*

# 3 திருமுகங்களின் வகைகள்

ஜெரோம் : அம்மா இதோ பாருங்க.

அம்மா : என்ன மகனே!

ஜெரோம் : எனது கட்டுரை பத்திரிகையில் வந்திருக்கு.

அம்மா : அப்படியா மகனே! உன்னைப் பற்றி நான் மிகவும் பெருமைப் படுகிறேன். நீ சிறு வயதிலிருந்தே எழுத்தாக்கத்தில் திறமைசாலி.

ஜெரோம் : எனக்குச் சரியான சந்தோஷமாயிருக்குது அம்மா. எனது கட்டுரையை நிறையப்பேர் வாசிப்பாங்க. வகுப்பாசிரியர் என்னிடம் சொன்னார். நேரம் கிடைக்கும் போதெல்லாம் எழுதும்படி.

அம்மா : ஆம் மகனே! நீ நல்ல எழுத்தாளராக வேண்டும். எழுத்தாளராக வந்தால் சமூகத்துக்கு சிறந்த சேவையாற்ற முடியும். அப்படியான எழுத்தாளர்கள் எத்தனையோ பேர் இருக்கிறாங்க. மகனே உனக்குத் தெரியுமா? புதிய ஏற்பாட்டில் மிகவும் முக்கியமான எழுத்தாளர் தான் தூய பவுல்.

ஜெரோம் : தூய பவுல் தொடக்க கிறிஸ்தவ சபைகளுக்கு எழுத்தாளராக பெரும்பணி ஆற்றினார். அவர்தான் புதிய ஏற்பாட்டில் அதிக புத்தகங்களை எழுதினார். எனக்கும் அவரைப் போல எழுத்தாளராக வரவேணும் என்ற விருப்பம் இருக்குதம்மா.

திருத்தூதர்காலத்தில் அளப்பரிய சேவையாற்றிய நபராக தூய பவுல் காணப் படுகிறார். புதிய ஏற்பாட்டின் 21 திருமுகங்களில் (மடல்களில்) 13 திருமுகங்களை தூய பவுலே எழுதியுள்ளார். அவர் இத்திருமுகங்களைப் பல்வேறு சபைகளுக்கும், தனி நபர்களுக்கும் எழுதியுள்ளார்.. கிறிஸ்தவ திருச்சபைகளுக்கு அறிவுரை வழங்குவதற்காக இத்திருமுகங்கள் எழுதப்பட்டன. இவற்றில் அவரின் தலைமைத்துவமும், பல்வேறு சபைகளுடன் அவர் கொண்டிருந்த தொடர்பும் வெளிப்படுகின்றன.

## தூய பவுல் திருமுகங்களை எழுதியதன் நோக்கங்கள்

### 1. வேலைப்பளு காரணமாக சபைகளை தரிசிக்க முடியாமை.

*தூய பவுல் சபைகளை தனிப்பட்ட முறையில் தரிசிக்க முடியாத சந்தர்ப்பங்களில் திருமுகங்கள் மூலம் வழிகாட்டினார். இதனால் அந்தந்த சபைகளின் பிரச்சினைகளைத் தீர்ப்பதோடு மட்டுமல்லாது மேலதிகமாக அறிவுரைகளையும் வழங்கி, அவர்களின் நம்பிக்கையைத் திடப்படுத்தியது தெளிவாகின்றது. மேலும் ஆன்மீக ஆயர்த்துவ அறிவுரைகள் இதில் உள்ளடக்கப்பட்டுள்ளன.*

### 2. சிறைப்பட்டிருந்ததால் கிறிஸ்தவ சபைகளைத் தரிசிக்க முடியாமை

| | | |
|---|---|---|
| *1. கொலோசையர்* | - | *கொலோசைய நகரில் போலி ஆசிரியர்களின் தவறான கற்பித்தல்கள் நிலவின. அவற்றிலிருந்து கிறிஸ்தவர்களைப் பாதுகாப்பதற்காக.* |
| *2. பிலிப்பியர்* | - | *அங்குள்ள கிறிஸ்தவர்களை நம்பிக்கையில் உறுதிப் படுத்துவதற்காக.* |
| *3. பிலமோன்* | - | *தனிநபருக்கு எழுதப்பட்டது.* |

## தூய பவுலின் திருமுகங்களை வகைப்படுத்தல்

### 1. தூய பவுல் தன் கைப்பட எழுதிய திருமுகங்கள்

*உரோமையர், 1 கொரிந்தியர், 2 கொரிந்தியர், கலாத்தியர், பிலிப்பியர், 1 தெசலோனிக்கேயர், பிலமோன் ஆகிய ஏழு திருமுகங்களையும் பவுல் தன் கைப்பட எழுதினார்.*

### 2. இவரது அறிவுரைகளைக் கொண்டு வேறுநபர்களால் எழுதப்பட்ட திருமுகங்கள்

*எபேசியர், கொலோசையர்.*

## 3. தூய பவுலின் பெயரைப் பயன்படுத்தி வேறு நபர்கள் எழுதிய திருமுகங்கள்

I. *2 தெசலோனிக்கர்*
II. *1 திமொத்தேயு*
III. *2 திமொத்தேயு*
IV. *தீத்து*

பொதுத் திருமுகங்கள்

மேலும் எட்டுத் திருமுகங்கள் புதிய ஏற்பாட்டில் உள்ளன. இதில் எபிரேய திருமுகம் தவிர ஏனைய ஏழு திருமுகங்களும் திருத்தூதர்களான யாக்கோபு பேதுரு, யோவான், யூதா ஆகியோரால் எழுதப்பட்டவை ஆகும். இவை கத்தோலிக்க மடல்கள் அல்லது சுற்றுமடல்கள் அல்லது பொதுத் திருமுகங்கள் எனவும் அழைக்கப்படுகின்றன.



## செயற்பாடு

1. தூய பவுல் தன் கைப்பட எழுதிய திருமுகங்களை (7) குறிப்பிடுக.

2. ''நற்செய்தியைப் பரப்புவதற்கு கத்தோலிக்க எழுத்தாளரின் பங்களிப்பு'' எனும் தலைப்பில் தூயபவுலின் திருமுகங்கள் பற்றிச் சிறு கட்டுரை எழுதுக.

3. ஞாயிறு திருப்பலியில் இரண்டாம் வாசகத்திற்காக அநேக சந்தர்ப்பங்களில் பவுலின் திருமுகங்கள் வாசிக்கப்படுகின்றன. இன்றுமுதல் மூன்று மாத காலத்துக்குள், இரண்டாம் வாசகத்துக்கு பயன்படுத்தப்படும் தூய பவுலின் திருமுகங்கள் எவையென அட்டவணைப்படுத்துக.



**வாழ்க்கைக்கு**

★ உமது நாளாந்த செபத்தில் தூய பவுலின் திருமுகத்தின் ஒரு பகுதியை வாசித்துத் தியானிக்கவும்.

★ திருப்பலியில் வாசிக்கப்படும் வாசகங்களுக்கு கவனத்துடன் செவிமடுக்கவும்.

★ கத்தோலிக்க பத்திரிகைகள், சஞ்சிகைகள் போன்றவற்றில் தூய பவுல் பற்றிய விபரங்களைத் தேடிப் படிக்கவும்.

# 4 திருவெளிப்பாட்டு இலக்கியம்

பிலா பிலா கோடி வா
பில்லாமல் கோடி வா
புலை மால் கோறி வா
புல்லிகைப் பூ வுண்டு வா

இந்தப் பாடல் வரியில் வரும் பொருளை உங்களால் கண்டு கொள்ள இயலுமா? ஒரே பார்வையில் உங்களால் கண்டு கொள்ள முடியாது. எனினும் இங்குள்ள முதல் எழுத்துக்களுக்குப் பதிலாக சரியான எழுத்துக்களை இடும் பொழுது நன்றாகத் தெரிந்த சிறுவர்பாடல் ஒன்றைக் கண்டுபிடிக்க முடியும்.

அடையாளங்களைப் பயன்படுத்தி எழுதப்பட்ட இரண்டு நூல்கள் விவிலியத்தில் உள்ளன. அவை வெளிப்படுத்தல் நூல்கள் என அழைக்கப்படுகின்றன.

1. பழைய ஏற்பாட்டில் தானியேல் நூல்.
2. புதிய ஏற்பாட்டில் திருவெளிப்பாடு நூல்.

## எமக்கு நன்கு தெரிந்த அடையாளங்கள் சிலவற்றைப் பார்ப்போம்



4.1 பாதசாரிகளின் கடவை

இந்த குறியீட்டை இனங்கண்டு அதன்படி செயற்படும்போது விபத்துக்களிலிருந்து பாதுகாப்பு பெறும் அதேவேளை விபத்துக் களைத் தவிர்த்துக் கொள்ளவும் முடிகிறது.



4.2 எரிந்தும் தீய்ந்து போகாத முட்செடி

இறை பிரசன்னத்தை அடையாளப் படுத்துகிறது.


4.3 சிலுவை

சிலுவை இறையன்பினதும், இயேசு கிறிஸ்துவின் கீழ்ப்படிவினதும் அடையாளமாக விளங்குகிறது. (உரோமர் 5 : 8, பிலிப்பியர் 2 : 8). சிலுவை எமது மீட்பின் அடையாளமாகும். சிலுவையானது எமக்கு ஆபரணமாக அணியத்தக்க அணிகலன் அல்ல. அது தூய்மையானதும், பக்திக்குரியதுமான அடையாளம் ஆகும்.

இதன் மூலம் தெளிவுபடுத்தப்படுவது,

★ தொடர்பாடல் செயற்பாட்டிற்கு அடையாளங்கள் இன்றிமையாதவை.
★ எல்லா குறியீடுகளுக்கும், அடையாளங்களுக்கும் விசேட விதமான அர்த்தங்கள் உள்ளன.
★ கிறிஸ்தவர்களாகிய எமக்கே உரித்தான சமய அடையாளங்கள் இருப்பதால் நாம் அவற்றை மதிப்புடன் பயன்படுத்த வேண்டும்.
★ ஒரு அடையாளத்தின் அர்த்தம் புரியாதபோது, அதன் செய்தியை விளங்கிக் கொள்ள முடியாததோடு அதற்கமைய செயற்படவும் முடியாது.

## வெளிப்பாட்டு இலக்கியம் உருவான சூழலும், அதன் குறிக்கோளும்

வெளிப்பாடு என்பதற்காகப் பயன்படுத்தப்படும் கிரேக்கச் சொல்லின் அர்த்தம் ''மறைந்துள்ள ஒன்று வெளிப்படுதல்'' என்பதாகும். இஸ்ரயேல் வரலாற்றில் இறைவாக்கினர் அருகிப் போன காலத்தில் துன்பங்கள், துயரங்கள், கலாபனைகள் ஏற்பட்டபோது, அவர்களைத் திடப்படுத்தி நம்பிக்கை ஊட்டுவதற்கு இறைசெய்தி அடையாளங்கள், குறியீடுகள் வழியாக கொடுக்கப்பட்டது.

உதாரணம் - தானியேல் நூல்



## 1. இருதன்மைகள்

நன்மைக்கும், தீமைக்குமிடையே போராட்டம் இருப்பதைக் காண்பிக்கிறது.

## 2. இறுதிக்காலம்

எதிர்காலத்தில் ஒருநாள் முடிவில்லாத நன்மைக்கும், முடிவில்லா தீமைக்குமிடையே நடைபெற இருக்கும் போராட்டத்தில் நித்திய நன்மை வெற்றி பெற்று, தீய சக்திகள் யாவும் அழிக்கப்பட்டு, நம்பிக்கை கொண்டோருக்கு வளமான காலம் உதயமாகும் என்பதை இறுதிக்காலம் குறித்து நிற்கிறது. இதனால் இக்காலத்தில் நமக்கு ஏற்படும் தொல்லைகள், துன்பதுயரங்கள் என்பவற்றைப் பொறுமையோடு ஏற்றுக்கொள்ள வேண்டும். தீய சக்தி நிச்சயமாகத் தோற்கடிக்கப்படும் என்பதையே இறுதிக்காலம் பற்றிய கொள்கை முன்வைக்கிறது.

வாழ்வில் நாம் எதிர்நோக்கும் இடையூறுகள், பிரச்சினைகளைப் பொறுமையோடு தாங்கிக் கொள்வோமாகில் இறுதியில் விண்ணகப் பேரின்ப வாழ்வை அனுபவிக்க முடியும் என்பதை மறந்து விடக்கூடாது.

## 3. அடையாளங்களின் பயன்பாடு

அடையாளங்களைப் பயன்படுத்துவதற்கான குறிக்கோள் இரண்டு ஆகும்.

I. எதிரிகளின் கைகளில் இவ்வாறான நூல்கள் அகப்பட்டால் எதிரிகளால் விளங்கிக் கொள்ள முடியாது. ஆகவே பயன்படுத்துவோர் பயப்பட வேண்டிய அவசியமில்லை. நல்லவர்கள் பாதுகாக்கப்படுவார்கள்.

II. அடையாளங்கள், குறியீடுகள் ஆழமாக புரிந்துக் கொள்ள முடியாத மறைபொருளை வெளிப்படுத்துவதால் அதனை விளங்கிக் கொள்ள முடியாது.

வெளிப்பாட்டு இலக்கியத்தில் வரும் அடையாளங்கள் சிலவற்றை அறிந்து கொள்வோம்.

## ஆட்டுக்குட்டி - இயேசுக்கிறிஸ்து (திருவெளிப்பாடு 5ம் அதிகாரம்)



4.4

அரக்கப்பாம்பு - (சாத்தான்)
*(திருவெளிப்பாடு- 12ம்,13ம் அதிகாரங்கள்)*



4.5

## நிறக்குறியீடுகள்



| | | |
|---|---|---|
| வெள்ளை | - | வெற்றி (திருவெளிப்பாடு 6 : 1 - 2) |
| சிவப்பு | - | யுத்தம், இரத்தம் சிந்துதல் (திருவெளிப்பாடு 6 : 3 - 4) |
| கறுப்பு | - | பஞ்சம் (திருவெளிப்பாடு 6 : 5 - 6) |
| வெளிறிய நிறம் | - | மரணம் (திருவெளிப்பாடு 6 : 7 - 8) |

## இலக்கக் குறியீடுகள்

| | | |
|---|---|---|
| 4 | பிரபஞ்சம் | (தானியேல் - 7 : 2) |
| 7 | நிறைவு | (திருவெளிப்பாடு 13 : 1) |
| 10 | முழுநிறைவு | (திருவெளிப்பாடு 17 : 3) |
| 12 | இஸ்ரயேல் / இறைமக்கள் | (திருவெளிப்பாடு 21 : 11 - 14) |

## 4. புனைபெயர்களை முன்வைத்தல்

எழுத்தாளர்களுக்குப் பாதுகாப்பை ஏற்படுத்தவும், நூலின் செய்தியை வாசகர்கள் ஏற்றுக்கொள்ளவும் வழிவகுக்கிறது. எழுத்தாளராக பிரபல்யமான எழுத்தாளரை அல்லது ஒரு முக்கிய நபரை குறிப்பிடுவதன் மூலம் செய்தியின் முக்கியத்துவத்தை உறுதிப்படுத்தவும் இலகுவாகச் செய்தியைப் பரப்பவும் உதவுகிறது.

(உ + ம்)

★ சீரியப் பேரரசரை 4ம் அந்தியோக்கஸ் அரசன் கி.மு167-164 க்கிடைப்பட்ட காலத்தில் ஆட்சி செய்தான். இக்காலத்தில் யூதமக்கள் பெருந்துன்பங்களை எதிர்நோக்கினர். துன்பப்பட்ட மக்களைத் திடப்படுத்த எழுதப்பட்ட நூலுக்கு கி.மு 580ல் வாழ்ந்த தானியேலின் பெயர் பயன்படுத்தப்பட்டது. அக்கால கட்டத்தில் பெருந்துன்பங்களை அனுபவித்த மக்களுக்கு தானியேல் நூல் எழுதப்பட்டது.

★ திருவெளிப்பாட்டுநூல் கி.பி 80 - 96இற்கு இடைப்பட்ட காலப்பகுதியில் தொமீசியன் எனும் உரோமைப் பேரரசனின் ஆட்சியில் கிறிஸ்தவர்கள் மிகவும் கொடிய வேதனைகளை எதிர்நோக்கிய காலத்தில் கிறிஸ்தவர்களை நம்பிக்கையில் உறுதிப்படுத்த எழுதப்பட்ட நூலாக ஏற்றுக்கொள்ளப்படுகிறது.

கிறிஸ்தவ விசுவாசிகள் உரோமைப் பேரரசனை, கடவுளாக வணங்கி வழிபடாததால் துன்புறுத்தல்களுக்கு உள்ளாக்கப்பட்டனர்.

இத் திருவெளிப்பாட்டு நூலின் பதில் எழுத்தாளராக திருத்தூதர் யோவான் முன்வைக்கப்பட்டுள்ளார்.

**செயற்பாடு**

1. திருவெளிப்பாட்டு இலக்கியத்தின் பண்புகள் நான்கு தருக.
2. திருவெளிப்பாட்டு இலக்கியத்தின் பண்புகள் நான்கினையும் சுருக்கமாக விளக்குக.



**வாழ்க்கைக்கு**

★ குடும்பத்தில் அனைவரும் ஆசீர்வதிக்கப்பட்ட சிலுவையை அல்லது வெரோணிக்கத்தை அணியுங்கள்.

★ மதச்சின்னங்களை நாகரீக அணிகலனாகப் பயன்படுத்தும் சமூகத்தின் பின் செல்லாமலிருக்க எச்சரிக்கை உள்ளவர்களாயிருங்கள்.

★ கிறிஸ்தவ அடையாளங்களின் அர்த்தத்தைப் புரிந்து கொண்டு அதன் மூலம் கிடைக்கும் செய்தி வழியாக இறையருளைப் பெற்றுக் கொள்ளுங்கள். தவறான வழியில் செல்லாமல், நம்பிக்கைக்கு சான்று பகர்வோம்.

# 5 ஞான இலக்கியம்

நிக்ஷனும் யூலியனும் ஒரே பாடசாலையில் கல்வி கற்கும் நண்பர்களாவர். படித்தபின் விரைவாகப் பணக்காரனாக வரவேண்டும் என்று ஆசைப்பட்ட நிக்ஷன் தவறான வழிகளில் பணம் சம்பாதிக்க முயன்று, அநீதியாக செயற்பட்டுப் பெரும் செல்வந்தன் ஆனான். யூலியன் தனக்குக் கிடைத்த தொழிலில் திருப்தியடைந்து அமைதியான வாழ்க்கை வாழ்ந்தான். ஆனால் எல்லாச் செல்வங்களையும் பெற்றிருந்த நிக்ஷன் தன் வாழ்வில் சந்தோஷத்தை அனுபவிக்க முடியாதிருப்பதை மிகக் கவலையுடன் யூலியனுக்கு வெளிப்படுத்தினான்.

இந்த இருவரில் நல்ல வழியைத் தேர்ந்துகொண்டவர் யார்? ஞானம் நிறைந்தவராக, அமைதியான வாழ்க்கைக்குரிய வழியைத் தெரிந்து கொண்ட யூலியனாலேயே நிம்மதியான வாழ்க்கையை வாழ முடிந்தது. அவரது வாழ்வில் மகிழ்ச்சி கிட்டியதும், வெற்றிகரமான வாழ்க்கை அமைந்ததும் நேரிய வழியை அவர் தேர்ந்து கொண்டதாலாகும். நன்மையிலிருந்து தீமையைப் பகுத்தறிந்து நன்மை செய்வதே ஞானம் ஆகும்.

கிபயோன் மலையுச்சியில் பிரதான பலிபீடம் அமைந்திருந்ததால் பலி செலுத்த சாலமோன் அரசன் அவ்விடத்திற்குப் போனான். அங்கிருந்த பலிபீடத்தின் மேல் ஆயிரம் எரிபலிகளைச் செலுத்தினான். அன்றிரவு கிபயோனில் ஆண்டவர் சலமோனுக்கு கனவில் தோன்றினார்.

| | |
|---|---|
| *இறைவன் :* | *உனக்கு என்ன வரம் வேண்டும்? கேள்''* |
| *சாலமோன் அரசன்:* | *''உம் அடியாராகிய என் தந்தை தாவீது, உமது பார்வையில் உண்மையுடனும், நீதியுடனும், நேரிய உள்ளத்துடனும் நடந்து கொண்டார். அதனால் நீர் அவருக்குப் பேரன்பு காட்டினீர். அந்தப் பேரன்பை அவருக்கு என்றும் காட்டிவந்து இன்று அவரது அரியணையில் வீற்றிருக்கும் மகனை அவருக்குத் தந்தீர். என் கடவுளாகிய ஆண்டவரே நீர் அடியேனை என் தந்தை தாவீதுக்குப் பதிலாக அரசனாக்கினீர். நான் செய்வதறியாத சிறுபிள்ளை. இதோ நீர் தெரிந்து கொண்ட திரளான மக்களிடையே அடியேன் இருக்கிறேன். அவர்கள் எண்ணிக் கணக்கிட முடியாத மாபெரும் தொகையினர். எனவே உம் மக்களுக்கு நீதி வழங்கவும், நன்மை, தீமையைப் பகுத்தறியவும் தேவையான ஞானம் நிறைந்த உள்ளத்தை அடியேனுக்குத் தந்தருளும். இல்லாவிடில் உமக்குரிய இம்மாபெரும் மக்களினத்துக்கு நீதி வழங்க யாரால் இயலும்?'' (சாலமோன் இவ்வாறு கேட்டது இறைவனுக்கு உகந்ததாய் இருந்தது)* |

இறைவன் : ''நீடிய ஆயுளையோ செல்வத்தையோ நீ கேட்கவில்லை. உன் எதிரிகளின் சாவையும் நீ விரும்பவில்லை. மாறாக நீதிவழங்கத் தேவையான ஞானத்தை மட்டுமே கேட்டிருக்கிறாய். இதோ நான் இப்பொழுது நீ கேட்டபடியே செய்கிறேன். உனக்கு நிகராக உனக்கு முன்னே எவரும் இருந்ததில்லை. உனக்குப் பின்னே இருக்கப் போவதும் இல்லை. அந்தளவுக்கு ஞானமும் பகுத்தறிவும் நிறைந்த உள்ளத்தை உனக்கு வழங்குகிறேன். இன்னும் நீ கேளாத செல்வத்தையும் புகழையும் உனக்குத் தருவேன். ஆகையால் உன் வாழ்நாள் முழுவதிலும் உனக்கு இணையான அரசன் எவனும் இரான். மேலும் உன் தந்தை தாவீதைப் போல் நீயும் என் வழிகளில் நடந்து, என் நியமங்களையும் விதிமுறைகளையும் கடைப்பிடித்து வந்தால், உனக்கு நீண்ட ஆயுளையும் வழங்குவேன்'' என்றார்.

*(1 அரசர் 3 : 5 - 14)*

சாலமோன் அரசன் உலக செல்வங்களையல்ல. ஞானத்தை மட்டும் கேட்டுச் செபித்தபடியால் கடவுள் அவருக்கு எல்லாச் செல்வங்களையும் கொடுத்தார் என திருவிவிலியம் விளக்குகிறது. ஞானம் என்பது புத்தியோ அல்லது பரீட்சையில் சித்தி பெறுவதோ அல்ல. மாறாக நன்மை தீமையைப் பகுத்தறிந்து நன்மையை வாழ்வில் கடைப்பிடித்து கடவுளுக்கு உகந்த நேரிய வாழ்க்கை வாழ்வதாகும். ஞானம் என்பது தூய ஆவியாரின் கொடைகளுள் ஒன்றாகும். எனவே ஞானம் என்ற கொடையைப் பெற்றுக்கொள்ள நாம் தினந்தோறும் செபிக்க வேண்டும்.

## ஞான இலக்கிய நூல்கள் என்றால் என்ன?

பழைய ஏற்பாட்டில் ஞானம் என்பதற்குப் பயன்படுத்தப்படும் எபிரேயச் சொல் ''ஹொக்மா'' என்பதாகும். அதன் பொருள் வெற்றிகரமாகவும் ஆண்டவர் மீது கொள்ளும் அச்சத்தாலும் திருச்சட்டத்தின்படி வாழ்க்கை நடத்தக் கிடைக்கும் ஆற்றலாகும்.



## குடும்ப மற்றும் கோத்திர ஞானம்

*குடும்பம் மற்றும் கோத்திரம் பாதுகாக்கப்படுவதற்காக உள்ள சட்டதிட்டங்கள், சம்பிரதாயங்கள், அறிவுரைகள் இதிலடங்கும். இந்த ஞானம் குடும்பத்தை மற்றும் கோத்திரத்தைப் பாதுகாக்க வழிகாட்டும் (சீராக் 3 ஆம் அதிகாரம்).*

## அரச சபை ஞானம்

*அரச நிர்வாகம் மற்றும் ஏனைய நிர்வாகத் துறைகளை இலக்காகக் கொண்டு, இளைஞர்களைப் பயிற்றுவிப்பது இதன் குறிக்கோளாகும். இது அநேகமாக அரச சமூகத்தினருக்கு வழங்கப்படும் அறிவுரையாகும். (சாலமோனின் ஒழுக்கம் 6 : 1 - 11)*

## ஆன்மீக ஞானம்

*வாழ்க்கையின் அர்த்தம் அதன் சிக்கல்கள், தீர்வுகள் பற்றிய கருத்தியலை (எண்ணக் கருக்களை) உள்ளடக்கிய விளக்கமாகும் (யோபு, சபை உரையாளர்)*

## அன்றாட வாழ்க்கை பற்றிய ஞானம்

*ஒருவர் அன்றாட வாழ்க்கையில் யதார்த்தங்களுக்கு முகங்கொடுக்கத் தேவையான பல்வேறு நிகழ்வுகள் அறிவுரைகள் இதிலடங்கும்.*
*(நீதிமொழிகள் 6 - 25ம் அதிகாரம்)*

## ஞான இலக்கியத்தில் அடங்கும் நூல்கள்

1. *யோபு*
2. *திருப்பாடல்கள்*
3. *நீதிமொழிகள்*
4. *சபை உரையாளர்*
5. *இனிமை மிகு பாடல்*
6. *சாலமோனின் ஞானம்*
7. *சீராக்கின் ஞானம்*

## ஞானம் பற்றிய போதனைகள் முன்வைக்கப்பட்டுள்ள இலக்கிய அமைப்புக்கள்

*பழைய ஏற்பாட்டில் ஞானம் பற்றிய கருத்துக்கள் வெவ்வேறு முறைகளில் முன்வைக்கப்பட்டுள்ளன. பழமொழிகள் (நீதிமொழிகள்), அறிவுரை (சீராக்கின் ஞானம்), கதைகள் (யோபு), கற்பனைகள் (சபை உரையாளர்), பாடல்கள் (இனிமைமிகு பாடல்) போன்றவை அவற்றுள் சிலவாகும். ஞான இலக்கியத்தினுள் இவ்வாறான பெறுமதி வாய்ந்த இலக்கிய அம்சங்கள் அமைந்துள்ளன.*

## ஞான இலக்கியத்தின் குறிக்கோளும், ஆன்மீகமும்

ஞான இலக்கியத்தின் பிரதான குறிக்கோளாவது, அறிவுசார்ந்த முயற்சி களை விட, நீதி நேர்மையாகவும், சரியான முறையிலும் மக்களை ஊக்குவித்து, இறைவனுக்குப் பிரியமான வாழ்க்கை நடத்த அவர்களுக்கு வழிகாட்டுவதாகும். இங்கு சமூக நிர்வாகம் மற்றும் வாழ்க்கையின் குறிக்கோள், அதன் எல்லைகள் என்பவை தெளிவுபடுத்தப்பட்டுள்ளன. இந்த விடயங்கள் கடவுளுக்கு பிரியமான அர்த்தமுள்ள வாழ்க்கை வாழ உறுதுணையாக அமையும் என்பதில் எவ்வித சந்தேகமும் இல்லை.

எனவே ஞானமுள்ள முறையில் செயற்படுவதென்பது, நாளாந்த வாழ்வில் நல்லவற்றை மட்டும் தெரிந்தெடுத்து வாழுகின்ற வாழ்க்கையாகும். இறைவல்லமையினூடாக மாத்திரம் அவ்வாறு வாழ முடியும் என்பதால் தினந்தோறும் இறைவேண்டலில் நிலைத்திருப்போம்.

*''முழு மனத்தோடு ஆண்டவரை நம்பு, உன் சொந்த அறிவாற்றலைச் சார்ந்து நில்லாதே, நீ எதைச் செய்தாலும் ஆண்டவரை மனதில் வைத்துச் செய், அப்பொழுது அவர் உன் பாதைகளைச் செம்மையாக்குவார்.''* *(நீதிமொழிகள் 3 : 5 - 6)*

**செயற்பாடு**

1. ஞான இலக்கியத்துள் அடங்கும் ஏழு நூல்களையும் தருக.
2. ஞானத்தின் பிரிவுகள் நான்கையும் எழுதுக.
3. உமது வாழ்வில் ஞானமுள்ள விதத்தில் செயற்பட்ட சந்தர்ப்பங்கள் ஐந்து தருக.



**வாழ்க்கைக்கு**

நாளாந்த குடும்ப செபத்தில் ஞானத்தைப் பெற்றுக் கொள்ள குடும்பமாக இறைவேண்டல் செய்யுங்கள்.

★ எதையாவது சொல்வதற்கும், செய்வதற்கும் முன்னர் நன்கு சிந்தித்து செயற்பட பழகிக் கொள்க.

★ நாளாந்த வாழ்வில் முடிவுகளை எடுக்கும் போது ஞானத்துடன் செயற்பட முயற்சிக்கவும்.

★ இரவு நித்திரைக்குச் செல்லும் முன் நீங்கள் சொன்னவை செய்யாதவை பற்றிச் சிந்தித்து தவறுகளைத் திருத்த முளயற்சிக்கவும்.

# 6 பாஸ்கா மறைபொருள்

## இயேசுவின் திருப்பாடுகள் (லூக்கா 22 : 54 - 23 : 25)



6.1 இயேசுவின் பாடுகள்

காட்டிக் கொடுக்கப்பட்ட இயேசு யூதர்களால் கைதுசெய்யப்பட்டு தலைமைக் குருவின் வீட்டிற்கு அழைத்துச் செல்லப்பட்டார். அவ்வேளை திருத்தூதர்கள் பயத்தினால் தப்பியோடினாலும் பேதுரு இயேசுவைப் பின்தொடர்ந்து தலைமைக்குருவின் வீடுவரை சென்றார். சிலமணி நேரங்களுக்கு முன் பேதுருவைப் பற்றி இயேசு கூறிய வார்த்தைகள் இங்குதான் நிறைவேறியது.

மூன்றாம் முறையும் இயேசுவைத் தெரியாது எனப் பேதுரு மறுதலித்தபோது இயேசு அவரைத் திரும்பிப் பார்த்தார். அவரது கனிவான பார்வையில் அன்பின் ஆழம் தெரிந்தது. அதைத் தாங்கிக் கொள்ள முடியாத பேதுரு தன் தவறை உணர்ந்து, வெளியே சென்று மனம் நொந்து அழுதார்.

இவ்வேளையில் இயேசுவைப் பிடித்தவர்கள் அவரைக் கேலி செய்து தாக்கினார்கள். விடியற்காலையில் இயேசுவை அவர்கள் யூதர்களின் மூப்பர் சங்கத்தின் முன் நிறுத்தினார்கள். அவர்களின் பிரதான வினாவாக அமைந்தது ‘‘நீ மெசியாதானா’’? என்பதாகும். அதற்கு இயேசு ‘‘இது முதல் மானிட மகன் வல்லவராம் கடவுளின் வலப்புறத்தில் வீற்றிருப்பார்’’ எனப் பதிலளித்தார். இந்தப் பதிலால் கோபமுற்ற அவர்கள் இயேசுவை ஆளுநர் பிலாத்துவிடம் அழைத்துச் சென்றனர்.

அங்கு அவர்கள் ''இவன் நம் மக்கள் சீரழியக் காரணமாக இருக்கிறான். சீசருக்கு கப்பம் கட்டக்கூடாது என்கிறான்; தானே மெசியாவாகிய அரசன் என்று சொல்லிக்கொள்கிறான், எனவும் குற்றஞ் சுமத்தினர். விசாரணையின் பின் ஆளுநர் பிலாத்து இயேசுவைக் குற்றமற்றவர் எனக் கூறினாலும் மக்கள் கூட்டம் மென்மேலும் அவர் மேல் குற்றம் சுமத்தியது.

இயேசு, ஏரோது அந்திப்பாசின் ஆட்சிக்குட்பட்ட கலிலேயா பகுதியைச் சேர்ந்தவர் என அறிந்து கொண்ட பிலாத்து, ஏரோது அந்த நாட்களில் எருசலேமில் இருந்தபடியால் இயேசுவை அவனிடம் அனுப்பி வைத்தார். ஆயினும் இயேசு ஏரோதுவின் எந்தக்கேள்விகளுக்கும் பதிலளியாது மௌனமாய் இருந்தார். எனவே ஏரோது இயேசுவை ஏளனம் செய்து, பளபளப்பான ஆடையை அணிவித்து, மீண்டும் பிலாத்துவிடம் அனுப்பினான். பிலாத்து, இயேசு எந்தக் குற்றமும் செய்யாதவர் என மக்களுக்குத் தெளிவுபடுத்தினான். இருப்பினும் மக்களின் வேண்டுகோளுக்கிணங்க பரபாஸ் எனும் சிறைக்கைதியை விடுதலை செய்து அவனுக்குப் பதிலாக இயேசுவை சிலுவையில் அறையத் தீர்ப்பிட்டான்.

## இயேசுவின் மரணம் (லூக்கா 23 : 26 -56)



**6.2 இயேசுவின் மரணம்**

இயேசு தம் தோள்மீது சுமத்தப்பட்ட சிலுவையை சுமந்து கொண்டு செல்ல உதவியவர் சீரேன் ஊர் சீமோன் ஆவார். பெருந்தொகையான மக்கள் அவர் பின்னால் சென்றனர். மண்டையோடு எனும் இடத்திற்கு வந்ததும், படைவீரர் இயேசுவையும், அவரது இரண்டு பக்கங்களிலும் இரு கள்வரையும் சிலுவையில் அறைந்தனர். அவ்வேளை இயேசு ''தந்தையே இவர்களை மன்னியும், ஏனெனில் தாங்கள் செய்வது இன்னதென்று அவர்களுக்குத் தெரியவில்லை'' எனக் கூறினார்.

இயேசு சிலுவையில் தொங்கிக் கொண்டிருந்த வேளையில் அவர்கள் இயேசுவை ஏளனம் செய்தல், புளித்த திராட்சை இரசத்தைக் குடிக்கக் கொடுத்தல், ஆடைகளைத் தம்மிடையே பகிர்ந்து கொள்ள சீட்டுப் போடுதல், இவன் யூதரின் அரசன் (INRI) எனக் காண்பிக்க அவ்வசனத்தை ஒரு பலகையில் எழுதித் தொங்கவிடல் போன்ற செயல்களைச் செய்தனர்.

இயேசுவின் இருபக்கங்களிலும் அறையப்பட்ட கள்வர்களில் ஒருவன் அவரை ஏளனம் செய்த அதேவேளை மற்றவன் ''இயேசுவே நீர் ஆட்சியுரிமை பெற்று வரும்போது என்னையும் நினைவிற் கொள்ளும்'' என்று கூறினான். ''இன்று நீ என்னோடு பேரின்ப வீட்டில் இருப்பீர் என உறுதியாக உமக்குச் சொல்லுகிறேன்'' என்ற உறுதி வாய்ந்த பதில் இயேசுவிடமிருந்து அவனுக்குக் கிடைத்தது. இறுதியாக ''தந்தையே உம் கையில் என் உயிரை ஒப்படைக்கிறேன்'' எனக்கூறி அவர் உயிர்விட்டார். அந்தவேளை கதிரவன் இருண்டு நாடு முழுவதும் இருள் உண்டானது. தேவாலயத்தின் திரைச்சீலை இரண்டாகக் கிழிந்தது.

இயேசுவின் இறந்த உடலை சிலுவையிலிருந்து இறக்கி அடக்கம் செய்ய முன்வந்தவர் அரிமத்தியா ஊர் யோசேப்பு என்பவராவார். அவர் பிலாத்துவிடம் சென்று அனுமதி பெற்று இயேசுவின் உடலை அடக்கம் செய்தார்.

## இயேசுவின் உயிர்ப்பு (யோவான் 20 : 1 - 8)



**6.3 இயேசுவின் உயிர்ப்பு**

இதன்மூலம் ஆதாம், ஏவாள் செய்த பாவத்தின் பின் கடவுள் வாக்களித்த மீட்பு மனித குலத்திற்கு உரித்தானது. இயேசு இறந்து மூன்றாம் நாள் உயிர்த்தெழுந்தார். வாரத்தின் முதல்நாள் காலை வேளையில் இயேசுவை அடக்கம் செய்த கல்லறைக்கு சென்ற மகதலா மரியா இயேசுவின் உயிர்ப்பிற்கு முதல் சாட்சி ஆவார்.

### சீடர்களுக்குக் காட்சி கொடுத்தல் (யோவான் 20 : 19 - 29, லூக் 24 : 15 - 35 )

★ *பாஸ்கா ஞாயிறன்று சீடர்கள் இருவர் எருசலேமிலிருந்து எம்மாவு என்னும் ஊருக்குச் செல்கையில் இயேசு அவர்களுக்குக் காட்சி கொடுத்தார். வழியில் அவர்களுக்குத் தம்மைக் குறித்த இறைவாக்குகளைத் தெளிவுபடுத்தினாலும் அவர்கள் இயேசுவை அறிந்து கொள்ளவில்லை. எனினும் அவர்கள் உணவு உட்கொள்ள அமர்ந்தபோது, இயேசு அப்பத்தை எடுத்து ஆசீர்வதித்து பிட்டுக் கொடுத்த வேளையில் அவரை அறிந்து கொண்டார்கள்.*

★ *பாஸ்கா ஞாயிறன்று மாலையில் இயேசு திருத்தூதருக்குத் தோன்றி ''உங்களுக்கு அமைதி உரித்தாகுக'' எனக்கூறி அவர்களைத் திடப்படுத்தினார். அவர்கள் மேல் ஊதி ''தூய ஆவியானவரைப் பெற்றுக்கொள்ளுங்கள்'' எனக்கூறி பாவங்களை மன்னிக்கும் அதிகாரத்தையும் அவர்களுக்கு கொடுத்தார்.*

★ *உயிர்த்த இயேசு திருத்தூதருக்கு காட்சி கொடுத்த வேளை திருத்தூதர் தோமா அங்கிருக்கவில்லை. பின்னர் திருத்தூதர் மூலம் இயேசு காட்சியளித்தது பற்றி கேள்விப்பட்டபோதிலும், அவர் அதை நம்பவில்லை. எட்டு நாட்களுக்குப் பின் மீண்டும் ஆண்டவர் இயேசு காட்சி கொடுத்து தோமாவின் அவநம்பிக்கையை நீக்கினார். அப்போது ''என் ஆண்டவரே என் தேவனே'' என தோமா தன் இறை நம்பிக்கையை வெளிப்படுத்தினார்.*

### புதிய வானம், புதிய பூமி

| | | |
|---|---|---|
| தொடக்கநூல் *1 : 1*<br>''தொடக்கத்தில் கடவுள் விண்ணுலகையும் மண்ணுலகையும் படைத்தார்'' | திருவெளிப்பாடு *21 : 1*<br>'பின்பு, நான் புதியதொரு விண்ணகத்தையும் புதியதொரு மண்ணகத் தையும் கண்டேன்.முன்பு இருந்த விண்ணகமும், மண்ணகமும் மறைந்து விட்டன' | திருவெளிப்பாடு *22 : 13*<br>''அகரமும், னகரமும், முதலும் இறுதியும், தொடக்கமும் முடிவும் நானே'' |

உலகத் தொடக்கத்தில் கடவுள் விண்ணையும் மண்ணையும் உண்டாக்கினார். மனிதன் உயிர்வாழத் தேவையான அனைத்தையும் அவர் மிகவும் பயனுள்ள முறையில் சிறப்பாகப் படைத்தார். இந்த வானம், பூமியில் நல்லவர்களாக வாழும் மனிதருக்கு இறைவன் விண்ணக வாழ்க்கை என்னும் புதிய வானத்தையும், புதிய பூமியையும் ஆயத்தம் செய்துள்ளார். அதற்கான முன்னடையாளமாக இருப்பது இயேசுவின் உயிர்ப்பாகும். எனவே இயேசுவைப் போல தூய வாழ்க்கை வாழ்ந்து அந்த நித்திய வாழ்வை உரிமையாக்கிக் கொள்ள எம்மை ஆயத்தம் செய்து கொள்ள வேண்டும்.

எல்லா மகிமையும் நிறைந்த விண்ணரசில் உயிர்த்த ஆண்டவர் இயேசுவைக் காண்பதற்கு நாம் பேறுபெற்றவர்கள் ஆக வேண்டும். பாவச் செயல்களைத் தவிர்த்து செப, தவ, தியாக வாழ்க்கை வாழ்ந்து, அருளடையாளங்களைப் பெற்று புதியவானம், புதிய பூமிக்குள் நுழைவதற்கு தகுதியுள்ளவர்களாக எம்மை மாற்றிக் கொள்ள முயலுவோமாக.

**செயற்பாடு**

1. சிலுவைப்பாதையில் இயேசுவின் பாடுகள், மரணம் உயிர்ப்பைத் தியானிக்கும் நிலைகளை எழுதுக.
2. புதிய வானம், புதிய பூமியில் புதுவாழ்வைப் பெற்றுக் கொள்ளப் பாடசாலை மாணவரான நீர் செய்யக்கூடிய நற்செயல்கள் ஐந்து தருக.
3. தவறிழைப்போர் திருந்திவாழ இறைவனிடம் மன்னிப்பு வேண்டி செபம் ஒன்று ஆக்குக.



**வாழ்க்கைக்கு**

கிறிஸ்தவ மாணவனான நான் இயலுமான எல்லாச் சந்தர்ப்பங்களிலும் திருப்பலியில் பங்கு பற்றி, நற்கருணை ஆண்டவரை உட்கொண்டு, முடிவில்லா வாழ்வை உரிமையாக்கிக் கொள்ள முயற்சிப்பேன்.

# 7 தொடக்க கிறிஸ்தவ சபை



**7.1 மரியா, திருத்தூதர்கள் மீது தூய ஆவியின் வருகை**

## பெந்தக்கோஸ்து (திப 2:1-13)

பாஸ்காவின் பின்னர் யூத மதத்தவர்களுக்கு ஐம்பது என்னும் பொருளுடைய பெந்தக்கோஸ்து ஒரு பிரதான திருவிழாவாக இருந்தது. இது இறைவனுக்கு நன்றி கூறும் ஒரு திருவிழாவாகும். தானிய அறுவடையின் முதற்பலனை ஒப்புக்கொடுத்து யூதர்கள் இறைவனுக்கு இத்திருவிழாவின்போது நன்றி கூறியதோடு, அவர்கள் சீனாய் மலை உச்சியில் பத்துக் கட்டளைகளைப் பெற்றுக் கொண்டதையும் நினைவு கூர்ந்தனர். இத்திருவிழாவில் பங்குபற்றப் பல்வேறு பகுதிகளிலும், பிரதேசங்களிலும் வாழ்ந்த யூதர்கள் எருசலேம் தேவாலயத்திற்கு யாத்திரையாகச் சென்றனர்.

இயேசு விண்ணேற்றம் அடைய முன்னர் தமது சீடர்கள், திருத்தூதர்கள் மீதும் தூய ஆவியை அனுப்புவதாக வாக்களித்தார். அவ்வெதிர்பார்ப்புடன் மரியா உட்பட சீடர்கள் இயேசு விண்ணேற்பு அடைந்த நாள் முதல் 10 நாட்களாக செபத்தில் நிலைத்திருந்தனர். பெந்தக்கோஸ்து நாளில் இவ்வாறு செபித்துக் கொண்டிருந்த இடத்தில் திடீரென்று கொடுங்காற்று வீசுவது போன்று ஓர் இரைச்சல் வானத்திலிருந்து உண்டாக அவர்கள் அமர்ந்திருந்த வீடு முழுவதும் ஒலித்தது. மேலும் நெருப்புப் போன்ற பிளவுற்ற நாவுகள் ஒவ்வொருவர் மீதும் வந்து அமர்ந்ததை அவர்கள் கண்டார்கள். *(திப 2:1-8)*

இயேசு வாக்குப் பண்ணிய தூய ஆவியின் வருகையை வெளிப்படுத்துவதாக அவ்வடையாளங்கள் அமைந்தன. தூய ஆவியால் நிரப்பப்பட்ட சீடர்கள் அவ்வல்லமையினால் வெவ்வேறான மொழிகளில் பேசத் தொடங்கினார்கள். இவ்வேளை சீடர்களின் வாழ்க்கையில் மாபெரும் மாற்றம் ஏற்பட்டது. திடம் கொண்டவர்களாக இறைவார்த்தைக்குச் சான்று பகர்ந்தனர்.

## பெந்துக்கோஸ்து நாளில் பேதுருவின் அருளுரையும் அதன் பிரதிபலன்களும் (திப 2 : 14 - 41)

எருசலேமில் தூய பேதுருவின் அருளுரையைக் கேட்ட அனைவரும் ஆச்சரியப்பட்டனர். ஏனெனில் அவர் பாமரர் எனக் கருதப்பட்ட கலிலேயாப் பகுதியைச் சேர்ந்தவராவர். ஆயினும் அன்றைய நாளில் தூய ஆவியால் நிரப்பப்பெற்ற திருத்தூதர்கள் முதிர்ச்சியடைந்த கிறிஸ்தவர்களாக அச்சமின்றி தமது மறைத்தூதுப்பணியை ஆரம்பித்தார்கள். பெந்தக்கோஸ்து நாளில் தூய பேதுரு தமது அருளுரையில் ''இயேசு கடவுளின் மகன், இஸ்ரயேல் மக்கள் அவரை சிலுவையில் அறைந்து கொன்றார்கள். ஆயினும் கடவுள் இந்த இயேசுவை உயிர்த்தெழச் செய்தார். அவர் கடவுளின் வலது பக்கத்தில் வீற்றிருக்கிறார்'' என எவ்வித அச்சமுமின்றி வெளிப் படுத்தினார் (திப 2:14-36)

தூய பேதுருவின் இச்செயல் இன்று இயேசுவுக்குச் சான்று பகர பின் வாங்குவோருக்கு பெரும் சவாலாகும். தூய ஆவியைப் பெற்ற ஒருவரை ஒரு படைவீரருக்கு ஒப்பிடலாம். படைவீரர் சிறந்த ஆயத்தத்தோடும், பயிற்சியோடும் ஆயுதம் தாங்கி இருப்பது போல், தூய ஆவியினால் நிரப்பப்பெற்ற கிறிஸ்தவனும் நம்பிக்கைக்கு எதிராக வரும் சவால்களை வெற்றி கொள்ள சிறந்த ஆயத்தத்தோடும் படைக்கலங்களோடும் இருக்க வேண்டும். (எபே 6:13-17). தூய பேதுருவின் இவ் அருளுரையின் பின்பு மனம் வருந்தித் திருமுழுக்குப் பெற்றோர் 3000பேர் ஆகும். அதனால் ''பெந்தக்கோஸ்து'' நாள் திருச்சபையின் பிறந்த நாளாகும்.

மேலும் தூய ஆவியின் வழி நடத்துதலால் தூய பேதுரு பிற இனத்தவரான இத்தாலியா எனப்பட்ட படைப்பிரிவின் நூற்றுவர் தலைவர் கொர்னேலியு உட்பட அவரின் குடும்பத்தினருக்கு இயேசுவைப் பற்றிய நற்செய்தியைப் போதித்தார். அவர்கள் நம்பிக்கை கொண்டு திருமுழுக்குப் பெற்றனர்.(திப 10:1-8,44-48).

## தொடக்க திருச்சபையின் பண்புகள் (திப 2 : 42 - 47, திப 4 : 32 - 37)

இவ்வாறு தூய ஆவியின் வழி நடத்தல் மூலம் வளர்ச்சி பெற்ற திருச்சபை பின்வரும் சிறப்புப் பண்புகளைக் கொண்டிருந்தது.

1. திருத்தூதர்களின் போதனைகளில் நிலைத்திருத்தல்.
2. நட்புறவு
3. அப்பம் பிட்குதல்
4. இறைவேண்டல்

இப்பண்புகள் காரணமாகத் திருச்சபையில் சேர்ந்தவர்களின் எண்ணிக்கை மென்மேலும் பெருகி வளர்ந்தது. தொடக்க திருச்சபை ஆரம்பித்த 'பந்தி பரிமாறும் பணி' தொடர்பாக பிரச்சினை எழுந்தது. இதற்குத் தீர்வு காணும் முகமாக பின்வரும் பண்புகளைக் கொண்ட திருத்தொண்டர்களை நியமித்தல் பொருத்தமானதாகக் காணப்பட்டது. (திப 6 : 1 - 7)

1. நற்சான்று பெற்றவர்கள்
2. தூய ஆவி அருளும் வல்லமை பெற்றவர்கள்
3. ஞானம் நிறைந்தவர்கள்

திருத்தூதர்கள் கைகளை, திருத்தொண்டர்கள் தலைமீது வைத்து, இறைவனிடம் வேண்டி பொறுப்புக்களைக் கையளித்தனர். சிறப்பாகப் பந்தியில் பரிமாறும் பணியை அவர்களிடம் ஒப்படைத்து எவ்வித இடையூறும் இன்றித் நற்செய்தி போதிக்கும் பணியைத் தொடர்ந்து ஆற்றினர்.

## தூய ஸ்தேவானின் சான்று (திப 6:8-15)

தூய ஸ்தேவான் ஒரு திருத்தொண்டராகப் பணியாற்றியது மட்டுமல்லாமல் நற்செய்தியையும் போதித்தார். அவரைக் கல்லால் எறிந்து கொன்றார்கள். அவரே திருச்சபையில் முதல் மறைசாட்சியாவார். (தி.ப.7:54-60)

## தூய யாக்கோபு (திப12:1-2)

12 திருத்தூதர்கள் மத்தியில் முதல் மறைசாட்சியானவர் தூய யாக்கோபு இவர் தூய சந்தியாகு எனவும் அழைக்கப்படுகிறார். ஏரோது (அகிரிப்பா I) என்பவரால் வாளால் வெட்டிச் சிரச்சேதம் செய்யப்பட்டார். திருத்தூதர்கள் முதிர்ச்சியடைந்த கிறிஸ்தவர்களாக, உண்மையாகவே கிறிஸ்துவின் படைவீரர்களாகத் திகழ்ந்தமையும், மறைசாட்சிகளாக மாற சக்தி கிடைத்ததும் அவர்கள் தூய ஆவியால் நிரப்பப்பட்டமையேயாகும். அதேபோல் நாம் உறுதிப்பூசுதல் பெறும்போது அவ்வாறு எம்மிலும் தூய ஆவியின் வரங்கள் அருளப்படுவது, நாம் எதிர்கொள்ளும் சவால்களுக்கு முகங்கொடுத்து நம்பிக்கைக்கு சான்று பகர்வதற்கே ஆகும்.

## செயற்பாடு

1. தூய பேதுருவின் முதல் அருளுரையில் அடங்கும் விடயங்கள் 3 எழுதுக.
2. தூய ஆவியின் வருகையின்போது இடம்பெற்ற விசேட அம்சங்களை ஒழுங்குமுறையில் எழுதுக.
3. ''பெந்தக்கோஸ்து'' எனும் சொல்லின் பொருளை எழுதுக.
4. ஆரம்ப திருச்சபையில் காணப்பட்ட பண்புகளை அட்டவணைப்படுத்துக.
5. திருத்தூதர்கள் ஏன் திருத்தொண்டர்களை நியமித்தார்கள்?
6. தூய ஆவியின் வல்லமையைப் பெற்ற நீர் நம்பிக்கைக்குச் சான்று பகர்ந்த சந்தர்ப்பம் ஒன்று தருக.



**வாழ்க்கைக்கு**

★ இயேசுவின் படைவீரர்களாக உலகத்தவர் முன்பு அவருக்கு சான்று பகர்வோம்.

★ பிறர் நலமுடையவர்களாக மக்களின் நலன் கருதி வேலை செய்வோம்.

★ எம்மிடம் உள்ளவற்றை இல்லாதவர்கள், இயலாதவர்களோடு பகிர்ந்து கொள்வோம்.

# 8 தூய பவுல்

1. பயன்படுத்தும் இறைவா (2)
   பதரான என்னை பயனுள்ள கருவியாய்
   பயன்படுத்தும் இறைவா

2. எனது கரங்கள் உம் பணி புரிய
   எனது கால்கள் உம் வழி செல்ல
   எனது கண்கள் உமைப்போல் பார்க்க (2)
   எனது நாவும் உம் புகழ் பாட

3. எனது செவிகள் உம்மொழி கேட்க
   எனது மனமும் உம்மையே நாட
   எனது மனமும் உம்மையே நினைக்க (2)
   எனது இதயம் உம்மில் அக்களிக்க

4. எனது இன்பம் பிறருக்கு நிறைவாய்
   எனது வாழ்வு பிறருக்கு ஒளியாய்
   எனது தியாகம் பிறருக்கு வாழ்வாய் (2)
   எனது சாவு பிறருக்கு வாழ்வாய்



8.1 தூய பவுல் அடியார்

இறைவன் ஒவ்வொருவருக்கும் வெவ்வேறு அழைப்புக்களைக் கொடுத்து அவருடைய திட்டத்தை நிறைவேற்றுகின்றார். அவ்வாறு அழைப்புப் பெற்ற தூய பவுல் (சவுல்) மேற்குறிப்பிடப்பட்ட பாடலில் கூறப்பட்டுள்ளவாறு தம் முழு வாழ்வையுமே இறைபணிக்காக அர்ப்பணித்தார்.

பெஞ்சமின் கோத்திரத்தைச்சேர்ந்த தர்சு நகரில் பிறந்த அவர் தனது தந்தையின் உரோமைக் குடியுரிமை காரணமாக விசேட உரிமைகளைப் பெற்றிருந்தார். எருசலேமில் புகழ்பெற்ற திருச்சட்ட ஆசிரியராகிய கமாலியேலிடத்தில் கல்விகற்றார். அவருக்கு யூத மதச்சட்டங்கள், ஒழுங்குகள் தொடர்பான ஆழ்ந்த அறிவு இருந்தது. தூய பவுல் கிறிஸ்துவின் அழைப்பைப் பெறமுன் யூத மதத்தின் மேல் கொண்ட தீவிர பற்றினால் கிறிஸ்துவை பின்பற்றியவர்களைத் துன்புறுத்தினார். தூய ஸ்தேவானைக் கல்லால் எறிந்து கொன்றபோது சவுலும் உடந்தையாக இருந்தார் என திப 8:1-3 பகுதிகளில் குறிப்பிடப்படுகிறது. அதுவரை தூய பவுல் உயிருள்ள கிறிஸ்துவை அறிந்திருக்கவில்லை.

ஒரு நாள் தமஸ்கு நகர தொழுகைக் கூடங்களில் கிறிஸ்தவர்களை கைது செய்வதற்காக தலைமைக்குருவிடம் அனுமதிக் கடிதங்களை கேட்டு வாங்கினார். இவ்வாறு அவர் புறப்பட்டுச் சென்று தமஸ்குவை நெருங்கியபோது திடீரென வானத்திலிருந்து தோன்றிய ஓர் ஒளி அவரைச் சூழ்ந்து வீசியது. அவர் தரையில் வீழ்ந்தார்.

அவர் மீண்டும் எழுந்தபோது அவரால் எதையும் பார்க்க முடியவில்லை. அப்போது உயிர்த்த கிறிஸ்து அவருடன் உரையாடி அவரது வாழ்க்கையை மாற்றினார். தமஸ்கு நகரிலிருந்த 'அனனியா' என்னும் பெயருடைய சீடர் மூலமாக சவுல் திருமுழுக்குப் பெற்றதோடு, மீண்டும் பார்வையை பெற்றுக்கொண்டார். (திப 9:1-9) அது முதல் இறைவெளிபாட்டின் அனுபவத்தைப் பெற்ற தூய பவுல் ஒரு தூதுரைப்பணியாளன் ஆனார். திருச்சபையைப் பரவச் செய்ய சின்ன ஆசியா முதல் கிரேக்கம், உரோமை வரை பயணம் செய்து மிகக் கஷ்டமான பணியில் ஈடுபட்டார். **பிற இனத்தாரின் திருத்தூதர்** என்ற பெயரையும் பெற்றுக் கொண்டார். மறைத்தூதுப் பயணங்களில் அவர் பலவித இடையூறுகளுக்கும், சவால்களுக்கும் துன்பதுயரங்களுக்கும் முகங்கொடுக்க நேர்ந்தது. சிறையிலிடப்படுதல், கல்லால் எறியப்பட்டு நகரத்திற்கு வெளியே இழுத்துக்கொண்டு போகப்படுதல், யூதர்களின் எதிர்ப்புக்கு ஆளாதல் ஆகிய சவால்களுக்கு தூய பவுல் தூய ஆவியின் வழிகாட்டுதலின் மூலம் முகங்கொடுத்து வெற்றி பெற்றார்.

தூய பவுல் நிறுவிய சபைகளில் எழுந்த பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பதற்கும், கிறிஸ்தவ நம்பிக்கையோடு கூடவே கிறிஸ்தவ கடமைகளைக் கற்றுக்கொடுப்பதற்கும், கிறிஸ்துவில் புதுவாழ்வை ஏற்படுத்துவதற்கும், கிறிஸ்துவின் இரண்டாம் வருகையைப் பற்றி எழுந்த வினாக்களுக்கு விடையளிக்கவுமே **'திருமுகங்களை'** (திருமடல்களை) எழுதி தமது சபைகளுக்கு அனுப்பினார்.

## தூய பவுலின் தூதுரைப் பயணங்கள்

## முதலாவது தூதுரைப் பயணம் (திப 13 : 4 – 14 : 28)



கி.பி 47ஆம் ஆண்டளவில் பயணத்தை தொடங்கினார். பயணத் தோழர்களாக தூய பர்னபா, தூய யோன்மாற்கு ஆகியோர் இணைந்து கொண்டனர்.

சீரியா → அந்தியோக்கியா → செலுக்கியா → சாலமி → பாப்போ
பெருகை → அத்தாலியா → பிசிதிய அந்தியோக்கியா →
இக்கோனியா → லிஸ்திரா → தெருபை

இந்த இடங்களில் சென்று மறையைப் போதித்து கிறிஸ்தவ சபைகளை நிறுவி மூப்பர்களை நியமித்தார்.

## இரண்டாம் தூதுரைப் பயணம்(திப 15: 36 - 18: 23)




கி.பி 50 - 52 ற்கு இடையில் தூய பவுல் சீலாவுடன் இப்பயணத்தை ஆரம்பித்தார். பின்னர் திமோத்தேயுவும், தூய லூக்காவும் இதில் இணைந்து கொண்டார்கள்.

சீரிய அந்தியோக்கியா → தர்சு → தெருபை → லிஸ்திரா →
இக்கோனியா → பிசிதிய அந்தியோக்கியா → துரோவா →
பிலிப்பி → தெசலோனிக்கா → பெரேயா → ஏதென்ஸ்
கொரிந்து → எபேசு → எருசலேம்

## *மூன்றாவது தூதுரைப் பயணம் (திப 18 : 24 - 21 : 17)*




கி.பி 53 - 57 ற்கு இடையில் தூய பவுல் மூன்றாவது பயணத்தை மேற்கொண்டார்.

சீரிய அந்தியோக்கியா → தெருபை → லிஸ்திரா → இக்கோனியா →
எபேசு → துரோவா → ஆசேர் → மித்திலேன் → கியு
ஏதென்ஸ் → மிலேத்து → எபேசு → ரோது → எருசலேம்

## தூய பவுலின் இறுதிக்கால வாழ்வு

மூன்றாவது தூதுரைப் பயணத்தின் பின்பு பவுல் எருசலேம் நகரிலேயே தங்கியிருந்தார். ஆசியாவிலிருந்து வந்த யூதர்கள் கூறிய குற்றச்சாட்டு காரணமாக அவரைத் தேவாலயத்தில் வைத்து கைதுசெய்தனர். இயேசுவைப்போல் தூய பவுலும் பலருடைய விசாரணைக்கு முகங்கொடுத்தார். இறுதியாக தூய பவுல் உரோமைப் பேரரசினால் விசாரணை செய்யப்பட வேண்டுமெனக் கேட்டமையால், அவரை ஓர் சிறைக் கைதியாக உரோமைக்குக் கொண்டு சென்றனர். தூய பவுல் உரோமையில் வீட்டுக்காவலில் இருந்தபோதும் நற்செய்தியைக் கேள்வியுற்றிராத உரோமைக் குடிமக்களுக்கு மறையைப் போதித்தார்.

தூய பவுல் உரோமைப் பேரரசு முழுவதும் கிறிஸ்தவ மறையைப் பரப்பினார். அவர் எதிர்கொண்ட அனைத்து துன்பங்களுக்கும், சவால்களுக்கும் முகங்கொடுத்து வெற்றி பெற்றார். இறுதியாக உரோமையில் பேரரசன் நீரோவின் கலாபனைக் காலத்தில் கி.பி.68ல் சிரச் சேதம் கொலை செய்யப்பட்டார்.

## செயற்பாடு

*1 தூய பவுல் பற்றி ஒரு கட்டுரை வரைக.*

*2. இலங்கை மறைப்பணியில் கிறிஸ்தவ நம்பிக்கை கொண்டோர், தூய பவுலிடமிருந்து கற்றுக்கொள்ளக்கூடிய முன்மாதிரிகைகள் 3 எழுதுக.*



**வாழ்க்கைக்கு**

எம்மிடம் தரப்படும் ஒரு சிறிய கருமத்தை யேனும் பொறுப்புணர்வோடும், திருத்தமாகவும் நிறைவேற்றுவோம்.

# 9 தூய பேதுரு

## தூய பேதுருவின் அழைப்பு (லூக் 5: 1-11)



படம் 9.1 திருத்தூதர் தூய பேதுரு

ஒருநாள் இயேசு கெனசரேத் ஏரிக்கரையில் பேதுருவின் படகிலேறி மக்களுக்கு கற்பித்தார். அவர் பேசி முடித்த பின்பு சீமோனை நோக்கி, ''ஆழத்திற்கு தள்ளிக் கொண்டு போய் மீன்பிடிக்க உங்கள் வலைகளைப் போடுங்கள்'' என்றார். ''இரவு முழுவதும் பாடுபட்டு உழைத்தும் ஒன்றும் கிடைக்கவில்லை'' என இயேசுவிடம் கூறினார். ஆயினும் ''உமது சொற்படியே வலைகளைப் போடுகிறேன்'' என்று கூறி இயேசுவின் கட்டளைக்குக் கீழ்ப் படிந்தார். படகிலிருந்து பேதுருவும், அவர் சகோதரன் அந்திரேயாவும் திகைப்புக்குள்ளாகும் அளவில் திரளான மீன்கள் பிடிபட்டன. அவர்கள் மீன்களைப் படகில் ஏற்றினார்கள்.

மற்றப்படகிலிருந்த தமது கூட்டாளிகளுக்குச் சைகை காட்டி துணைக்கு வருமாறு அழைத்தார்கள். பெருந்திரளான மீன்கள் பிடிபட்ட திகைப்பில் ஆழ்ந்திருந்த தூய பேதுரு அவ்வேளை இயேசுவின் கால்களில் விழுந்து தனது பாவ நிலையை ஏற்றுக்கொண்டார். அதற்கு இயேசு சீமோனை நோக்கி ''அஞ்சாதே இது முதல் நீ மனிதனைப் பிடிப்பவன் ஆவாய்'' என்று கூறி தம்மைப் பின்செல்லும்படி தூய பேதுருவை அழைத்தார். அவர் அனைத்தையும் விட்டுவிட்டு இயேசுவைப் பின் சென்றார். தூய பேதுருவின் சகோதரன் அந்திரேயாவும், வேறு இரு சகோதரர்களும், செபதேயுவின் மகன் யாக்கோபுவும், அவர் சகோதரரான யோவானும் இயேசுவைப் பின்சென்றனர்.

இயேசு பிலிப்பி, செசரியா என்னும் பகுதிக்குச் சென்ற ஓர் சந்தர்ப்பத்தில் தம் சீடரை நோக்கி ''மானிடமகன் யாரென மக்கள் சொல்லுகிறார்கள்?'' எனக் கேட்டார் அவர்கள் பலவித பதில்களைக் கொடுத்தனர். அதன்பின் இயேசு ''நீங்கள், யாரெனச் சொல்லுகிறீர்கள்?'' என்று அவர்களைக் கேட்டார். அதற்கு தூய பேதுரு துணிவுடன் ''நீர் மெசியா வாழும் கடவுளின் மகன்'' என கூறினார். அதற்கு இயேசு. ''யோனாவின் மகனான சீமோனே நீ பேறுபெற்றவன்'' என தூய பேதுருவிடம் கூறினார் (மத் 16: 13-16).

சீமோன் பேதுரு மறுமொழியாக ''நீர் மெசியா, வாழும் கடவுளின் மகன்,'' என்று உரைத்தார். அதற்கு இயேசு, '' யோவானின் மகனான சீமோனே, நீ பேறு பெற்றவன் ஏனெனில் எந்த மனிதரும் இதை உனக்கு வெளிப்படுத்தவில்லை; மாறாக விண்ணகத்திலுள்ள என் தந்தையே வெளிப்படுத்தியுள்ளார். எனவே நான் உனக்கு கூறுகிறேன்; ''உன் பெயர் பேதுரு: இந்தப் பாறையின் மேல் என் திருச்சபையைக் கட்டுவேன்: பாதாளத்தின் வாயில்கள் அதன்மேல் வெற்றிகொள்ளா. விண்ணரசின் திறவு கோல்களை நான் உன்னிடம் தருவேன். மண்ணுலகில் நீ தடைசெய்வது விண்ணுலகிலும் தடைசெய்யப்படும். மண்ணுலகில் நீ 'அனுமதிப்பது விண்ணுலகிலும் அனுமதிக்கப்படும்'' என்றார். (மத்.16: 17-20)

''பேதுரு'' என்பதன் பொருள் பாறையாகும் திருச்சபை இப்பாறையின் மீது கட்டப்பட்டது, 'மோட்சத்தின் திறவுகோல்' இவரிடம் ஒப்படைக்கப்பட்டது. அதிகாரம் பெற்றவருக்கே திறவுகோல் உரித்துடையது. கட்டவும், அவிழ்க்கவும் விசேட அதிகாரம் பேதுருவுக்குக் கொடுக்கப்பட்டது. அதன்படி பாவங்களை மன்னிக்கவும், நம்பிக்கையையும், நற்செய்தி விழுமியங்களை போதிக்கவும் அவருக்கு அதிகாரம் உண்டு. இவ்வாறு இயேசு தூய பேதுருவை திருச்சபையின் தலைமைப் பீடத்திற்கு நியமித்தார். இதனை மீண்டும் அவருடைய உயிர்ப்பின் பின்பு உறுதிப்படுத்தினார்.

**இயேசு பேதுருவிடம் மூன்று தடவைகள் பொறுப்புக்களை ஒப்படைத்தார்.**

**(யோவான் 21 : 15 - 19)**

| இயேசு | தூய பேதுரு | இயேசு |
|---|---|---|
| யோவானின் மகன் சீமோனே நீ இவர்களை விட மிகுதியாக என் மீது அன்பு செலுத்துகிறாயா? | ஆம் ஆண்டவரே எனக்கு உம்மிடம் அன்பு உண்டு என உமக்குத் தெரியுமே | என் ஆட்டுக் குட்டிகளைப் பேணிவளர். |
| யோவானின் மகன் சீமோனே நீ என்மீது அன்பு செலுத்துகிறாயா? | ஆம் ஆண்டவரே எனக்கு உம்மிடம் அன்பு உண்டு என உமக்குத் தெரியுமே. | என் ஆடுகளை மேய். |
| யோவானின் மகன் சீமோனே நீ என்மீது அன்பு செலுத்துகிறாயா? | ஆண்டவரே உமக்கு எல்லாம் தெரியுமே எனக்கு உம்மீது அன்பு உண்டு என்பது நீர் அறியாத ஒன்றா? | என் ஆடுகளைப் பேணி வளர் |

இவ்வாறு தூய பேதுரு தமது அன்பை மும்முறை இயேசுவிடம் உறுதியாக வெளிப்படுத்தினார். அவருடைய ஆடுகளின் மேய்ப்பராக திருச்சபை என்னும் மந்தைகளைப்பேணிவளர்க்கும்பொறுப்புஅவருக்குவழங்கப்பட்டது.திருத்தூதர்களின் தலைவராகிய தூய பேதுருவின் இடத்தையே திருத்தந்தை பெறுகிறார். திருச்சபையின் கண்காணும் தலைவராகிய அவர் ‘‘திருத்தந்தை’’ ‘‘பரிசுத்த பாப்பரசர்’’ என்னும் பெயர்களால் அறிமுகம் செய்யப்படுகிறார். தூய பேதுருவிற்குப் பின்பு இடைவிடாது அப்பதவிக்குத் திருத்தந்தையர்கள் தேர்ந்தெடுத்து நியமிக்கப்படுகின்றனர். திருத்தந்தை அதிகாரத்தாலும், கௌரவத்தாலும் ஆயர்களை விட மேலானவராவர். திருத்தந்தை ஒருவர் அப்பதவிக்கு நியமனம் பெற்ற பின்பு தமது இயற்பெயருக்குப் பதிலாக வேறு ஒரு புனிதரின் பெயரைத் தேர்ந்து கொள்ளுவது வழக்கம். அவர் இவ்வுலக அதிகாரங்களுக்குப் பணியமாட்டார். கத்தோலிக்கர்களாகிய நாம் அனைவரும் கத்தோலிக்க திருச்சபையின் சட்டங்கள் ஒழுங்குகளைக் கடைப்பிடிப்போம். திருச்சபையின் உயர் அதிகாரத்தை மதிப்போம், கீழ்ப்படிவோம்.



9.2 திருத்தந்தை பிரான்சிஸ்

## திருத்தந்தை 1 ஆம் பிரான்சிஸ்

ஆர்ஜன்ந்தீனாவின் தலைநகரான புவனோர்ஸ் அயர்ஸ் இத்தாலி குடியேற்றவாதிகளான புகையிரத ஊழியர் மார்ணியோ கொஸ் பர்கோலியோ ,றெஜினா மரியா தம்பதிகளுக்கு 1936 மார்கழி 17ம் நாள் ஓர் மகன் பிறந்தார். அவர் ஜோர்ச் மாரியோ பர்காலியோ ஆவார். பாடசாலைக்கல்வியின் பின்பு புவனோர்ஸ் அயர்ஸ் பல்கலைகழகத்தில் இரசாயன விஞ்ஞான (B.Sc) பட்டம் பெற்றார். 1958 பங்குனி 11ம் நாள் இயேசு சபையில் சேர்ந்து மெய்யியல், இறையியல் ஆகிய பாடங்களைக் கற்று, 1969 மார்கழி மாதம் 13ம் நாள் குருத்துவ பட்டம் பெற்றார். பின்னர் இறையியலில் பேராசிரியராகப் பணியாற்றினார்.

பிறப்பிலிருந்தே பெற்றிருந்த தலைமைத்துவப் பண்பு காரணமாக 1973ல் ஆர்ஜன்ந்தீனாவில் இயேசு சபையின் மாகாணத் தலைவர் பதவிக்கு நியமிக்கப்பட்டு, 1979 வரை அப்பதவியில் பணியாற்றி, 1980 - 1986 வரை தூய மிக்கேல் குருத்துவக் கல்லூரியில் தேசிய இயக்குநராகத் தமது கடமையைச் சிறப்பாக நிறைவேற்றினார். 1992ம் ஆண்டு உதவி ஆயராகவும், 1998ம் ஆண்டு புவனோர்ஸ்அயர்ஸ்சின் உயர் மறைமாவட்ட ஆயராகவும் நியமனம் பெற்றார். அவர் 2001 மாசிமாதம் 21ம் நாள் திருத்தந்தை தூய இரண்டாம் அருளப்பர் சின்னப்பரினால் கருதினால் பதவிக்கு உயர்த்தப்பட்டார். அப்பதவியில் பொறுப்புக்கள் பலவற்றைத் தாங்கிய அவர் சமூக நீதிக்காகத் தம்மை அர்ப்பணித்து, எளிமையான வாழ்க்கையை இன்று வாழ்ந்து வருகின்றார். 1982 முதல் பல நூல்களை எழுதிய இவர், சமயம் தொடர்பாக மட்டுமன்றி, சமூக, பொருளாதார, அரசியல், பிரச்சினைகள் தொடர்பாகவும் அஞ்சாது தமது கருத்துக்களை வெளியிட்டார். இவர் 2013 பங்குனி 13ம் நாள் பரிசுத்த கத்தோலிக்க திருச்சபையில் 266வது திருத்தந்தையாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 2013ஆம் ஆண்டுக்கான **சிறந்த மனிதர்** என்ற விருதையும் பெற்றுக்கொண்டார்.

## செயற்பாடு

1. திருச்சபையின் தலைமைத்துவத்திற்கு தூய பேதுரு நியமனம் பெற்ற சந்தர்ப்பம் எது?
2. ''பேதுரு'' என்பதன் பொருள் என்ன?
3. பேதுருவின் நம்பிக்கை 'அறிக்கையை' சுருக்கமாக எழுதுக.
4. இயேசு 'பேறு பெற்றவன்' என யாருக்குக் கூறினார்?
5. 'ஆயனும் - மந்தைகளும்' என்னும் பதங்களின் பொருளை விளக்குக. (யோவான் 21 : 15 - 19).



**வாழ்க்கைக்கு**

மனிதர்கள் உங்கள் நற்செயல்களைக் கண்டு விண்ணுலகில் வாழும் உங்கள் தந்தையைப் புகழும் பொருட்டு உங்கள் ஒளியை அவர்கள் முன்பு ஒளிரச் செய்யுங்கள்.

# 10 திருச்சபையின் பண்புகள்

ஞாயிறு திருப்பலியில் நாம் நம்பிக்கை அறிக்கையில் 'ஏக, பரிசுத்த, கத்தோலிக்க, அப்போஸ்தலிக்க திருச்சபையை நம்புகிறேன்' என சொல்லுகின்றோம். நம்பிக்கை அறிக்கையின் இப்பகுதியில் திருச்சபையின் சிறப்புப் பண்புகள் நான்கும் எடுத்துக்காட்டப்படுகின்றன. அவையாவன :

1. ஏகம்
2. பரிசுத்தம்
3. கத்தோலிக்கம்
4. அப்போஸ்தலிக்கம்

## 1. ஏகம் (ஒருமைத்துவம்)

திருச்சபையின் ஒருமைப்பாடே ஏகம் என்பதாகும். மூவொரு கடவுளின் ஒன்றிப்பே திருச்சபையின் ஒருமைப்பாட்டிற்கு ஊற்றாகவும் முன்மாதிரியாகவும் உள்ளது. திருச்சபையின் அனைத்து உறுப்பினர்களையும் அழைத்திருப்பவர் இறைதந்தையே. இவர்கள் இறைமகன் கிறிஸ்துவுக்குச் சொந்தமானவர்கள். தூய ஆவியினால் நிறைவுக்கு இட்டுச்செல்லப்படுவார்கள். இதனைக் கிறிஸ்துவின் மறையுடல் என்ற உருவகத்தின் மூலம் விளக்கலாம். திருச்சபையின் தலையாக கிறிஸ்து உள்ளார். திருமுழுக்குப் பெற்ற அனைவரும் தலையிலிருந்தோ அல்லது உறுப்புக்கள் உடலிலிருந்தோ நீக்கப்பட்டால், அது வலுவிழந்து பலம் குன்றிப் போய்விடும்.

எனினும் திருச்சபையின் ஒருமைப்பாட்டிற்கு எதிராகப் பல்வேறு தடைகள் அன்றும் இன்றும் வந்துகொண்டே இருக்கின்றன. அத்தகைய பிளவுகள், பேதங்கள், பிரச்சினைகள் அனைத்தும் ஒழிந்து ஒற்றுமையைச் சுதந்தரித்துக் கொள்ள, திருச்சபை செபிக்கவும் செயற்படவும் வேண்டும். அது பொதுநிலையினரதும் குருக்கள், துறவிகள் அனைவரதும் பொறுப்பும் கடமையுமாகும்.

''அவர்களுக்காக மட்டும் நான் வேண்டவில்லை, அவர்களுடைய வார்த்தையின் வழியாக என்னிடம் நம்பிக்கை கொள்வோருக்காகவும் வேண்டுகிறேன். எல்லோரும் ஒன்றாய் இருப்பார்களாக! தந்தையே, நீர் என்னுள்ளும் நான் உம்முள்ளும் இருப்பதுபோல் அவர்களும் ஒன்றாய் இருப்பார்களாக! (யோவா 17 : 20 - 21)
இதனால் நீரே என்ன அனுப்புனீர் என்று உலகம் நம்பும்.

மேலும் பங்குச் சமூகமாக நாம் அனைவரும் ஒருமைப் பாட்டுடன் செயலாற்றுவதோடு ஏனைய அங்கீகரிக்கப்பட்ட கிறிஸ்தவ சபைகளோடு ஒன்றிணைந்து சகோதரத்துவத்தோடு செயலாற்றுவோம்.

## 2. பரிசுத்தம் (தூய்மை)

தூயவரான இறைவனே திருச்சபையின் ஊற்றாக இருக்கின்றார். மூவொரு கடவுளோடு கொண்டுள்ள உறவினால் திருச்சபை பரிசுத்தமானதாக உள்ளது. ஒரு நபர் அல்லது ஒரு பொருள் இறைவனோடு கொண்டுள்ள உறவின் காரணமாக அது தூய்மை அடைகிறது.

உதாரணம் : புனித பூமி, திருவிவிலியம், அருட்கருவிகள்




கிறிஸ்து இயேசுவால் நிறுவப்பட்டது.

தூய ஆவி வழிநடத்துகிறார்.

இறைவனால் தேர்ந்துகொள்ளப்பட்ட மக்கள்

பரிசுத்த திருச்சபையின் ஒவ்வொரு உறுப்பினர்களுக்கும் உரிய அழைப்பாகவும் எல்லாச் செயற்பாடுகளின் நோக்கமாகவும் உள்ளது. இருப்பினும் திருச்சபையின் உறுப்பினர்களாகிய நாம் பாவம் செய்யக்கூடியவர்கள். எனவே பாவிகளை அரவணைத்து பாவவழிகளிலிருந்து மாறி இறைவனை நோக்கி பயணிக்க வழி காட்டுகிறது.

## கத்தோலிக்கம் (பொதுமை)

கத்தோலிக்கம் என்பது உலகளாவிய பொதுவான தன்மையைக் குறிக்கிறது. இது ஒரு தனி மனிதனையோ, நாட்டையோ, பிரதேசத்தையோ குறித்து நிற்பதல்ல. மாறாக பரந்து விரிந்ததொன்றாகும்.

திருச்சபையில் கத்தோலிக்கம் என்ற சொல்லின் இரு பண்புகள்.

- கிறிஸ்து இயேசு திருச்சபையில் எப்பொழுதும் உடனிருப்பது.
- முழு மனுக்குலத்துக்கும் தூதுரைப் பணிக்காக அனுப்பப்படுவது.

நற்செய்தி அறிவிப்பின் பயனாக கத்தோலிக்கம் உலகெங்கும் வளர்ச்சி யடைகின்றது. நாம் இயலுமான வரையில் எல்லா விதத்திலும் நற்செய்தியை அறிவிக்க வேண்டும். இதனால் கத்தோலிக்க தன்மை வலுவடைகின்றது.

## அப்போஸ்தலிக்கம் (திருத்தூது)

திருத்தூதர்களை அடித்தளமாகக் கொண்டு கட்டப்பட்டுள்ளது. திருத்தூதர்களின் போதனையையும், அவர்களது நம்பிக்கை வாழ்வையும், பணியையும் தொடர்ந்து திருச்சபை ஆற்றிவருவதால் அது அப்போஸ்தலிக்கமாக இருக்கின்றது.

திருத்தூதர்களின் போதனைக்கேற்ப தொடக்க கிறிஸ்தவர்கள் தமது வாழ்வை அமைத்துக் கொண்டார்கள். *(கி.ப 2 : 42)* அவ்வாறே அனைத்துக் கிறிஸ்தவர்களும் திருத்தூதர்களின் போதனைகளின் படி வாழ கடப்பாடுடையவர்கள்.

நாம் அறிக்கையிடும் ஏக, பரிசுத்த, கத்தோலிக்க, அப்போஸ்தலிக்க திருச்சபை என்பது பேதுருவானவரைத் தொடர்ந்து வழிவந்த ஆயர்களினால் வழிநடத்தப்படுகின்ற திருச்சபையையே, என இரண்டாம் வத்திக்கான் சங்க ஏட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது.

இதுவே எங்கள் நம்பிக்கையுமாகும். இதுதான் கிறிஸ்துவின் ஒரே திருச்சபை, இதைத்தான் நம்பிக்கை அறிக்கையில் நாம் ''ஒரே, தூய, பொதுவான, திருத்தூதுத் திருச்சபை'' என வெளிப்படையாக அறிக்கையிடுகின்றோம்.

*(இரண்டாம் வத்திக்கான் சங்க ஏடு திருச்சபை எண் 8)*

**செயற்பாடு**

1. திருச்சபையின் ஒருமைப்பாட்டை வளர்க்க நீர் செய்யக்கூடிய விடயங்கள் இரண்டு எழுதுக.
2. திருச்சபையின் புனிதத்துவம் (பரிசுத்தம்) வளர நீர் செய்யக்கூடிய விடயங்கள் மூன்று எழுதுக.
3. திருச்சபையின் 'கத்தோலிக்கம்'' வளர நீர் செய்யக்கூடியவைகள் ஐந்து எழுதுக.
4. அப்போஸ்தலிக்கம் என்ற பதத்தை சுருக்கமாக விளக்குக.



**வாழ்க்கைக்கு**

திருச்சபையின் ஒன்றிப்புக்காகச் செபிப்போம்.

# 11 இலங்கைக் கத்தோலிக்க திருச்சபை

'' தூய ஆவி உங்களிடம் வரும்போது நீங்கள் கடவுளது வல்லமையைப் பெற்று எருசலேமிலும், யூதேயா, சமாரியா முழுவதும் உலகின் கடையெல்லை வரைக்கும் எனக்கு சாட்சிகளாய் இருப்பீர்கள்.'' (திப 8:1)

இயேசுவின் வார்த்தைகள் நிறைவுறும் பொருட்டு, அவரது நற்செய்தியைப் பெறும் பேறு இந்நாட்டிற்கும் கிடைத்தது. இலங்கைத் திருச்சபையின் வரலாற்றினை ஐந்து பிரதான காலங்களாகப் பிரிக்கலாம்.

1. போர்த்துக்கேயரின் வருகைக்கு முற்பட்டகாலம் - கி.பி. 1505ற்கு முன்.
2. போர்த்துக்கேயர் கரையோரப் பகுதியை ஆட்சிசெய்த காலம் - கி.பி.1505 - 1658.
3. ஒல்லாந்தர் கரையோரப் பகுதியை ஆட்சிசெய்த காலம் - கிபி. 1658 - 1796.
4. ஆங்கிலேயர் காலம் - கி.பி. 1796 - 1948.
5. சுதந்திரத்திற்குப் பிற்பட்ட காலம் - கி.பி. 1948.

## 1. போர்த்துக்கேயரின் வருகைக்கு முற்பட்டகாலம் (கி.பி 1505 இற்கு முன்)



11.1 நெஸ்டோரியன் கற்சிலுவை

போர்த்துக்கேயரின் வருகைக்கு முன்னர் அநுராதபுரத்திலே கிறிஸ்தவ பக்தர்கள் வாழ்ந்ததாக கி.பி 6ம் நூற்றாண்டில் கொஸ்மஸ் இன்டிகோ பிளாஸ்ரர் என்பவர் எழுதிய கிறிஸ்தவ சபைகளின் விபரணம் என்னும் நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

அநுராதபுரக் கட்டடச் சிதைவுகளுக்கிடையில் இருந்து 1912 இல் கல்லினால் செதுக்கப்பட்ட சிலுவை ஒன்று கண்டெடுக்கப்பட்டுள்ளது. அது திருத்தூதர் தூய தோமாவினுடைய சீடர்களின் சிலுவையின் முத்திரையாக இருக்கலாம் எனக் கருதப்படுகின்றது.

மேலும் 6ஆம் நூற்றாண்டுக்கு முன்னரும் கிறிஸ்தவ பக்தர்கள் இந்நாட்டில் வாழ்ந்தார்கள் என்பது பற்றிப் பலவித கருத்துக்கள் வெளிப்படுத்தப்பட்டுள்ளதோடு அது தொடர்பாக அறிஞர்கள் மத்தியில் கலந்துரையாடல்கள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன.

கரையோரப் பிரதேசம் போர்த்துக்கேயரின் ஆட்சிக்குட்பட்டிருந்த காலத்தில் வருகைதந்த மறை போதகர்கள் மூலம் கிறிஸ்தவ மதத்தைப் பரப்பவும் கத்தோலிக்க திருச்சபையை நிறுவவும் முறையான செயற்திட்டம் பின்பற்றப்பட்டது.

## 2. போர்த்துக்கேயர் கரையோரப் பகுதியை ஆட்சி செய்த காலம். (கி.பி 1505 -1658)

1505 கார்த்திகை மாதம் 15ம் திகதி போர்த்துக்கேயர் எதிர்பாராத விதமாக எம்நாட்டுக்கு வந்தனர். வியாபாரத்திற்காக வந்த அவர்கள் அப்போது கோட்டை இராச்சியத்தை ஆட்சிசெய்த 6ஆம் புவனேகபாகு மன்னனின் செயலினால் அரசியலிலும் தலையிட ஆரம்பித்தனர். மேலும் அவ் அரசனுடைய வேண்டுகோளின்படி 1543ல் இலங்கைக்கு முதன் முதலாக பிரான்சிஸ்கன் சபையைச் சேரந்த மறைபோதகர்கள் ஐவரைக் கொண்ட குழு ஒன்று வருகை தந்தது. அவர்கள் மிகவும் உற்சாகத்துடன் மறைபோதக பணிகளில் ஈடுப்பட்டனர்.

கோட்டை இராச்சியம் போர்த்துக்கேயரின் ஆட்சிக்கு உட்பட்டதோடு இந்நாட்டில் பணிபுரிய வேறு துறவற சபைகளைச் சேர்ந்த மறைபோதகர்களும் இங்கு வருகைத்தந்தனர்.

★ 1602 - இயேசு சபை மறைபோதகர்கள்.
★ 1605 - டொமினிக்கன் சபை மறைபோதகர்கள்.
★ 1606 - அகுஸ்தினார் சபை மறைபோதகர்கள்.

இவர்கள் இலங்கையில் தமக்குக் கொடுக்கப்பட்ட பகுதிகளில் மறைபோதக பணியை ஆற்றியதோடு பலவித இரக்கப் பணிகளிலும் ஈடுப்பட்டனர். அவற்றுள் கல்விக்கு சிறப்பிடம் கொடுக்கபட்டது.

## 3. ஒல்லாந்தர் கரையோரப் பகுதியை ஆட்சிசெய்த காலம்

## (கி.பி. 1658 -1796)

ஒல்லாந்தர் கரையோரப் பகுதியை ஆட்சி செய்த காலத்தில் அப்பகுதியில் வாழ்ந்த கத்தோலிக்கர்கள் பல்வேறு இன்னல்களுக்கு முகம் கொடுக்க நேரிட்டது. இந்நாட்டில் வாழ்ந்த கத்தோலிக்கக் குருக்கள் நாட்டில் இருந்து வெளியேற்றப்பட்டனர். மறைமுகமாகவேனும் கத்தோலிக்க மறையைப் பின்பற்றுவது தடைசெய்யப்பட்டது திருப்பலி ஒப்புக்கொடுப்பதும் தடைசெய்யப்பட்டது. கத்தோலிக்க ஆலயங்கள், பாடசாலைகள், நலன்புரி நிறுவனங்கள் அனைத்தும் புரட்டஸ்தாந்து போதகர்களுக்கு உரிமையாக்கப்பட்டதோடு சில நிறுவனங்கள் அழிவுக்குள்ளாக்கப்பட்டன. அனைத்துப் பாடசாலைகளிலும் புரட்டஸ்தாந்து மதம் மட்டுமே கற்பிக்கப்பட்டதோடு, அப்பாடசாலைகளுக்குத் தம் பிள்ளைகளை அனுப்பாத பெற்றோருக்குத் தண்டம் விதிக்கப்பட்டது. புரட்டஸ்தாந்து ஆலயங்களில் நிறைவேற்றப்படாத திருமணம், திருமுழுக்கு என்பன இரத்துச்செய்யப்பட்டது. இக்கால கட்டத்தில் கத்தோலிக்கர்கள் முகம் கொடுத்த முக்கியமானமான பிரச்சினை அவர்களுக்கு ஓர் கத்தோலிக்க குருவானவர் இல்லாதிருந்தமையாகும். இவ்வித இடையூறுகள் மத்தியில் தமது நம்பிக்கையைப் பாதுகாத்துக்கொள்ள கத்தோலிக்கர் மேற்கொண்ட முயற்சி திருச்சபையின் இன்றைய வளர்ச்சிக்கு காரணமாக அமைந்தது.

## தூய யோசவ்வாஸ் அடிகளார் இலங்கையின் அப்போஸ்தலர்



11.2 தூய யோசவ்வாஸ் அடிகளார்

### தூய யோசப்வாஸ் அடிகளாரின் கீதம்

**யோசேப்வாஸ்முனி விசுவாசமுனி அண்ணல்**
**இயேசுக்கிறிஸ்துவின் மறைபோற்றும் உம் பணி**
**ஆன்ம வாஞ்சையோடுழைத்தாய்**
**இறைத்தூதினை உரைத்தாய்**
**புண்ய சீலனாய் ஜொலித்தாய்**
**நீ வாழி நீ வாழி என்றென்றும் வாழி வாழி நீ.**

**கோவை வாணிப நாட்டில்**
**வானலியெனும் சிற்றூரில்**
**தேவன் இயேசுவுக்காக**
**அஞ்ஞானம் நீக்க உதித்தாரே**
**தேவனை மேலும் நேசித்து வாழ்வதில்**
**ஆனந்தம் கண்டாரே**
**திருமறைதன்னை பரப்பிடவேண்டி**
**துறவறம் பூண்டாரே**
**வேதத்தைக் காக்க வீரியம்கொண்டு**
**இலங்கைக்கு வந்தாரே.**

**வேதனை மிகுநாளில்**
**விசுவாசம் சுடர் விட்டோங்க**
**சோதனை பல தாங்கி**
**போதனை செய்திட்டாரே**
**திட்டத்திற்காக பட்டங்கள் துறந்து**
**கஷ்டங்களை ஏற்றாரே**
**இலங்கையெங்கனும் சத்தியவேதம்**
**பரவிடச் செய்தாரே**
**உயர் விசுவாசம் எம்மிலே நிலைக்க**
**காரணர் ஆனாரே.**

**தூய யோசேப்வாஸ் போல**
**இறைதூதராக நாம் மாறி**
**துன்புற்றோர்களை நாடி**
**துணிவுடன் பணி செய்வோமே**
**விண்ணக அரசின் விழுமியம் தனையே**
**விதைத்திட செல்வோமே**
**மன்னவன் இயேசுவின் மாண்புறு வார்த்தையை**
**வாழ்வாய்க் கொள்வோமே**
**மண்ணகம் தனிலே மறையினை காக்க**
**நாம் ஒன்றாய் இணைவோமே.**

*இந்தியாவில் கோவா பிரதேசத்தின் சென்தொ ஆல் என்னும் கிராமத்தில் பிராமண வம்சத்திலே கிறிஸ்தோபர் வாஸ், மரிய மிராண்டா ஆகிய பெற்றோருக்கு கி.பி 1651 சித்திரை 21ம் நாள் யோசப்வாஸ் பிறந்தார். சிறுவயது முதல் சமயப் பற்றோடு வளர்க்கப்பட்டார். கி.பி 1676ல் கோவா மறைமாவட்டப் பேராயரினால் குருவாகத் திருநிலைப்படுத்தப்பட்டார். ஐந்து வருடங்கள் கோவாவில் பணியாற்றிய வாஸ் அடிகள், கனரா பிரதேசத்தில் சபை முதல்வராக நியமிக்கப்பட்டார், இலங்கைவாழ் கத்தோலிக்கர்களின் துன்பதுயரங்களையும், துர்பாக்கிய நிலையையும், பற்றி கேள்வியுற்ற அடிகளார் இரகசியமாக இலங்கைத் தீவுக்குள் எவ்வாறு நுழையலாம் என சிந்திக் கலானார். அதனால் ஒறத்தோரியன் துறவற சபையில் அங்கத்துவம் பெற்று, கி.பி 1687ல் வர்த்தக கப்பலொன்றில் தொழிலாளியாக வேடம் பூண்டு, இலங்கைத் தீவின் மன்னார் கரையை வந்தடைந்தார். சுயவிருப்பத்தோடு இங்கு வருகைதந்த அடிகளார் ஆழமான நம்பிக்கையோடு, அறியாத நாட்டில் தெரியாத மொழிபேசும் மக்கள் மத்தியில் கஷ்டமான பணியில் ஈடுபட்டமை, தனக்கு இறைவன் தந்த அழைப்பென ஏற்றுக்கொண்டார். உண்ண உணவின்றியிருந்த சந்தர்ப்பங்களும் உண்டு. இலங்கையில் பல பகுதிகளுக்கு கால் நடையாகவே பிரயாணத்தை மேற்கொண்டார். கண்டிக்குச் சென்ற வேளையில் ஒற்றன் என குற்றஞ் சாட்டப்பட்டு சிறையிலும் அடைக்கப்பட்டார். அடிகளாரால் ஆற்றப்பட்ட மறைப் பணியானது மிகவும் அர்ப்பணிப்பு வாய்ந்ததாகும்.*

### தூய யோசவ்வாஸ் அடிகளாரின் புதுமைகள்

★ மிக்க வரட்சி நிலவியபோது கண்டி இராச்சியத்தில் மழையைப் பெய்யச் செய்தார். (கி.பி 1696)

★ தெதுறு ஓயாவைக் கால் நடையாகக் கடந்து சென்றார்.

★ மதம் பிடித்த யானையை அடக்கினார்.

கண்டியில் வைசூரி நோயினால் பீடிக்கப்பட்டவர்களை பராமரித்தமை, அரசனதும் மக்களதும் பாராட்டுக்களைப் பெறக் காரணமாகியது. பாத அணிகளுமின்றிக் கால்நடையாகவே எல்லா இடங்களுக்கும் சென்று பணியினை மேற்கொண்டார். மிகவும் எளிமையாகவும் எடுத்துக்காட்டாகவும் வாழ்ந்து பணியை நிறைவேற்றினார். பொதுநிலையினரிடையே தலைமைத்துவம் வகிப்பதற்காக அண்ணாவியார், மூப்பர், சக்கிறிஸ்தியான் ஆகிய பொது நிலையினரை ஆலயப் பணிக்காக நியமித்தார். அடிகளார் இலங்கையின் பல பகுதிகளுக்கும் சென்று மிகவும் கடினமான சேவைகளில் ஈடுபட்டு கி.பி 1711.01.16 அன்று இறைபதமடைந்தார். அப்போது அவருக்கு வயது 60 ஆகும். அவரது மரணத் தருவாயில் ''விளங்கிக்கொள்ளுங்கள், எவரும் வாழ்நாள் முழுவதும் கவனியாது விட்ட எதனையுமே அவரது மரண நேரத்தில் நிறைவேற்ற முடியாது'' எனக் கூறினார். அவரது 35 வருட குருத்துவ வாழ்வில் 24 வருடங்களை இலங்கை மக்களுக்காகவே அர்ப்பணித்திருந்தார். 1995 தை 21 அன்று, திருத்தந்தை தூய 2ம் அருளப்பர் சின்னப்பரால் இலங்கையின் அருளாளர் நிலைக்கு உயர்த்தப்பட்டார்.

### அருட்பணி யாக்கோமே கொன்சால்வேஸ் அடிகளார்



இவர் கி.பி1705ல் இலங்கைக்கு வருகை தந்தார் அருளாளர் ஜோசப்வாஸ் அடிகளாரின் வழிகாட்டுதலால் அவர் சிங்களம், தமிழ் ஆகிய மொழிகளில் பல நூல்களை எழுதினார். அவற்றுள் சில தேவவேத புராணம்,வேதகாவியம், வியாகுல பிரசங்கம் (பசாம்) பெரிய குறிப்பிடம் மங்கள கீதம் ஆகியனவாகும். நூல்களை எதியதோடு, நாட்டியக்கலை, சங்கீதக்கலை ஊடாக தேசிய கிறிஸ்தவ இலக்கியத்தை வளர்க்க அரும் பணியாற்றினார். இவர் இலங்கைக் கத்தோலிக்க இலக்கியத்தின் தந்தையாவார். கி.பி 1742 ஆடி 17 இறந்தார். இவரது உடல் சிலாபம் போலவத்தைக் கோயிலில் அடக்கம் செய்யப்பட்டது.

### 4. ஆங்கிலேயர் (கி.பி 1796 - 1948)

ஒல்லாந்தர் வசம் இருந்த ஆட்சிப் பிரதேசம் கி.பி 1796இல் ஆங்கிலேயர் வசமான பின்பு கரையோரப் பகுதிகளை மட்டும் ஆட்சி செய்த ஆங்கிலேயர், 1815ல் முழு இலங்கையிலும் தமது அதிகாரத்தைப் பலப்படுத்திக் கொண்டனர். ஒல்லாந்தரால் கத்தோலிக்கருக்கு எதிராக அமுல்படுத்தியிருந்த எல்லாச் சட்டங்களையும் இரத்துச் செய்ததோடு இலங்கையர் தாம் விரும்பும் மதத்தைத் தழுவும் சுதந்திரமும் உருவானது.

ஆங்கிலேயர் காலத்தில் இந்நாட்டின் மறை பணிக்காக பல கத்தோலிக்க மறைபரப்புச் சபையினர் வருகை தந்தனர். அச் சபையினர் பின்வருமாறு.

★ சில்வெஸ்டர் ஆசீர்வாதப்பர் சபை (பெனடிற்)
★ அமலமரித்தியாகிகள் சபை
★ இயேசு சபை
★ டிலாசால் அருட் சகோதரர்கள் சபை
★ மாறிஸ்ட் அருட் சகோதரர்கள் சபை
★ திருக்குடும்பக் கன்னியர் சபை
★ நல்லாயன் கன்னியர் சபை
★ பிரான்சிஸ்கன் கன்னியர் சபை
★ ஏழைகளின் சிறிய சகோதரிகள் சபை

## 5. சுதந்திரத்திற்கு பின் (கி.பி 1948ற்கு பின்)

கி.பி 1948ல் இலங்கை சுதந்திரமடைந்த பின்னர், 1961 இல் அரச உதவி பெறும் பாடசாலைகள் அரசினால் சுவீகரிக்கப்பட்டமை இலங்கைக் கத்தோலிக்க திருச்சபைக்கு மிகப்பெரிய சவாலாகும். அதனால் பாடசாலைக் கல்வியில் இருந்த சமயச் சூழல், ஒழுக்கம் என்பன பாதிக்கப்பட்டன. சமயம் கற்பித்தல் வாரத்திற்கு இரு பாடவேளை என மட்டுப்படுத்தப்பட்டதோடு, பாடசாலை நிர்வாகம், ஆசிரியர் நியமனம் என்பவைகளை அரசு தன்வசப்படுத்திக் கொண்டது. இதனால் பாடசாலைகளில் கத்தோலிக்க மறைச்சூழல் குறைய ஆரம்பித்தது. 1960ல் வெளிநாட்டு மறைபோதகர்களின் விசா புதுப்பிக்க அரசு அனுமதியளிக் காமையினால், அவர்கள் மீண்டும் தமது நாட்டுக்கு திரும்ப நேர்ந்தது. இக்குறையை நிவர்த்தி செய்ய இலங்கை முழுவதும் மறைமாவட்டங்கள் உருவாக்கப்பட்டு ஆயர்களும் நியமிக்கப்பட்டனர்.

சுதந்திரத்திற்குப் பின் தேசிய அதிஉயர் மறைமாவட்ட ஆயர்களும் மறை மாவட்ட ஆயர்களும் நியமிக்கப்பட்டனர். ஆயர்களில் சிலர் இறைபதம் அடைந்து விட்டனர். சிலர் ஓய்வு பெற்ற ஆயர்களாக இருக்கின்றனர்.

| **மறை மாவட்டங்கள்** | **ஆயர்கள்** |
|---|---|
| கொழும்பு : | மேதகு தோமஸ் கருதினால் குறே அதிஉயர் மறை மாவட்ட ஆயர் (இறைபதம்) |
| கொழும்பு : | மேதகு நிக்லஸ் மாக்கஸ் பர்னாந்து அதிஉயர் மறை மாவட்ட ஆயர் (ஓய்வு) |
| கொழும்பு : | மேதகு ஒஸ்வல்ட் கோமிஸ் அதிஉயர் மறை மாவட்ட ஆயர் (ஓய்வு) |
| குருநாகல் : | மேதகு றேமன்ட் பீரிஸ் மறை மாவட்ட ஆயர் (ஓய்வு) |
| காலி : | மேதகு எல்மோ பெரேரா மறை மாவட்ட ஆயர் (இறைபதம்) |
| காலி : | மேதகு அன்டனி சேரம் மறை மாவட்ட ஆயர் (இறைபதம்) |

காலி : மேதகுடொன் சில்வெஸ்டர் மறை மாவட்ட ஆயர் (இறைபதம்)
சிலாபம் : மேதகு எட்மன் பீரிஸ் மறை மாவட்ட ஆயர் (இறைபதம்)
சிலாபம் : மேதகு பிராங் மாக்கஸ் பர்னாந்து மறை மாவட்ட ஆயர் (இறைபதம்)
கண்டி : மேதகு போல் பெரேரா மறை மாவட்ட ஆயர் (இறைபதம்)
அநுராதபுரம் : மேதகு கென்றி குணவர்தன மறை மாவட்ட ஆயர் (இறைபதம்)
யாழ்ப்பாணம் : மேதகு எமலியானுஸ் பிள்ளை மறை மாவட்ட ஆயர் (இறைபதம்)
யாழ்ப்பாணம் : மேதகு தியோகுப் பிள்ளை மறை மாவட்ட ஆயர் (இறைபதம்)
யாழ்ப்பாணம் : மேதகு தோமஸ் சவுந்தரநாயகம் (ஓய்வு)
பதுளை : மேதகு லியோ நாணயக்கார மறை மாவட்ட ஆயர் (இறைபதம்)
பதுளை : மேதகு எட்மன்ட் பர்னாந்து மறை மாவட்ட ஆயர் (இறைபதம்)
திருகோணமலை: மேதகு .எல். ஆர். அன்டனி மறை மாவட்ட ஆயர் (இறைபதம்)
திருகோணமலை: மேதகு ஜோசப் கிங்ஸ்லி சுவாம்பிள்ளை (ஓய்வு)

இலங்கை முழுவதும் மறைப்பாடசாலை முறையும், மறைக்கல்வி நடு நிலையங்கங்ளும் ஆரம்பிக்கப்பட்டன. இக்காலப் பகுதியில் இலங்கைக் கத்தோலித் திருச்சபை பண்பாட்டுமயமாக்கலில் கவனம் செலுத்தியது. 2012ம் ஆண்டை அடைந்தபோது இலங்கையில் 12 மறை மாவட்டங்கள் உருவாகியிருந்தமை ஓர் சிறப்பம்சமாகும். அம்மறை மாவட்டங்களின் மறை ஆயர்களின் பெயர் பின்வருமாறு.

1. கொழும்பு ⟶ பேராயர் மேதகு மல்கம் கருதினால் றஞ்சித் (உயர் மறை மாவட்ட ஆயர்)
⟶ மேதகு மேரியஸ் பீரிஸ் (துணை ஆயர்)
⟶ மேதகு இம்மானுவேல் பர்னாந்து (துணை ஆயர்)
⟶ மேதகு மக்ஸ்வெல் சில்வா (துணை ஆயர்)
2. யாழ்ப்பாணம் ⟶ மேதகு ஜஸ்ரின் ஞானப்பிரகாசம்
3. கண்டி ⟶ மேதகு ஜோசப் வியானி
4. காலி ⟶ மேதகு றேமன் விக்ரமசிங்க
5. திருகோணமலை ⟶ மேதகு கிறிஸ்ரியன் நோயல் இம்மானுவேல்
6. சிலாபம் ⟶ மேதகு வலன்ஸ் மெண்டிஸ்
7. பதுளை ⟶ மேதகு வின்ஸ்டன் பர்னாந்து (SSS)
8. மன்னார் ⟶ மேதகு இராயப்பு ஜோசப்
9. அனுராதபுரம் ⟶ மேதகு நோபட் அந்திராதி பெரேரா (OMI)
10. குருநாகல் ⟶ மேதகு ஹரல்ட் அன்ரனி பெரேரா
11. இரத்தினபுரி ⟶ மேதகு கிளிட்டஸ் சந்திரசிறி பெரேரா (OSB)
12. மட்டக்களப்பு ⟶ மேதகு பொன்னையா ஜோசப்.

## செயற்பாடு

1. முதலாம் நூற்றாண்டில் இலங்கையில் கிறிஸ்தவர்கள் வாழ்ந்தமைக்கான சான்றுகள் இரண்டு எழுதுக.
2. போர்த்துக்கேயர் காலத்தில் இலங்கைக்கு வருகை தந்த மறைப் போதகக் குழுக்கள் இரண்டின் பெயர்களைத் தருக.
3. ஒல்லாந்தர் காலத்தில் கத்தோலிக்க மறையைப் பாதுகாக்க உதவிய இரு குருக்களின் பெயர்களை எழுதுக.
4. ஆங்கிலேயர் காலத்தில் இந்நாட்டுக்கு வருகை தந்த துறவற சபைக் குழுக்கள் இரண்டைக் குறிப்பிடுக.
5. சுதந்திரத்தின் பின் கத்தோலிக்க திருச்சபை முகங்கொடுத்த பிரச்சினைகள் இரண்டை எடுத்துக்காட்டுக.



**வாழ்க்கைக்கு**

நற்செய்தியைப் பரப்புவதில்
பங்காளிகள் ஆவோம்!

# 12 நற்கருணை ஆண்டவர்



12.1 இறுதி இரா உணவு

இயேசு இவ்வுலகிலிருந்து பிரிந்து செல்லுமுன் எங்களோடு என்றும் இருப்பதற்காக, பெரிய வியாழனன்று இறுதி இராவுணவின்போது நற்கருணையை ஏற்படுத்தினார். மேலும் அவரது நினைவாக அதனை மீண்டும் மீண்டும் செய்யுமாறு தம் திருத்தூதர்களுக்கு கட்டளையிட்டார். திருப்பலியினூடாக அச்சடங்கு உலகம் முடியுமளவும் தொடர்ந்து நடைபெற்று வருகின்றது. நற்கருணையில் இயேசு உயிருடன் பிரசன்னமாயிருக்கிறார்.

கத்தோலிக்க திருவழிபாட்டின் ஊற்றும் உச்சியும் நற்கருணையே ஏனெனில் கிறிஸ்து நற்கருணையில் உயிருடன் வாழ்கிறார். எனவே நற்கருணை **'அருளடையாளங்களின் அருளடையாளம்'** என அறிமுகம் செய்யப்படுகின்றது. திருப்பலியில் தம்மையே தந்தைக்கு பலியாக ஒப்புக்கொடுத்து நற்கருணை வழியாக தம்மையே எமக்கு உணவாகத் தருகின்றார்.

## தூய நற்கருணையின் சிறப்பியல்புகள்

### 1. அருளடையாளம்

நற்கருணை, கிறிஸ்து இயேசுவால் பெரிய வியாழனன்று நிறுவப்பட்ட, உயிருள்ள கிறிஸ்து எழுந்தருளியிருக்கின்ற மேலான அருளடையாளமாகும்.

## 2. உணவு

*''எனது சதையை உண்டு என் இரத்தத்தைக் குடிப்பவர் நிலைவாழ்வைக் கொண்டுள்ளார். நானும் அவரை இறுதி நாளில் உயிர்த்தெழச் செய்வேன். எனது சதை உண்மையான உணவு. எனது இரத்தம் உண்மையான பானம். எனது சதையை உண்டு எனது இரத்தத்தைக் குடிப்போர் என்னோடு இணைந்திருப்பர், நானும் அவர்களோடு இணைந்திருப்பேன்.'' இங்கே சதை, இரத்தம் என குறிப்பிடுவது அருளடையாள வடிவில் கிடைக்கப்பெறும் நற்கருணையையே (யோவான் 6: 54- 56).*

## 3. பலி

*பின்பு அவர் அப்பத்தை எடுத்துக் கடவுளுக்கு நன்றி செலுத்தி, அதைப் பிட்டு, அவர்களுக்குக் கொடுத்து, ''இது உங்களுக்காகக் கொடுக்கப்படும் எனது உடல். இதை என் நினைவாகச் செய்யுங்கள்'' என்றார். அப்படியே உணவு அருந்திய பின்பு அவர் கிண்ணத்தை எடுத்து, ''இந்தக் கிண்ணம் உங்களுக்காகச் சிந்தப்படுகிற எனது இரத்தத்தால் நிலைப்படுத்தப்படும் புதிய உடன்படிக்கை (லூக். 22:19-20).*

## 4. உடன்படிக்கை

*அப்படியே உணவு அருந்தியபின் கிண்ணத்தையும் எடுத்து, ''இந்தக் கிண்ணம் என் இரத்தத்தால் நிலைப்படுத்தப்படும் புதிய உடன்படிக்கை. நீங்கள் இதிலிருந்து பருகும் போதெல்லாம் என் நினைவாக இவ்வாறு செய்யுங்கள்'' என்றார் (1கொரி.11:25).*

## 5. நன்றிகூறுதல்

*பின்பு அவர் கிண்ணத்தை எடுத்து, கடவுளுக்கு நன்றி செலுத்தி அவர்களிடம், ''இதைப் பெற்று உங்களுக்குள்ளே பகிர்ந்துகொள்ளுங்கள்'' (லூக். 22:17).*

*பின்பு அவர் அப்பத்தை எடுத்துக் கடவுளுக்கு நன்றி செலுத்தி, அதைப் பிட்டு, அவர்களுக்குக் கொடுத்து, ''இது உங்களுக்காகக் கொடுக்கப்படும் எனது உடல். எனது நினைவாக செய்யுங்கள்'' என்றார் (லூக். 22:19).*

## 6. நினைவுகூருதல் (அனுபவித்தல்)

*கடவுளுக்கு நன்றி செலுத்தி, அதைப்பிட்டு, ''இது உங்களுக்கான என் உடல். என் நினைவாக இவ்வாறு செய்யுங்கள்'' என்றார் (1கொரி. 11:24).*

கிறிஸ்துவின் உடலை உண்டு, இரத்தத்தைப் பருகும் அனைவரும் கிறிஸ்துவுக்குள் வாழ்கின்றனர். கிறிஸ்துவும் அவர்களுள் என்றும் வாழ்கிறார். ஒரே கிறிஸ்துவைப் பெற்றுக்கொள்ளும் நாம் அனைவரும் ஒரே உடலாகிறோம். இவ்வுடலே 'கிறிஸ்துவின் மறையுடல்' எனும் திருச்சபை ஆகும். ஆகையால் அவரைப் போல் நாமும் உடைக்கப்பட, நொறுக்கப்பட, ஆயத்தமாக இருக்க வேண்டும். பிறர் நலம் உடையவர்களாக ஒருவர் ஒருவருடைய நன்மைக்காகவும், பொதுநன்மைக்காகவும், திருச்சபையின் நல்வாழ்வுக்காகவும் நேர்மையாக உழைத்தல், தியாகம் செய்தல் எமது கடமையாகும். கிறிஸ்து எம் அனைவருக்காகவும் ஒப்புக்கொடுத்த வாழ்க்கைப் பலியை முன்னெடுத்துச் செல்ல நாம் அனைவரும் பங்காளராக வேண்டும்.

## திருப்பலி - புதிய உடன்படிக்கையில் குறிப்பிடப்படும் பெயர்கள்

### 1. அப்பம் பிட்குதல்

*அவர்கள் வழியில் நிகழ்ந்தவற்றையும் அவர் அப்பத்தைப் பிட்டுக் கொடுக்கும்போது அவரைக் கண்டுணர்ந்துகொண்டதையும் அங்கிருந்தவர்களுக்கு எடுத்துரைத்தார்கள். (லூக். 24: 35)*

*அவர்கள், திருத்தூதர் கற்பித்தவற்றிலும் நட்புறவிலும், அப்பம் பிடுவதிலும், இறைவேண்டலிலும் உறுதியாய் நிலைத்திருந்தார்கள். மக்கள் அனைவரிடமும் அச்சம் நிலவியது. (தி.ப. 2:42)*

### 2. ஆண்டவரின் திருவிருந்து

*இந்நிலையில் நீங்கள் ஒன்றாகக் கூடி வந்து உண்பது ஆண்டவரின் திருவிருந்து அல்ல. (1கொரி. 11:20)*

### 3. புதிய பாஸ்கா விழா

*ஆகையால் பழைய புளிப்பு மாவைத் தவிர்க்க வேண்டும். தீமை, பரத்தைமை போன்ற புளிப்பு மாவோடு அல்ல, மாறாக நேர்மை, உண்மை போன்ற புளிப்பற்ற அப்பத்தோடு பாஸ்காவைக் கொண்டாடுவோமாக. (1கொரி. 5:8)*

### 4. கிறிஸ்துவின் உடலில் பங்கேற்றல்

*கடவுளைப் போற்றித் திருவிருந்துக் கிண்ணத்திலிருந்து பருகுகிறோமே, அது கிறிஸ்துவின் இரத்தத்தில் பங்கு கொள்ளுதல் அல்லவா! அப்பத்தைப்பிட்டு உண்ணுகிறோமே, அது கிறிஸ்துவின் உடலில் பங்கு கொள்ளுதல் அல்லவா! (1கொரி. 10:16)*

## நற்கருணையின் முன்னடையாளங்கள்

### ★ மெல்கிசெதேக் பலி

*சாலேம் நகரில் (எருசலேம்) குருவாகிய மெல்கிசேதேக் முதல்முறையாக அப்பமும் திராட்சை இரசமும் கொண்டுவந்து கடவுளுக்கு ஒப்புக்கொடுத்தார்.*

*(தொநூ. 14:18-20)*

### ★ மன்னா உணவு

*இஸ்ரயேல் மக்கள் எகிப்திய அடிமைத்தனத்திலிருந்து மீண்டும் வாக்குப் பண்ணப்பட்ட பூமியை நோக்கிச் சென்ற பயணத்தில் இறைவன் அவர்களை மன்னா என்னும் உணவால் போஷித்தார். (விப. 16)*

### ★ புளியாத அப்பத்தை உண்ணுதலும் கிண்ணத்தில் அருந்துதலும்

*எகிப்திய அடிமைத்தனத்திலிருந்து மீண்டு வெளியேறிய அந்த இரவில் அவர்கள் உடனடியாக வெளியேறியதை நினைவுகூர, வருடந்தோறும் பாஸ்கா உணவை உண்ணும்போது இஸ்ரயேல் மக்கள் புளியாத அப்பத்தை உண்டு கிண்ண த்தில் அருந்தினர். (விப. 12:15-20)*

### ★ அப்பங்களைப் பலுகச்செய்த அருங்குறி

*நற்செய்தியாளர்கள் நால்வரும் குறிப்பிட்ட ஒரே ஒரு அருங்குறி இதுவாகும். (மத். 14:15-21, மாற். 6:35 44, லூக். 9:12-17, யோவா. 6:5-13) திருப்பலிச்சடங்கில் பிரதான நிகழ்வாக இது நடைபெறுகிறது. அதாவது இயேசு அப்பத்தை எடுத்து நன்றி கூறி அதைப்பிட்டு பகிர்ந்து கொடுத்தார்.*

### ★ வாழ்வளிக்கும் உணவு பற்றிக் கற்பித்தல்

*''வாழ்வு தரும் உணவு நானே. என்னிடம் வருபவருக்குப் பசியே இராது, என்னிடம் நம்பிக்கை கொண்டிருப்பவருக்கு என்றுமே தாகம் இராது. (யோவா. 6:35)*

*நற்கருணை ஆண்டவரது, உணவை அருந்தும் நாம் அவர் அதில் உயிருடன் வாழ்கிறார் என்பதை ஏற்றுக் கொள்ளுவோம். அவர் நற்கருணையில் உயிர் வாழ்கிறார் என்பதற்கு இத்தாலியில் லன்சியானோ நகரில் இடம்பெற்ற புதுமை சிறந்த ஒரு உதாரணமாகும்.*

## லன்சியானோ நகரில் நடைபெற்ற நிகழ்வு




**12.2 நற்கருணை ஆண்டவர்**

*கி.பி 800ம் ஆண்டளவில் இத்தாலியில் லன்சியானோ நகரில் தூய லெகோனிசியனுக்காக அர்ப்பணிக்கப்பட்ட சிற்றாலயத்தில் சேவைசெய்த ஓர் துறவற சபைக் குருவானவர் திருப்பலி ஒப்புக்கொடுக்கும்போது, அப்பமும் திராட்சை இரசமும் இயேசுவின் திருச்சரீரமும் இரத்தமுமாக மாறுவதுபற்றி சந்தேகித்தார். ஒருநாள் அவர் திருப்பலியில் வசீகர வார்த்தைகளைச் சொல்லும்போது அப்பம் மாமிசமாகவும், திராட்சை இரசம் இரத்தமாகவும் மாறியதைக் கண்டார். அந்த மாமிசமும் இரத்தமும் லன்சியோனா நகரில் விசேட நற்கருணைப்பேழையில் வைக்கப்பட்டுள்ளது.*

*1574லும், 1970லும் இந்த மாமிசம் இரத்தம் பற்றிய விஞ்ஞான ஆய்வு இடம்பெற்றது. அதில் அந்த மாமிசம் ஒரு மனித உடலினுடையது எனவும், அந்த மாமிசம் மனித இதயத்திலிருந்து எடுக்கப்பட்டதெனவும், இரத்தம் AB பொசிட்டிவ் வகையைச் சேர்ந்தது எனவும் கூறப்பட்டுள்ளது. 12 நூற்றாண்டுகளாக சூழலின் தாக்கங்களுக்கு எவ்வித முற்காப்புமின்றி இருந்தபோதும் இந்த மாமிசமும், இரத்தமும் பழுதுறாது இருந்தது. மேலும் உடலிலிருந்து எடுக்கப்பட்ட பின் இரத்தத்தில் புரதம், கனிப்பொருட்கள் நிலைத்து நிற்பது சிறிது நேரத்திற்கே ஆயினும் இவ் இரத்தத்தில் புரதமும், கனிப்பொருட்களும் மாறாது தொடர்ந்து நிலைத்திருக்கின்றன.*

*1978ல் நாசா நிறுவனம் ரியூரின் நகரில் கிறிஸ்துவின் திருத்துகில் பற்றி ஓர் ஆய்வு நடத்தியது. அத்திருத்துகிலில் காணப்பட்ட இரத்தத்தின் இனமும் AB பொசி*

ட்டிவ் ஆகும். ரியூரின் நகர திருத்துகிலும், இந்த மாமிசத் துண்டிலும் ஒரே இன இரத்தம் ($AB^{+}$)காணப்படுவது முக்கிய சான்றாகும்.

திருப்பலியில் பக்தியுடனும் ஊக்கத்துடனும் பங்குபற்றுவது கிறிஸ்தவர்களாகிய எமது கடமையாகும். இயலுமான எல்லா வேளைகளிலும் நற்கருணையை உட்கொண்டு உயிர் வாழும் கிறிஸ்துவினால் ஊட்டம் பெற வேண்டும். இந்த ஆன்ம உணவு இறையாட்சியை நோக்கிய பயணத்திற்கு எமக்கு உதவி புரிகிறது. நற்கருணை எழுந்தேற்றம் செய்து வைக்கப்பட்டிருக்கும் சந்தர்ப்பங்களில், தனியாகவும் குழுவாகவும் நற்கருணை ஆண்டவருக்கு மரியாதை செலுத்தி, செபிப்பதன் மூலம் இறையுறவை வளர்த்துக்கொள்வோம். அவ்வாறே ஆலயத்திற்குள் நற்கருணை எழுந்தேற்றம் செய்யப்பட்டிருப்பின் முழந்தாழ் பணிந்து ஆராதிக்க வேண்டும். நற்கருணை ஆண்டவரை பீடத்தின் மீது ஆராதனைக்காக எழுந்தேற்றம் செய்திருக்கும் போது இரு கால்களையும் மடித்து முழந்தாழ் பணிந்து ஆராதிக்க வேண்டும்.

**செயற்பாடு**

1. கத்தோலிக்க திருவழிபாடுகளில் நற்கருணைக்கு ஏன் முக்கிய இடம் கொடுக்கப்படுகிறது ?
2. நற்கருணையின் சிறப்பியல்புகள் நான்கு எழுதுக.
3. நற்கருணைப் பந்தியில் பங்குகொள்ளும் ஒருவரிடம் இருக்கவேண்டிய நற்பண்புகள் நான்கு குறிப்பிடுக.
4. புதிய ஏற்பாட்டில் திருப்பலியைக் குறிக்கும் நான்கு பெயர்களைத் தருக.
5. நற்கருணை பற்றிய முன்னடையாளங்கள் நான்கை குறிப்பிடுக.



**வாழ்க்கைக்கு**

தகுதியான முறையில் திருப்பலியில் பங்குபற்றி, திருவுணவைப் பெற்றுக்கொள்ளப் பழகிக்கொள்வோம்.

# 13 பாஸ்கா விருந்து



படம் 13.1
விடுதலைப்பயணம்

## பழைய ஏற்பாட்டின் பாஸ்கா விருந்து

**மகன்** : அம்மா இன்று எங்கள் வீட்டில் ஏதாவதொரு கொண்டாட்டம் நடைபெறப் போகின்றதா?

**அம்மா** : ஆம் மகனே, இன்று எங்களுக்கு பாஸ்கா விழாக் கொண்டாட்டம் யூதர்களாகிய எமக்கு இன்று ஒரு முக்கியமான நாள்.

**மகன்** : அம்மா பாஸ்கா விழா என்றால் என்ன?

**அம்மா** : நல்லது மகனே, அவதானமாகக் கேள். நான் ஒரு நாள் உமக்குச் சொன்னது ஞாபகமிருக்கும். அதாவது எமது மூதாதையர் எகிப்தில் அடிமைகளாக இருந்த காலத்தில் அடிமை வேலைகள் செய்து மிகவும் துன்பப்பட்டார்கள்.

**மகன்** : அம்மா எம் மூதாதையர் செய்த அடிமை வேலைகள் என்ன?

**அம்மா** : அவர்கள் எகிப்தில் செங்கல் அறுத்தல், கட்டிடங்களைக் கட்டுதல், விவசாயம், கைத்தொழில் போன்ற வேலைகளில் ஈடுபட்டனர். மேலும் அவர்கள் களஞ்சியசாலையுள்ள நகரங்களை அமைத்தல் போன்ற கடுமையான வேலைகளை செய்ய நிர்ப்பந்திக்கப்பட்டனர். இறைவன் எகிப்திய அடிமைத்தனத்தில் இருந்து எம்மூதாதையரை மீட்டெடுத்துத் திரும்பவும் தமது நாட்டிற்கு (இஸ்ரயேல்) அழைத்துவர மோசேயைத் தெரிந்தெடுத்தார்.

**மகன்** : *அம்மா, மோசேயால் அதை செய்ய முடிந்ததா?*

**அம்மா** : *ஆம் மகனே, இறைவன் மோசேயைத் தெரிந்தெடுத்து எகிப்தில் பார்வோன் மன்னனிடம் அனுப்பினார். இறைவன் அவர்களோடு இருந்து அவர்களைத் திடப்படுத்தினார்.*

**மகன்** : *பார்வோன் மன்னன் எங்கள் மக்களை (இஸ்ரயேல்) விடுதலை செய்தானா?*

**அம்மா** : *இல்லை மகனே, அதனால் இறைவன் எகிப்து மக்களுக்கு பத்துப் பெரும் துன்பங்களை அனுப்பினார். அவற்றில் பத்தாவது பெரும் துன்பம் தலைமகன் சாவு. பார்வோனின் தலைமகன் தொடங்கி, சிறையில் கிடந்த கைதியின் தலைமகன் வரை எகிப்து நாட்டின் எல்லா ஆண்பால் தலைப்பிறப்பையும் மற்றும் விலங்குகளின் அனைத்து ஆண்பால் தலையீற்றுக்களையும் ஆண்டவர் சாகடித்தார். எகிப்தில் பெரும் அழுகுரல் கேட்டது.*

**மகன்** : *அம்மா அப்பொழுது இஸ்ரயேல் மக்களுக்கு என்ன நடந்தது?*

**அம்மா** : *மகனே, அவர்களுக்கு எதுவும் நடக்கவில்லை. ஏனென்றால் இறைவன் மோசேக்கு இதைப்பற்றிய அறிவுரைகளை முன்பே வழங்கியிருந்தார். அதன்படி அவர்கள் செம்மறி ஆட்டை வெட்டி, அதன் இரத்தத்தை கதவின் மேல் சட்டத்திலும் இருநிலைக் கால்களிலும் பூசினார்கள். இறைச்சியை நெருப்பிலே வாட்டி, புளியாத அப்பத்துடனும், கசப்புக் கீரையுடனும் அன்றிரவே மீதிவைக்காமல் உண்டனர். இவ்வாறு செய்ததன் மூலம் அவர்கள் சாவிலிருந்து காப்பாற்றப்பட்டனர். அப்பொழுது ஆண்டவர் அவர்களுக்கு ஒரு கட்டளையைக் கொடுத்தார். 'இந்நாள் உங்களுக்கு ஒரு நினைவு நாளாக விளங்கும் இதனை ஆண்டவரின் விழாவாக தலை முறை தோறும் கொண்டாடுங்கள். இந்த விழா உங்களுக்கு நிலையான நியமமாக இருப்பதாக''(வி.ப 12:14).*

**மகன்** : *அம்மா, எனக்கு எங்கள் பாஸ்கா விழாவைப் பற்றி சொல்லித் தந்தமைக்காக நன்றி இப்போது எனக்கு இதைப்பற்றி நன்றாக விளங்குகின்றது.*

*யூதர்கள் வருடந் தோறும் பாஸ்கா விழாவை வெகுவிமரிசையாகக் கொண் டாடுவார்கள். அதில் பாஸ்கா உணவுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. பாஸ்கா செம்மறியும் மிக முக்கியமானதாகும்.''ஒரு ஆட்டினை உண்ண ஒரு வீட்டில் போதிய ஆள்கள் இல்லையெனில் உண்போரின் எண்ணிக்கைக்கும் உண்ணும் அளவுக்கும் ஏற்ப அண்டை வீட்டாரைச் சேர்த்துக் கொள்ளட்டும்'' (விப 12.4).*

**யூதப் பாஸ்கா உணவில் முக்கியத்துவம் பெற்றவை.**

*1. பாஸ்கா செம்மறி*

*2. புளியாத அப்பம்*

*3. கசப்புக் கீரை*

*4. திராட்சை இரசம்*

## புதிய ஏற்பாட்டின் பாஸ்கா உணவு



**படம் 13.2**
**திருப்பலி**

*புதிய ஏற்பாட்டில் பெரிய வியாழனன்று இயேசு தமது சீடர்களோடு உண்ட இறுதி இராவுணவு பாஸ்கா உணவாகும். அவ்வேளையில் இயேசு நித்தியத்திற்கும் நம்மோடு வாழத் திருஉணவாக திவ்விய நற்கருணையை ஏற்படுத்தியதன் மூலம் பாஸ்கா செம்மறியின் இடத்தை அவர் ஏற்றார். மறுநாள் தமது உயிரையே சிலுவையில் பலியாக்கி புதிய உடன்படிக்கையின் பாஸ்கா செம்மறியானார்.*

*பின்பு அவர் அப்பத்தை எடுத்துக் கடவுளுக்கு நன்றி செலுத்தி, அதைப்பிட்டு, அவர்களுக்குக் கொடுத்து, ''இது உங்களுக்காகக் கொடுக்கப்படும் எனது உடல் எனது நினைவாக இவ்வாறு செய்யுங்கள்'' என்றார் அப்படியே உணவு அருந்திய பின்பு அவர் கிண்ணத்தை எடுத்து; இந்தக் கிண்ணம் உங்களுக்காகச் சிந்தப்படுகிற எனது இரத்தத்தால் நிலைப்படுத்தப்படும் புதிய உடன்படிக்கை'' (லூக் 22: 19-20).*

*கிறிஸ்துவின் பாஸ்காப் பலியை உலக முடிவுவரை திருப்பலியில் நினைவு கூர நாம் அழைக்கப்படுகின்றோம்.*

## காலடிகளைக் கழுவுதலும் அன்பின் கட்டளையும்



படம் 13.3
**பெரிய வியாழன் கிறிஸ்து திருத்தூதர்களின் பாதங்களைக் கழுவுதல்.**

தூய மத்தேயு, மாற்கு, லூக்கா ஆகிய ஒத்தமை நற்செய்தியாளர்கள் கிறிஸ்து பெரிய வியாழனன்று திவ்விய நற்கருணையை ஏற்படுத்தியதைக் குறிப்பிட்டாலும், நற்செய்தியாளர் யோவான் இதற்குப் பதிலாக இறுதி இராவுணவின் பின், கிறிஸ்து தமது திருத்தூதர்களின் காலடிகளைக் கழுவும் நிகழ்வைக் குறிப்பிடுகின்றார். ஏனெனில் நற்கருணை விருந்தில் பங்கேற்போர் அன்பின் கட்டளையைக் கடைப்பிடிக்க வேண்டும் என்பதால் ஆகும். அதனை இயேசு தமது இறுதி இராவுணவின் போது பின்வருமாறு உறுதிப்படுத்துகின்றார். பெரிய வியாழனன்று இயேசு திவ்விய நற்கருணை, குருத்துவம் என்னும் அருளடையாளங்களை நிறுவினார்.

''நீங்கள் என்னைப் 'போதகர்' என்றும் 'ஆண்டவர்' என்றும் அழைக்கின்றீர்கள். நீங்கள் அவ்வாறு கூப்பிடுவது முறையே.நான் போதகர் தான். ஆண்டவர் தான். ஆகவே ஆண்டவரும் போதகருமான நான் உங்கள் காலடிகளைக் கழுவினேன் என்றால் நீங்களும் ஒருவர் மற்றவருடைய காலடிகளைக் கழுவ கடமைப்பட்டிருக்கறீர்கள்...... ஒரு வர் மற்றவரிடம் அன்பு செலுத்துங்கள் என்னும் புதிய கட்டளையை நான் உங்களுக்குக் கொடுக்கின்றேன். நான் உங்களிடம் அன்பு செலுத்தியது போல நீங்களும் ஒருவர் மற்றவரிடம் அன்பு செலுத்துங்கள்''

*(யோவா 13:13-14,34)*

இதன் மூலம் திவ்விய நற்கருணைச் சடங்கின் உண்மை அர்த்தம் மேலெடுத்துக் காட்டப்படுகின்றது.

கொரிந்திய கிறிஸ்தவ சமுதாயம் அன்பையும், பகிர்வையும் கடைப்பிடிக்காது நற்கருணை விருந்தில் பங்குபற்றினர். அது முறையற்றது என்பது புனித பவுல் கொரிந்திய சபைக்கு எழுதிய அறிவுரையின் மூலம் உறுதிப்படுத்தப்படுகின்றது.

இவ்வறிவுரைகளைக் கொடுக்கும் நான் உங்களைப் பாராட்டமாட்டேன். ஏனெனில் நீங்கள் ஒன்று கூடி வரும் போது நன்மையை விடத் தீமையே மிகுதியாக விளைகிறது. முதலாவது நீங்கள் சபையாகக் கூடிவரும் போது உங்களிடையே பிளவுகள் இருப்பதாக கேள் விப்படுகின்றேன். *(1 கொரி 11:17-24)*

இதனால் நற்கருணை விருந்தில் பங்குபற்ற முதலில் அன்புக்கட்டளையின் படி வாழ்வோராக இருத்தல் வேண்டும். அன்பின் கட்டளைக்கு எதிராகச் செயற்பட்டால் நாம் எமது பாவங்களுக்கு மன்னிப்புப் பெற்று நற்கருணை ஆண்டவரில் பங்காளியாக வேண்டும்.

இதனால் திவ்விய நற்கருணை என்பது தொடர்ந்து நடைபெறவேண்டிய சடங்கு மட்டுமல்ல, அன்பின், ஒற்றுமையின் அருளடையாளமுமாகும். ஆதலால் ஞாயிறு திருப்பலி என்பது அன்பினதும் பணியினதும் நினைவு கூர்தலாகும். வாரம் முழுவதும் பிறருக்காக உடைக்கப்பட்டு, நொறுக்கப்பட்டு, வாழ்ந்த பலி வாழ்வை கிறிஸ்துவின் பலியோடு ஒன்றிணைத்து, அவரின் வழியாக இறைவனுக்கு ஒப்புக் கொடுத்தலாகும்.

தூய யோவான் கிறிஸ்தவ சபைக்கு அழைப்பு விடுப்பது, நற்கருணையின் உண்மை அர்த்தமாகிய அன்பையும், பணியையும் தமது வாழ்வாக்குவதற்காகும் (மற்றவர்களின் காலடிகளைக் கழுவி) இத்தகைய மாண்புமிகு திருப்பலியை எமது வாழ்வில் அர்த்தமுடையதாக்கிக் கொள்வதற்கு பின்னரும் பாடல் எமக்கு அழைப்பு விடுக்கின்றது.

**அன்பும் நட்பும் எங்குள்ளதோ**
**அங்கே இறைவன் இருக்கின்றார்**

**கிறிஸ்துவின் அன்பு நம்மையெல்லாம்**
**ஒன்றாய்க் கூட்டிச் சேர்த்ததுவே**
**அவரில் அக்களித்திடுவோம் யாம்**
**அவரில் மகிழ்ச்சி கொள்வோமே**

**ஜீவிய தேவனுக்கஞ்சிடுவோம்**
**அவருக்கன்பு செய்திடுவோம்**
**நேரிய உள்ளத்துடனே யாம்**
**ஒருவரை யொருவர் நேசிப்போம்.**

## நற்கருணையைப் பெறுவதற்கு செய்ய வேண்டிய ஆன்மீக, உடல்ரீதியான ஆயத்தங்கள்.

ஆன்மீக ஆயத்தம் ⟶ பாவத்தில் இருந்து விடுபடல்

சாவான பாவத்தோடு நற்கருணையைப் பெறுவது முறையல்ல. அவ் வேளையில் ஒப்புரவு அருளடையாளத்தைப் பெற்றுக் கொள்வதுடன், அற்ப பாவங்களுக்குத் திருப்பலியின் தொடக்கத்தில் மனத்துயர் வழிபாட்டு வேளையில் எமது பாவங்களுக்கு மனஸ்தாபப்பட்டு மன்னிப்பைப் பெற்று நற்கருணையைப் பெறத் தகுதியுள்வர்களாக வேண்டும்.

> கனமான ஒரு காரணம் இருந்து மற்றும் பாவ அறிக்கையிடும் வாய்ப்பு இல்லாதிருந்தாலன்றி, கனமான பாவம் இருப்பதாக உணரும் ஒருவர் முன்னதாக அருளடையாளப் பாவ அறிக்கை செய்யாமல், திருப்பலி நிறைவேற்றவோ ஆண்டவரின் உடலைப் பெறவோ கூடாது. இத்தகைய சூழ்நிலையில் அவர், கூடிய விரைவில் பாவ அறிக்கை செய்யும் எண்ணத்தை உள்ளடக்கிய நிறைவான மனத்துயரை வெளியிடக் கடமைப்பட்டுள்ளார் என்பதை நினைவுகூற வேண்டும்.
>
> திருச்சபைச்சட்டம் 916

உடல் ரீதியான ஆயத்தம்  திருப்பலி ஆரம்பமாவதற்குக் குறைந்த பட்சம் ஒரு மணித்தியாலத்திற்கு முன் உணவோ, பானமோ அருந்தாமல் இருத்தல் (மருந்து,தண்ணீர் அருந்தலாம்)

## செயற்பாடு

1. இஸ்ரயேல் மக்கள் எகிப்தில் அடிமைகளாக இருந்தபோது, செய்த அடிமை வேலைகள் நான்கு எழுதுக.
2. இஸ்ரயேல் மக்களை மீட்க மோசேக்குத் துணையாக இருந்தவர் யார்?
3. யூத பாஸ்கா உணவில் பயன்படுத்தப்பட்ட நான்கு வகை உணவுகளைக் குறிப்பிடுக.
4. பெரிய வியாழனன்று நடைபெற்ற பிரதான நிகழ்வுகள் இரண்டினை எழுதுக.
5. நற்கருணை பெறுவதற்கு தேவையான ஆன்மீக மற்றும் உடல் ரீதியான ஆயத்தங்களை விபரிக்குக.



**வாழ்க்கைக்கு**

கிறிஸ்துவுடலைப் பெறும் நாம்
கிறிஸ்துவைப் போல உடைக்கப்
படவும் நொறுக்கப்படவும் தியாகம்
செய்யவும் வேண்டும் என்பதால்
அதற்காக எம்மைப் பயிற்றுவிப்போம்.

# 14 கல்வாரிப்பலி

## பழைய ஏற்பாட்டுப் பலிகள்



**14.1 பழைய ஏற்பாட்டில் தூபக்காணிக்கை நடைபெறுகின்றது**

*இஸ்ரயேலரின் வழிபாடுகளில் பிரதான செயற்பாடு பலி செலுத்துவதாகும். இப்பலிகளுக்காக தானிய வகைகள், பானவகைகள், மிருகங்கள் பயன்படுத்தப்பட்ட போதும் இவற்றுள் முக்கியமானதாக விளங்கியது மிருகப்பலியாகும். ஏனெனில் மிருகங்களின் இரத்தத்தில் உயிருள்ளது . அவ்வுயிர் இறைவனுக்குச் சொந்தமானது. (லேவி 3 : 17, 7 : 26, 17 : 10 - 11)*

### பலி செலுத்துவதன் நோக்கம்

★ *பாவங்களுக்குப் பரிகாரமாக*

★ *இறைவனோடு உறவை ஏற்படுத்துவதற்காக*

**இஸ்ரயேலரின் பலிகளைப் பிரதான இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம்**

*1.* **எரிபலி** - *இதற்காகக் காளைகள் (லேவி 1 : 3 -9) செம்மறி அல்லது வெள்ளாடு (லேவி 1 : 10 -13), பறவைகள் (காட்டுப்புறா, மாடப்புறா (லேவி 1 : 14 - 17) பயன்படுத்தப்பட்டன.*

*2.* **தானிய பலி** - *உணவு, பானம் (மா, தானியம், எண்ணெய், திராட்சை இரசம், அப்பம்)*

**எரிபலிகள் நான்கு வகைப்படும்.**

1. *முழுமையான எரிபலி*
2. *நல்லுறவுப் பலி*
3. *குற்றநீக்கப் பலி*
4. *பாவநிவாரணப் பலி*

## புதிய ஏற்பாட்டுப் பலி
### கல்வாரிப் பலி

பழைய ஏற்பாட்டுப் பலிகள் அனைத்தையும் கிறிஸ்து கல்வாரிப் பலியினால் முழுமையாக்கினர். ஆதலால் பழைய ஏற்பாட்டில் பல்வேறு பலிகள் காணப்பட்டாலும், புதிய ஏற்பாட்டில் ஒரே ஒரு பலி தான் இடம்பெற்றது. அது கல்வாரிப் பலியாகும். கல்வாரிப் பலி எக்காலத்துக்குமுரியதும், அளவில்லாததும், நித்தியமானதும், தூய்மையானதுமான பலியாகும்.

அவர் பலியாகப் படைத்த இரத்தம் வெள்ளாட்டுக் கிடாய்கள், கன்றுக்குட்டிகள் ஆகியவற்றின் இரத்தம் அல்ல. அவரது சொந்த இரத்தமே. அவர் ஒரே ஒரு முறை தூயகத்திற்குச் சென்று ..... ஆனால் கிறிஸ்துவின் இரத்தம் வாழும் கடவுளுக்கு நாம் வழிபாடு செய்யுமாறு, சாவுக்கு அழைத்துச் செல்லும் செயல்களிலிருந்து நம்மனச்சான்றை எத்துணை மிகுதியாய்த் தூய்மைப்படுத்துகிறது.

**எபி 9 : 12 - 14**

யூத வழிபாட்டு முறைகளைப் நிறைவுப்படுத்தி கிறிஸ்து கல்வாரி மலைமீது சிலுவையில் பலியானார். அது முழுமையான பலியாகும். ஆதலால் மிருகப்பலிகளையோ அல்லது வேறு பலிகளையோ திரும்பத் திரும்ப நிறைவேற்ற வேண்டிய அவசியமில்லை. மேலும் அவர் புதிய உடன்படிக்கையில் பாஸ்கா செம்மறியாகி மனிதருக்கும் இறைவனுக்குமிடையில், உறவை வளர்க்கும் உன்னத குருவானார். குரு, திருப்பலி மூலம் கல்வாரிப் பலியை தொடர்ந்தும் நடைபெறச் செய்கிறார். இரத்தம் சிந்தாத வகையில் பலிபீடத்தில் அருளடையாளமாக அதை நிறைவேற்றுகின்றார்.



**படம் 14.2**
**நற்கருணை வசீகரம்**

பலி ஒப்புக்கொடுப்பதன் மூலம் இறைவனுடன் உறவை வளர்த்துக் கொள்வதனால், கிறிஸ்தவர்களின் முழு வாழ்வும், இறைவனுக்கு ஒப்புக் கொடுக்கும் பலியாக மாறவேண்டும். அன்றாடம் செய்யும் வேலைகள், துன்ப துயரங்கள், மகிழ்ச்சி அனைத்தையும் இறைவனுக்கு ஒப்புக் கொடுக்கும் காணிக்கையாக மாற்றிக் கொள்ள வேண்டும்.

அவ்வாறாயின் இவை அனைத்தையும் இறை மகிமைக்காக ஒப்புக்கொடுக்க வேண்டும். எமக்கு வழங்கப்படும் பொறுப்புக்கள், கடமைகளை சரியாக நிறை வேற்றுவதன் மூலம் கிறிஸ்துவின் சீடத்துவத்திற்குச் சான்று பகர்ந்து, சமுதாயத்தில் பயனுள்ளவர்களாவோம். இவ்வகையில் எமது அன்றாட வாழ்வு கடவுளுக்கு ஏற்ற பலியாகும்.

மனித பலவீனத்தால் பல சந்தர்ப்பங்களில் பாவத்திற்கு உட்படுவதனால் இறை உறவை இழந்துவிடுகின்றோம். அச்சந்தர்ப்பத்தில் தவறுகளை (பாவங்களை) ஏற்றுக்கொண்டு, உண்மையான மனஸ்தாபத்துடன் ஒப்புரவு அருளடையாளத்தினைப் பெற்றுக்கொள்வதற்கு பழகிக் கொள்ள வேண்டும். நாமும் பாவத்தில் மரித்து, கிறிஸ்துவின் புதிய வாழ்வைப் பெற கல்வாரிப் பலியுடன் இணைந்து கொள்வோம்.

நாம் வாழும் சமுதாயத்தில் துன்ப துயரங்களில், இயலாமையில், பலவீனங்களில் வாடுவோருக்கு உதவுவது கிறிஸ்தவர்களாகிய எமது பொறுப்பு என்பதைப் புரிந்துகொண்டு விழிப்புடன் செயலாற்றுவோம். கிறிஸ்துவின் முன் மாதிரியைப் பின்பற்றி சமுதாயத்தில் ஆதரவற்றோர், அனாதைகள், நோயாளிகள், பாவிகள் மட்டில் அன்புடனும் கருணையுடனும் செயற்படுவோம். இதற்காக எமது நேரம், சக்தி, பணம், திறமை என்பவற்றைப் பயன்படுத்திப் பொதுநலனுக்காக உழைக்க வேண்டும். இவ்விதமாக எமது அன்றாட வாழ்வு இறைவனுக்குச் செலுத்தும் பலியாகும். இறுதித் தீர்ப்பின்போது கிறிஸ்து இயேசு எம்மை அளக்கும் அளவு கோலும் இதுவேயாகும். (மத் 25 : 41 - 46 உடலைச் சார்ந்த நற்செயல்கள்) ஆதலால் எமது வாழ்வை பிறருக்காக அர்ப்பணித்து, நல்வாழ்வு வாழ்ந்து, கிறிஸ்துவுடன் எமது உறவை வளர்த்து இறைவனுக்கு ஒப்புக்கொடுக்கும் பலியாக்குவோம்.

**செயற்பாடு**

1. பழைய ஏற்பாட்டில் பலி ஒப்புக்கொடுத்ததன் நோக்கங்கள் இரண்டினை எழுதுக.
2. தானியப் பலிக்காகப் பயன்படுத்திய பொருட்கள் நான்கினை எழுதுக.
3. இஸ்ரயேலரின் பலிகளின் பிரதான இருபகுதிகளைக் குறிப்பிடுக.
4. கல்வாரிப்பலி உன்னதமான பலியாக விளங்குவதற்கான காரணங்கள் இரண்டு தருக.
5. பிறருக்காக உம்மை பலியாக்கக் கூடிய சந்தர்ப்பங்கள் இரண்டினைத் தருக.



**வாழ்க்கைக்கு**

திருப்பலிக்கு முன்னும் பின்னும் சில நிமிடங்கள் செபிக்க கற்றுக் கொள்ளவும்.

# 15 தியாக வாழ்வின் முன்மாதிரிகை

## தூய இரண்டாம் அருளப்பர் சின்னப்பர்



15.1 திருத்தந்தை தூய இரண்டாம் அருளப்பர் சின்னப்பர்

*1920.05.18 ஆம் திகதி போலந்தில் பிறந்தார். இவரது இயற்பெயர் கார்ல் ஜோசப் வொய்ரொல்லா. தாயின் வயிற்றிலிருந்தபோதே தமது வாழ்நாள் முழுவதிலும் இறை பராமரிப்பைப் பெற்றுக் கொண்ட இவரது வாழ்வு, துன்பம் நிறைந்ததாகும். பல சவால்களுக்கு மத்தியிலும் தமது கல்விச் செயற்பாடுகளை சிறப்புடன் மேற் கொண்டு உயர் கல்வியையும் பெற்றார்.*

*இளம் வயதில் பயங்கரமான வாகன விபத்திற்குள்ளானார். மருத்துவரும் அதிசயிக்கும் வண்ணம் நலம் பெற்ற இவருக்கு குருவாக வர வேண்டுமென்ற ஆவல் ஏற்பட்டது. 1942 இல் ஜகிலோனியா, பல்கலைக்கழகத்தில் இரகசியமாக நடாத்தப்பட்ட, இறையியல் பீடத்தில், நான்கு மாணவர்களுடன் சேர்ந்து, ஆயர் இல்லத்தில் தங்கி கல்வி கற்றார். 1946 இல் குருவாகவும், 1958 இல் ஆயராகவும் அபிஷேகம் பெற்ற இவர் 1967 இல் கர்தினாலாகி, 1978 இல் இரண்டாம் அருளப்பர் சின்னப்பர் என்ற பெயரில் திருத்தந்தையாக தெரிவு செய்யப்பட்டார்.*

*தூய இரண்டாம் அருளப்பர் சின்னப்பர், 129க்கும் அதிகமான நாடுகளுக்குப் பயணம் செய்துள்ளார். அவர் பயணித்த நாடுகளுள் இலங்கையும் ஒன்றாகும். திருத்தந்தை 1995 தைமாதம் 20 ஆம் திகதி இலங்கைக்கு வருகை தந்து, தை 21 ஆம் திகதி வண. யோசேவாஸ் அடிகளாரை அருளாளர் நிலைக்கு உயர்த்தினார். அவரால் புனிதராகவும், அருளாளராகவும் உயர்த்தப்பட்டவர்களின் எண்ணிக்கை 1823 ஆகும். இன, மத பேதமின்றி யூத செபக்கூடத்திற்கும் (1986) இஸ்லாமிய பள்ளி வாசலுக்கும் (2001) சென்ற முதலாவது திருத்தந்தை இவராவார். கீழைத்தேய ஒத்தோடொக்ஸ் சபை ஆயரின் வேண்டுகோளுக்கிணங்க, கத்தோலிக்கரல்லாத கிறிஸ்தவர்கள் அதிகமாக வசிக்கும் நாடு ஒன்றுக்கு சென்ற முதல் திருத்தந்தையும் இவரே. இவர் 14 சுற்று மடல்களையும், 110 அப்போஸ்தலிக்க உரைகளையும், 11 அப்போஸ்தலிக்க அறிவுரைகளையும், பல கட்டுரைகளையும் எழுதியுள்ளார். அவர் எழுதிய "குறொசிங் த திறஷ்கோல்ட் ஓப் ஹோப்" (*Crossing the threshold of hope*) என்ற நூல் 40 மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டு, அதன் பிரதிகள் மில்லியன் அளவில் விற்பனையாகியுள்ளது. அவர் தனது வாழ்வில் மரியன்னை மீது கொண்டிருந்த பக்தி வெளிப்படையானதொன்றாகும்.*

ஜேர்மனியை மேற்கு, கிழக்கு என வேறுபடுத்திய பேர்லின் மதிலை உடைத்து நாட்டை ஒன்றுபடுத்துவதில் முன்னின்று செயற்பட்டவர் இவரே. வறிய நாடுகளை அடிமைப்படுத்தும் செல்வந்த நாடுகளுக்கெதிராக துணிவுடன் குரல் கொடுத்தார். 1981.05.13 ஆம் திகதி துருக்கி இனத்தைச் சேர்ந்த அலி அகா என்பவரால் சுடப்பட்டாலும், இறைபராமரிப்பால் மரணத்திலிருந்து காப்பாற்றப்பட்டார். சிறைச்சாலைக்குச் சென்று தன்னைச் சுட்டவனுக்கு மன்னிப்பு கொடுக்கவும் இவர் தயங்கவில்லை.

இவரின் வாழ்க்கையிலிருந்து நாம் பெற்றுக் கொள்ளக்கூடிய முன்மாதிரிகைகள் ஏராளம். வறுமை, இயலாமையிலும் மனந்தளராமல் வாழ்க்கையில் வெற்றி பெறுதல், நோயினால் பீடிக்கப்பட்டாலும் தமது பொறுப்புக்களை தவறாது நிறைவேற்றுதல், எதிரியை மன்னித்தல், சிறுவயதிலிருந்தே துன்ப துயரங்களையும், வேதனைகளையும் தாங்கிக் கொள்ளல், இறைபராமரிப்பிற்கு கீழ்ப்படிதல், உண்மை, நேர்மைக்காக குரல் கொடுத்தல், தமது வாழ்க்கை முழுவதும் கிறிஸ்துவுக்காகச் சாட்சி பகருதல் என்பன இவற்றில் சிலவாகும்.

2005 சித்திரை மாதம் 02 ஆம் திகதி இறைவனடி சேர்ந்த இவர் 2011 வைகாசி மாதம் 01 ஆம் திகதி அருளாளர் நிலைக்கும், 2014 சித்திரை 27 ஆம் திகதி **புனிதராகவும்** உயர்த்தப்பட்டார்.

## அருளாளர் அன்னை திரேசா



**படம் 15.2**
**அன்னை திரேசா**

1910.08.26 ஆம் திகதி அல்பேனியா என்ற ஊரில் பிறந்தார். மேரி திரேசாவின் திருமுழுக்குப் பெயர் அக்னெஸ் ஆகும். இவருக்கு ஒரு மூத்த சகோதரனும் சகோதரியும் இருந்தனர். வறுமையற்ற நிலையில் மகிழ்ச்சியாகக் காலத்தைக் கழித்தனர். இவரது ஏழு வயதில் தந்தையை இழந்ததால், தாயும் பிள்ளைகளும் துன்ப நிலைக்கு ஆளாகினர். தாய் முகங்கொடுத்த துன்பம் நிறைந்த வாழ்க்கையை திரேசா கண்டாள். இழந்த தந்தையின் அன்பிற்குப் பதிலாக இறைத்தந்தையின் அன்பைப் பெற, அவரிடம் அதிகம் நெருங்கிச் சென்றார். குடும்பத்தில் பல்வேறு துன்ப துயரங்கள் ஏற்பட்ட போது, செபம் செய்வதற்காக தனியாகவும், குடும்பமாகவும் ஆலயத்திற்குச் செல்லப் பழகிக் கொண்டாள். ஆலயப் பணிகளுக்கு அதிக ஊக்கம் காட்டிய அவர், கல்வியிலும் சிறந்து விளங்கினார்.

ஆசிரியராகவும், அருட்சகோதரியாகவும் விரும்பியதால் பதினாறு வயதில் குடும்பத்திலிருந்து விடைபெற்று, லொறற்றோ சபையில் இணைந்த இவர் 1931.05.24 ஆம் திகதி திரேசா என்ற பெயரில் தமது முதல் துறவற வார்த்தைப்பாட்டை மேற்கொண்டார். கல்கத்தாவில் புனித மரியாள் கல்லூரியில் ஆசிரியராகப் பணிபுரிந்தார். தினமும் பாடசாலைக்கு புகையிரதத்தில் பயணம் செய்யும்போது அவரின் வாழ்க்கையில் ஒரு திருப்பம் ஏற்பட்டது. வீதியின் இருபக்கமும் உள்ள சேரிவாழ் மக்களின் வாழ்க்கை தொடர்பாக விசேட கவனம் செலுத்தினார். இக் கைவிடப்பட்ட மக்களுக்கு உதவிபுரிய விரும்பினார். திருத்தந்தையிடம் விசேட அனுமதி பெற்று 1948.08.17 ஆம் திகதி, **அன்பின் கன்னியர் சபையை** ஆரம்பித்தார். ஆதரவற்ற நோயாளிகள், ஏழைகள், அனாதைகள் போன்ற பிள்ளைகளுக்கு பணிபுரிய கல்கத்தாவை மத்திய நிலையமாக்கிக் கொண்டார்.

உயிரிழக்கும் நிலையில் வீதியின் இருபக்கமும் விழுந்து கிடந்தவர்கள், மனித நேயத்துடனும் பிறரின் பாதுகாப்புடனும் உதவியுடனும் இறப்பதற்கு வழி சமைத்துக் கொடுத்தார். அப்பகுதியின் பொறுப்பதிகாரியிடம் மரணத் தருவாயிலிருக்கும் அநாதைகளைப் பராமரிக்க வீடொன்று தருமாறு கேட்டார். எயிட்ஸ் நோயினால் பீடிக்கப்பட்டு, இறக்கும் தருவாயில் இருப்பவர்களை சமுதாயம் அருவருப்புடன் கண்ணோக்கியது. சில சந்தர்ப்பங்களில் கொன்று போட்டது. வைத்தியசாலைகளிலும் அவர்களை ஏற்றுக்கொள்ள மறுத்தபோது நியூயோர்க் நகரபிதாவை சந்தித்து அந்நோயாளிகளைப் பராமரிக்க வீடொன்றைத் தரும்படி கேட்டார். அக்கோரிக்கையின் படி கிடைத்த வீட்டில் எயிட்ஸ் நோயாளரைப் பராமரிக்க அருட்சகோதரிகளை நியமித்தார். எயிட்ஸ் நோயாளருக்கான இல்லம் **முதன்முதலில்** நியூயோர்க் நகரில் 1985 இல் ஆரம்பிக்கப்பட்டது.

வீதியோரங்களில் இருந்த பிள்ளைகளுக்கு பாடசாலையொன்றை ஆரம் பித்தார். அப்பாடசாலைகளுக்கு வரும் பிள்ளைகள் அசுத்தமான சூழலில் இருந்து வருகிறவர்களாக இருந்தனர். அவர்களை அன்புடன் வரவேற்று அவர்களின் உடலையும், ஆடைகளையும் சுத்தம் செய்து உணவளித்து கல்விபுகட்டினார். சேரிகளில் வாழ்வோரை சந்திப்பது அவரின் வழக்கம். சாதி, மதம் பாராமல் கைவிடப்பட்டோர், அநாதைகள், நோயாளிகள், மரணத்தருவாயிலுள்ளவர்களுக்கு அவரின் அரவணைப்பும், அன்பும் குறைவில்லாது கிடைத்தது. அவரிடமிருந்த ஐந்து ரூபா பணத்தில் ஆரம்பித்த சமூக சேவையானது இறையருளினால் மிகவும் பாரிய அளவில் வளர்ச்சியடையத் தொடங்கியது. பணக்காரர், அதிகாரிகள் அவரது சபையின் அருட்சகோதரிகள் ஆகியோரின் உதவி குறைவின்றி, அவருக்குக் கிடைத்தது. அன்பை இழந்தவர்களுக்கு அன்பையும், பாதுகாப்பையும் பெற்றுக் கொடுப்பது அவரின் முக்கிய நோக்கமாகும். அவரின் பணிகளில் மரணத் தருவாயிலிருக்கும் நோயாளிகள், எயிட்ஸ் நோயாளிகளுக்காக இல்லங்களை நடாத்தியது பிரதானமானதாகும். கிறிஸ்துவின் கல்வாரிப் பலிக்கு சாட்சிபகர்ந்த அவர் **''ஏழைகளுக்கு உதவும் தூதர்''**, **''எம்முடன் வாழும் புனிதை''** என்றெல்லாம் விருதுகளைப் பெற்றார். 1997.09.05. ஆம் திகதி இறைவனடி சேர்ந்த அன்னை திரேசா 2003.10.19 ஆம் திகதி தூய இரண்டாம் அருளப்பர் சின்னப்பரினால் அருளாளர் நிலைக்கு உயர்த்தப்பட்டார்.

## தூய மக்ஸிமிலியன் கோல்பே

இவர் 1894 தை மாதம் 8ஆம் திகதி பிறந்தார். சிறுவயதில் ஒருநாள் ஆலயத்தில் செபித்துக் கொண்டிருக்கையில் தேவ அன்னை இவருக்கு காட்சி கொடுத்தார். அவருடைய கையில் வெள்ளை நிற முடியும், சிவப்பு நிற முடியும், இருந்தன. வெள்ளை நிற முடி தூய்மையையும் சிவப்பு நிற முடி மறைசாட்சி வாழ்வையும் குறிக்கின்றது என்பதை அவர் உணர்ந்து கொண்டார். இரண்டு முடிகளில் ஒன்றைத் தெரிந்தெடுக்குமாறு கூறியபோது இரண்டையும் தெரிந்துகொள்ளும் தன் விருப்பத்தைத் தெரிவித்தார்.




**படம் 15.3**
**தூய மக்ஸ்மிலியன் கோள்பே அடிகள்**

1907 இல் கொன்வென்சுவல் பிரான்சிஸ்கன் குருமடத்தில் சேர்ந்து 1919 இல் குருவாகத் திருநிலைப்படுத்தப்பட்டார். தேவ அன்னை மீது கொண்ட ஆழமான பக்தியினால் **“மரியாயின் மாசற்ற இருதயசேனை’’** என்ற சபையை ஆரம்பித்தார். செபம், தபச்செயல்கள் வழியாக உலகின் பாவநிலையை தோற்கடிப்பது அதன் நோக்கமாகும். தேவ அன்னையின் அன்பு உலகம் முழுவதும் பரவிச் செல்ல ஆரம்பிக்கப்பட்ட இச்சபைக்கு **“போர் வீரர்’’** என்ற பத்திரிகை பெரிதும் உதவியது.

1939 ஐப்பசி 01 ஆம் திகதி ஆரம்பித்த இரண்டாம் உலக யுத்தத்தின் போது ஜேர்மன் நாடு போலந்தைக் கைப்பற்றியது. அவர்களுக்கு கோல்பே அடிகளாரின் அடிகளாருக்கு உதவி தேவைப்பட்டது. ஆனால் அடிகளார் அவர்களுக்கு உதவ முன்வரவில்லை. அவருக்கு இலஞ்சம் கொடுத்து அவர்களுக்கு தேவையானதை அச்சிட்டுப் பிரச்சாரம் செய்ய எடுத்த முயற்சி பயனளிக்கவில்லை. கோல்பே அடிகளாருக்கு சொந்தமான அச்சகத்தில் **‘‘உண்மை’’** என்ற பெயரில் பத்திரிகையொன்றை வெளியிட்டதற்காக அவரை சிறையில் அடைத்து கொடுரமாக வதைத்தனர். சிறையிலிருந்தபோது கைதிகளுக்கு அளப்பரிய சேவையாற்றிய அவர் தேவ அன்னையின் பக்தியை வளர்ப்பதையும் கைவிடவில்லை.

சிறையிலிருந்து கைதியொருவர் தப்பி ஓடினால், சிறைக்கைதிகள் இருபது பேரை கொலை செய்வது வழக்கம். இதன்படி மரணத்திற்கு தெரிவு செய்திருந்த சிறைக்கைதிகளில் பிரான்ஸிஸ் என்பவரின் அழுகுரல் கோல்பே அடிகளாரின் நெஞ்சை நெகிழவைத்தது. பிரான்ஸிஸ் என்பவருக்குப் பதிலாக தன்னைக் கொல்லும்படி நாஸித் தலைவரிடம் வேண்டினார். கொலை செய்யத் தேர்ந்தெடுத்த இருபதுபேரில் கோல்பே அடிகளாரும் சேர்த்துக் கொள்ளப்பட்டார். மரணத்திற்கு தெரிவு செய்தவர்களை நிலவறையில் அடைத்து பட்டினியால் வதைத்துக் கொல்வது

வழக்கம். நிலவறையில் அவர்கள் கோல்பே அடிகளாருடன் **“அருள் நிறைந்த மரியே’’** என்ற செபத்தை செபித்தனர். பாடல்களைப் பாடினர். சிறைக்கைதிகள் படிப்படியாக இறந்தனர்.

சிலநாட்களுக்குப் பின் சிறைக்கூடத்திற்கு வந்த நாஸித்தலைவர் கோள்பே அடிகளார் மட்டுமே சுயநினைவுடன் இருப்பதைக் கண்டார். ஆதலால் அவரின் உடலில் விஷமேற்றிக் கொன்றனர். **‘‘அருள் நிறைந்த மரியே’’** என்ற செபத்தை உச்சரித்துக் கொண்டே அவர் 1941.8.14ல் இறந்தார். 1971 ஐப்பசி 17 ஆம் திகதி திருத்தந்தை ஆறாம் சின்னப்பரினால் அருளாளர் நிலைக்கும், 1982 ஐப்பசி 10 ஆம் திகதி திருத்தந்தை தூய இரண்டாம் அருளப்பர் சின்னப்பரினால் புனிதர் நிலைக்கும் உயர்த்தப்பட்டார்.

‘‘தன் நண்பனுக்காக உயிரைக் கொடுப்பதை விட சிறந்த அன்பு யாரிடமும் இல்லை’’ என்பது அவரின் முன்மாதிரிகையான வார்த்தையாகும்.

## அருள்பணி மைக்கல் றொட்றிகோ அடிகளார் (அ.ம.தி)



**படம் 15.4**
**வண. மைக்கல் றொட்றிக்கோ அடிகள்**

1927 ஆனி மாதம் 30 ஆம் திகதி தெஹிவளையில் நடுத்தர குடும்பத்தில் பிறந்த அருள்பணி மைக்கல் போல் றொட்றிக்கோ அடிகள் ஆரம்பக் கல்வியை தெஹிவளை புனித மரியாள் வித்தியாலயத்திலும், உயர் கல்வியை புனித பீற்றர் கல்லூரியிலும் பெற்று பின்னர் அக்கல்லூரியிலேயே ஆசிரியராகப் பணியாற்றினார். அமல மரித்தியாகிகள் துறவற சபையில் சேர்ந்து மேலதிக படிப்புக்காக உரோமை, பாரிஸ் போன்ற பல்கலைக்கழங்களில் இணைந்து கொண்டார். 1954.07.07 ஆம் திகதி குருவாகத் திருநிலைப்படுத்தப்பட்டார். பின் அம்பிட்டிய தேசிய குருமடத்தில் விரிவுரையாளராகப் பணியாற்றினார். பாரிஸ் பல்கலைக்கழகத்தில் விரிவுரையாளராகப் பணிபுரிய சந்தர்ப்பம் கிடைத்தும் அதனை நிராகரித்தார்.

**அவர் ஆற்றிய சேவைகளில் முக்கியமானவை சில.**

1. குருத்துவ வாழ்வை சேவைக் குருத்துவ நிலைக்கு கொண்டு செல்லல்.
2. பொருளாதாரத்திலும் சமூக ரீதியிலும் துன்புறும் ஏழை மக்களின் பிரச்சினைகளுக்கு தீர்வு காணல்.
3. இளைஞர்களின் பிரச்சினைகளைத் தீர்க்க முன்வருதல்.
4. பௌத்த, கிறிஸ்தவ சமயங்களுக்கிடையே நட்புறவையும், ஒற்றுமையையும் ஏற்படுத்தல்.
5. திருவழிபாட்டை தேசியமயமாக்கல்.

6. நீதியை அடிப்படையாகக் கொண்ட சமுதாயத்தை உருவாக்குதல்.

குருத்துவ வாழ்வில் ஒரு மாற்றத்தை ஏற்படுத்தி, புதிய முறையான குருமடம் ஒன்றை 1973 இல் கொழும்பில் அமைத்து, பின் பதுளை மறை மாவட்டத்திலுள்ள பண்டாரவளை நகரத்தில் **''சேவக செவன''** என்னும் பெயரில் குருமடத்தை நடாத்தி, குருக்கள், மக்களோடு நெருங்கிப் பணியாற்றும் வகையில் மாற்றியமைக்க முயற்சி செய்தார்.

பதுளை மறைமாவட்டத்தில் ஏழ்மையின் காரணத்தினால் துன்பப்படும் மக்களுக்காக புத்தள அளுகலவிட்ட என்னுமிடத்தில் **''சுபசெத்கெதர''** என்ற அமைப்பை உருவாக்கி,

1. ஏழைகளின் பக்கம் சார்ந்து, ஏழ்மையாக வாழ்ந்து ஏழ்மையை ஒழிக்க வழி தேடினார்.
2. அநீதிக்கும், நேர்மையீனத்திற்கும் எதிராகக் குரலெழுப்பி, ஏழை விவசாய மக்களுக்காகப் பாடுபட்டார்.
3. பொருளாதார ரீதியிலும், சமூக ரீதியிலும் துன்புறும் மக்களின் பிரச்சினைகளை முன்வைக்கக் கூடிய நிலையமொன்றை நடத்தினார்.
4. பிரதேசத்திலிருந்த யாசகர்களுக்கு புனர்வாழ்வளிப்பது அவரது தூதுப்பணியின் பிரதான பணியாகும்.
5. பல்வேறு கஷ்ட துன்பங்களினால் ஒடுக்கப்பட்ட மக்களை அதிலிருந்து மீட்டல்.

**இவ்வாறாக ஏழைகளை நோக்கமாகக் கொண்டு அவர் செய்த செயற் திட்டங்களில் பிரதானமானவை.**

1. தோட்டத் தொழிலாளர்களுக்காக குரல் கொடுத்தல்.
2. சமாதானம், நேர்மைக்காகக் குரல் கொடுத்தல்.
3. மக்களின் மனித உரிமைக்காகவும், மனித அபிவிருத்திக்காகவும் குரல் கொடுத்தல்.

1981 இல் புத்தள கிராமத்தில் **''சுபசெத்கெதர''** என்ற குடிசையில் பௌத்தர்களின் உதவியுடன் மிகப்பெரிய சேவையை ஆரம்பித்த இவர் 1987.11.10 ஆம் திகதி இரவு திருப்பலி ஒப்புக்கொடுக்கும் போது சுட்டுக் கொல்லப்பட்டார். அவர் எம்மைவிட்டுப் பிரிந்தாலும் அவர் ஆரம்பித்த தூதுப்பணியை தொடர்ந்தாற்ற கடமைப்பட்டுள்ளோம்.

## செயற்பாடு

1. *தூய இரண்டாம் அருளப்பர் சின்னப்பரில் காணப்பட்ட விசேட பண்புகள் நான்கினைத் தருக.*
2. *அருளாளர் அன்னை திரேசாவின் பணியைப் பெற்றுக் கொண்ட மூன்று வகையினரை எழுதுக.*
3. *புனித மக்ஸிமிலியன் கோள்பே அடிகளார் தம் வாழ்வில் கிறிஸ்துவுக்கு சாட்சி பகர்ந்த இரண்டு சந்தர்ப்பங்களைக் குறிப்பிடுக.*
4. *அருட்பணி மைக்கல் றொட்றிக்கோ அடிகளாரால் மேற்கொள்ளப்பட்ட சேவைகள் நான்கினை எழுதுக.*
5. *கிறிஸ்தவ அழைத்தலுக்கு சான்றுபகர நீர் செய்யக்கூடிய செயல்கள் நான்கினைத் தருக.*



**வாழ்க்கைக்கு**

*பிறரின் நலனுக்காக எம்மை அர்ப்பணிப்போம்.*

# 16 இறை அன்பு




முதல் மூன்று கட்டளைகள்




ஏனைய ஏழு கட்டளைகள்




## முதலாம் கட்டளை

''என்னைத் தவிர வேறு தெய்வங்கள் உனக்கிருத்தல் ஆகாது என் மீது அன்பு கூர்ந்து என் விதிமுறைகளைக் கடைப்பிடிப்போருக்கு ஆயிரம் தலை முறைக்கு பேரன்பு காட்டுவேன்''

*விப 20 : 3 - 6*

''உன் முழு இதயத்தோடும், முழு உள்ளத்தோடும் முழு ஆற்றலோடும், முழு மனத்தோடும் உன் கடவுளாகிய ஆண்டவரிடம் அன்பு கூர்வாயாக. உன்மீது நீ அன்பு கூர்வது போல் உனக்கு அடுத் திருப்பவர் மீதும் அன்பு கூர்வாயாக'' லூக் 10 :27

முதலாம் கட்டளை நம்பிக்கை, எதிர்நோக்கு அன்பை அடிப்படையாகக் கொண்டுள்ளது.

## நம்பிக்கை (விசுவாசம்)

எமது நம்பிக்கையின் மூலகர்த்தா அன்பினால் தம்மை வெளிப்படுத்தும் இறைவனாவார். இறைவனைப் பற்றிய அறிவின்மை எல்லாப் பாவங்களுக்கும் காரணமாகும். (உரோ 1 : 18 - 32). மனிதனின் முக்கிய கடமை இறைவனை நம்புவதும், அந் நம்பிக்கைக்கு துணிவுடன் சான்று பகருவதுமாகும்.

பாடசாலைப் படிப்பை முடித்துக்கொண்டு, சமுதாயத்திற்குள் காலடி வைத்த பின்பும் உலகியல் அறிவுக்குச் சமமாக நம்பிக்கையையும் வளர்த்துக் கொள்ள வேண்டும். உலக வாழ்வின் செயற்பாடுகள் நம்பிக்கைக்குப் பொருத்தமானதென்றால் அது மிகப்பெரிய கொடையாகும். நம்பிக்கையை வளர்த்துக் கொள்ள முதலாம் கட்டளை எமக்கு அழைப்பு விடுக்கின்றது.

ஆயனாக வாழ்ந்த **ஆபிரகாம்** இறைவன் மீது
கொண்ட நம்பிக்கையின் காரணமாக
நம்பிக்கையின் தந்தையென
அழைக்கப்படுமளவுக்கு ஆசீரைப்
பெற்றுக்கொண்டார்.

சவால்கள் நிறைந்த வாழ்விற்கு
முகம் கொடுத்த **மரியா**
நம்பிக்கையின் முன்மாதிரிகை
ஆவார்.

திருவிவிலியத்தில் வெளிப்படுத்தப்படும் அனைத்தையும் ஒரே விதமாக எம்மால் விளங்கிக் கொள்ள முடியாது. வளர்ந்தோரின் அறிவுத்திறன், பிள்ளைகளின் அறிவுத்திறனை விட அதிகரித்துச் செல்லுவது போல் இறை ஞானம், மனித ஞானத்தை விட பரந்தது கிறிஸ்தவன் இறையாட்சிக்கான மனிதப் போரட்டத்தில் மனிதன் தன்னிடமுள்ள சிறிய அளவிலான அறிவிலும் சக்தியிலும் மட்டும் நம்பிக்கை வைப்பது அறிவீனமாகும்.

உண்மையான ஒரே கடவுளை மட்டும் வழிபடுவதனால்

1. நாம் அவரை ஆராதிப்போம்.
2. நாம் அவரிடம் செபிப்போம்.
3. நாம் அவருக்கு பலி செலுத்துவோம்.
4. நாம் அவருக்கு நேர்த்திகளையும் பொருத்தனைகளையும் செய்வோம்.

## 1. ஆராதனை

இறைவனை ஆராதிப்பது என்பது அவரை எங்கள் இறைவனாக, படைத்தவராக, மீட்பராக, இவ்வுலகிலுள்ள அனைத்திற்கும் கடவுளாகவும் ஆளுபவராகவும் எல்லையற்ற இரக்கமும் அன்பும் உடையவராகவும் ஏற்றுக்கொள்வதாகும். ''உன் கடவுளாகிய ஆண்டவருக்கு அஞ்சி நட! அவருக்குப் பணிந்து அவர் பெயராலே ஆணையிடு!'' (இச. 6 : 13.) இறைவனைத் தவிர வேறு எதுவும் இவ்வுலகில் இல்லை என்பதை மனிதன் ஏற்றுக்கொண்டு அவரை மட்டும் வணங்கவும் ஆராதிக்கவும் வேண்டும். ஒரே கடவுளை மட்டும் ஆராதிப்பது மனிதனைப் பாவ இச்சைகளில் இருந்து விடுவிக்கின்றது.

(க.தி.ம)

## 2. செபம்



16.2 செபத்தின் மூலம் முழுமையாக இறைவனோடு ஒன்றிப்பது

முதலாம் கட்டளையில் உள்ளடங்குகின்ற நம்பிக்கை, எதிர்நோக்கு, இறையன்பு என்பன செபத்தில் நிறைவேற்றப்படுகின்றன. எங்கள் இதயங்களை இறைவன் பால் எழுப்புவது இறைவனுக்கு ஆராதனை செலுத்துவதாகும். புகழ்ச்சி, நன்றி, வேண்டுதல் என்பன செபமாகும். இறைவனின் கட்டளைகளை அனுசரிப்பதற்கு செபம் இன்றியமையாததாகும். இடைவிடாது எப்பொழுதும் செபிக்க வேண்டும். *(லூக் 18 : 1)* க.தி.ம *2098*

ஆண்டவரை எனது உள்ளம் போற்றிப் பெருமைப் படுத்துகிறது. என் மீட்பராம் கடவுளை நினைத்து எனது மனம் பேருவகை கொள்கிறது. ஏனெனில் அவர் தம் அடிமையின் தாழ்நிலையைக் கண்ணோக்கினார். இது முதல் எல்லாத் தலைமுறையினரும் என்னைப் பேறுபெற்றவர் என்பர்.

*(லூக் 1 : 46 - 48)*

மரியன்னையைப் போல நாமும் எல்லா சவால்களிலும் இறைவனைப் புகழ முடியுமானால், இறையன்பை எம்மால் அனுபவிக்க முடியும்.

## 3. பலியாகுதல்



16.3 மனிதனைப் பாவத்திலிருந்து மீட்க இயேசு பலியாகுதல்.

*நன்றி செலுத்துவதும் ஆராதனை செலுத்துவதும் நாம் இறைவனுக்கு ஒப்புக் கொடுக்கும் பலியின் அடையாளமாகும். நாம் ஒப்புக் கொடுக்கும் பலி இறைவனுக்கு ஏற்புடையதாக இருப்பதற்கு அது உள்ளார்ந்த பலியாக இருக்க வேண்டும். இறைவனுக்கு உகந்த பலி நொருங்குண்ட உள்ளமே. சகோதர அன்பு இல்லாத பலி ஏற்புடையதல்ல. இயேசு ஒசேயாவை மேற்கோள் காட்டி உண்மையாகவே நான் விரும்புவது பலியை அல்ல. இரக்கத்தையே விரும்புகிறேன். எரிபலியை விட கடவுளை அறியும் அறிவையே நான் விரும்புகிறேன். (ஒசேயா 6 : 6)*

*முழுமையான ஒரே பலி கிறிஸ்து தம்மையே பலியாக்கியதே எமது வாழ்வையும் இப்பலியோடு ஒன்றிணைக்கும்போது எமது வாழ்வை இறைவனுக்கு உகந்த பலியாக ஒப்புக்கொடுக்க முடியும்.*

*(க.தி.ம 2099 - 2100)*

## 4. நேர்த்தி

*எமது பக்தி முயற்சிகளின் ஒரு பகுதியான அன்றாட செபங்களைத் தவிர மேலும் செபிப்பதற்கு, மெழுகுவர்த்தி பற்ற வைப்பதற்கு, தான தருமங்களை செய்வதற்கு, திருயாத்திரைகளில் ஈடுபடுவதற்கு நேர்த்தி வைக்கிறோம். இந்நேர்த்திகளை நிறைவேற்றுவதால் இறைவனிடம் எமக்குள்ள பயபக்தியையும், அன்பையும் வெளிப்படுத்துகின்றோம்.*

மேலும் வாழ்க்கையில் பல்வேறு சந்தர்ப்பங்களில் இறைவனுடன் வாக்குறுதி செய்துகொள்ள, கிறிஸ்தவர்களாகிய நாம் அழைக்கப்படுகின்றோம். திருமுழுக்கு, உறுதிப்பூசுதல், திருமணம், குருத்துவம் போன்ற அருள் அடையாளங்களைப் பெற்றுக்கொள்ளும்போது வாக்குறுதி கொடுக்கிறோம்.

இந்நேர்த்திகளையும், வாக்குறுதிகளையும் நிறைவேற்றும்போது அது இறைவனுக்குச் செலுத்தும் மரியாதையினதும், அன்பினதும் அடையாளமாக இருக்கின்றது.

### முதலாம் கட்டளைக்கு எதிரான செயல்கள்

★ மந்திரம், சூனியம் செய்தல், நூல்கட்டுதல்.
★ மைவெளிச்சம் பார்த்தல், சகுனம் பார்த்தல், முகூர்த்தம் பார்த்தல், சோதிடம் பார்த்தல்.
★ பிறமத வழிபாடுகளை செய்தல்.
★ அந்நிய தெய்வங்களுக்கு நேர்த்தி வைத்தல்.
★ பணம், பட்டம், புகழ், உடைமைகளின் பின் செல்லல்.
★ தமது திறமைகளில் நம்பிக்கை வைத்து செயற்படுதல்.
★ இறைவனால் படைக்கப்பட்டவர்களுக்கு இறைவனுக்குரிய ஆராதனையைச் செலுத்துதல்.
★ இறைவனுக்கு ஆராதனை செய்ய மறுப்பது.
★ இறைவனில் அவநம்பிக்கை கொள்வது.
★ திருவிவிலியத்திற்குப் பிழையான விளக்கம் கொடுப்பது.
★ கடவுள் இல்லையென நினைத்து செயற்படுவது.
★ விஞ்ஞானத்தில் நம்பிக்கை வைத்து, இறைவன் மாயை என்பது.

## எதிர்நோக்கு (நம்பிக்கை)

இறைவன் தன்னை வெளிப்படுத்தும்போது மனிதன் தனது சொந்த வலிமையினால் மட்டும் அவற்றை அறிந்து கொள்ள முடியாது. ஆதலால் இறைவன் தனக்கு உதவுவார் என, எதிர்நோக்கோடு இருத்தல் வேண்டும்.

*எதிர்நோக்கிற்கு எதிரான பாவங்கள்*

1. எதிர்நோக்கை இழத்தல்.
2. மிதமிஞ்சிய எதிர்நோக்கு.

1. எதிர்நோக்கை இழத்தல் என்பது தனது மீட்பும், பாவங்களுக்கு மன்னிப்பும் இறைவனிடமிருந்து கிடைக்கும் என எதிர்பாராதிருத்தல், இது இறைவனின் நன்மைத்தனத்திற்கு எதிரானதாகும்.

2. மிதமிஞ்சிய எதிர்நோக்கு என்பது, தானே தனது மீட்பைப் பெற்றுக்கொள்ளலாம் என்றும், மனமாற்றம் இன்றி மீட்படையலாம் என்றும் எதிர்நோக்குதல்.

எதிர்நோக்கு என்ற புண்ணியப் பண்பை உரிமையாக்கிக் கொள்ள இவ்வுலக வாழ்வில், எமது வலிமையில் மட்டும் எதிர்நோக்கு வைத்துப் பாவத்தில் விழாமல் இறைசித்தத்தை நிறைவேற்றவேண்டும். இறைசித்தத்தை எனது சித்தமாக்கிக் கொள்ள வேண்டும். இறைசித்தம் எனது விருப்பத்திற்கு தடையாக இருக்கும் சந்தர்ப்பத்திலும், அதை நிறைவேற்றக் கடினமாக இருக்கும் சந்தர்ப்பத்திலும் கூட அதை நிறைவேற்றி, எனது வாழ்வை நான் இறைவனின் கரங்களில் ஒப்படைப்பேன் என்று கூறமுடியுமானால் இறைவனின் எல்லையற்ற அன்பை சுவைக்க முடியும்.

## அன்பு

இறைவனை அன்பு செய்வதென்பது ஒரே கடவுளை மட்டும் முழு இதயத்தோடும், முழு ஆன்மாவோடும் முழு மனதோடும், முழு சக்தியோடும், முழு அறிவோடும் அன்பு செய்வதாகும்.

**இறையன்புக்கு எதிரான பாவங்கள்**
- இறையன்பைப் பற்றி சிந்திக்க மறப்பது.
- இறையன்புக்கு பிரதியன்பு செய்யாதிருப்பது
- நற்செயல்களைப் புரிவோருக்குத் தடை யாக இருப்பது.
- அகங்காரத்தினால் இறைவனை மறுப்பது.

*க.தி.ம. 2094*

**இரண்டாம் கட்டளை**

''உன் கடவுளாகிய ஆண்டவரின் திருப் பெயரை வீணாகச் சொல்ல வேண்டாம்''

*விப 20 : 7*

இக்கட்டளை தொடர்பாக கத்தோலிக்க திருச்சபையின் மறைக்கல்வி நூலிலும், திருவிவிலியத்திலும் குறிப்பிடப்பட்டுள்ள படிப்பினைகளை அறிந்து கொள்வோம்.

## இறைவனின் திருப்பெயரை மரியாதையுடன் உச்சரித்தல்

ஒருவர் பொய்யாணையிடுகையில் உண்மையே உருவான இறைவனை பொய்மைக்குச் சாட்சியாக அழைப்பதால், பொய்யாணையிடுதல் தடைசெய்யப்படுகிறது. இறைவனின் திருப்பெயரை மரியாதையோடு பாவிக்க வேண்டும் என்பதை இரண்டாம் கட்டளை எடுத்துக் கூறுகிறது. ஒருவர் பொய்யாணை இடுகையில் உண்மையே உருவான இறைவனை பொய்மைக்குச் சாட்சியாக அழைப்பதால், பொய்யாணை இடுதல் தடை செய்யப்படுகின்றது.

நீதிமன்றங்களில் உண்மை பேசுவதற்காக சத்தியம் செய்வது அனுமதிக்கப்படுகின்றது. இறைவனின் நாமத்தை மரியாதையின்றி வீணாகப் பயன்படுத்துவது தேவநிந்தனையாகும். அற்ப செயல்களுக்காகவேனும், மற்றும் எமது சுயநலனுக்காகவேனும் இறைவனின் நாமத்தைப் பயன்படுத்துவது தவிர்க்கப்பட வேண்டும். மேலும் பொய்மையை உண்மையாக்க சத்தியம் செய்வது தேவ நிந்தனையாகும்.

*(க.தி.ம 2150 - 2158)*

நீங்கள் என் பெயரால் எதைக் கேட்டாலும் செய்வேன்.

யோவா 14 : 14

கிறிஸ்தவர்கள் தினமும் செபத்துடன் நாளை ஆரம்பிப்பது போலவே அவர்கள் தாம் செய்யும் எல்லா வேலைகளையும் சிலுவை அடையாளமிட்டு ஆரம்பிப்பர். ''தந்தை மகன் தூய ஆவியின் பெயரால் ஆமென்'' என்னும் சிலுவை அடையாளம் எம்மை துன்பமான சந்தர்ப்பத்திலும் பலப்படுத்தும்.

## கிறிஸ்தவ பெயர்களைப் பயன்படுத்துவதன் முக்கியத்துவம்.

*திருமுழுக்கின்போது இறைவனின் பெயரால் குறிப் பிடப்பட்ட நபர் தூய்மையாக்கப்படுகிறார். ஏனெனில் திருமுழுக்கு அளிக்கப்படுவது பிதா, சுதன், பரிசுத்த ஆவியின் பெயரினால் ஆகும். அதேவேளை திருமுழுக்கு பெறுபவர் திருச்சபைக்குள் தமது பெயரைப் பெற்றுக் கொள்கிறார். அது ஒரு புனிதரின் அல்லது முன்மாதிரியான வாழ்வு வாழ்ந்த ஒருவரின் பெயராக இருக்க பெற்றோர், ஞானப்பெற்றோர், குருவானவர் கவனம் எடுக்க வேண்டும். அப்புனிதர் அந்த நபருக்கு முன்மாதிரியாய் இருப்பதோடு அப்புனிதரின் மன்றாட்டுதவி அவருக்கு உறுதிப்படுத்தப்படுகிறது.*

*(க.தி.ம 2156)*

*இறைவன் நம் ஒவ்வொருவரையும் பெயர் சொல்லி அழைக்கிறார். (எசா 43 : 1) ஆதலால் எல்லாப் பெயர்களும் புனிதமானது. எனவே எல்லாப் பொருட்களுக்கும் மரியாதை செலுத்த வேண்டும்.*

## இரண்டாம் கட்டளைக்கு எதிரான செயல்கள்

★ இவ்வுலகத் தேவைகளை பெற்றுக்கொள்ளும் நோக்கத்துடன் இறைவனின் பெயரால் ஆணையிடுவது.

★ தான் செய்த பாவம், தவறுகளை இறைவனின் சித்தமென நியாயப்படுத்துவது.

★ இறைவனின் பெயரால் பிறருக்கு சாபமிடுவது, அவமரியாதை செய்வது.

★ அன்றாட நிகழ்வுகளின்போது இறைவனைக் குறை கூறுவது.

★ புனிதமானவற்றை, இறைவார்த்தையை அவமரியாதையாகப் பயன்படுத்துவது.

★ கிறிஸ்தவனாக கிறிஸ்துவுக்குச் சாட்சி பகர மறுப்பது.

என் கடவுளே என் அரசே உம்மைப் புகழ்ந்து ஏத்துவேன். உமது பெயரை என்றும் எப்பொழுதும் போற்றுவேன்.

திபா 145 : 1 - 2

## மூன்றாம் கட்டளை

'ஓய்வுநாளைத் தூயதாகக் கடைப் பிடிப்பதில் கருத்தாயிரு. அதனைப் பனிதப்படுத்தினார்.......

விப 20 : 8 -11

ஞாயிறு தினமும் கடன் திருநாட்களும் ஓய்வு நாட்கள்.

ஞாயிறு திருப்பலிக்காக நாம் ஆலயத்தில் ஒன்று கூடுகிறோம். திருப்பலியின் வழியாக பங்குச் சமூகத்திற்கு கிறிஸ்துவின் மீட்பின் மறைபொருள் கற்பிக்கப் படுவதோடு, நற்செயல்கள் நிறைந்த சகோதரத்துவ அன்பு வாழ்வுக்கும் அழைப்பு விடுக்கப்படுகின்றது.

ஞாயிறு தினத்தை தூய்மையாக அனுசரிக்க முதலில் செய்ய வேண்டிய கடமையாவது, ஞாயிறு திருப்பலியில் பங்கேற்பதாகும்.



**16.4 திருப்பலி**




★ திருப்பலியில் கல்வாரிப்பலி நினைவு கூரப்படுகின்றது.

★ நற்கருணைத் திருவிருந்து நடைபெறுகின்றது.

**ஞாயிறு தினத்தை தூய்மையாக அனுசரிப்பதற்கு:**

★ ஏனய நாட்களை விட கூடுதலாக செபிக்க வேண்டும்.

★ நோயாளரைத் தரிசிக்க வேண்டும்.

★ பெற்றோருக்கு உதவியாக இருப்போம்.

★ ஞாயிறு தினத்தில் செபிப்பதும், ஓய்வாக இருப்பதும் முக்கியமாகும்.

★ பக்திச் சபைகளில் பங்கேற்போம்.

இறைவன் படைத்த நாளிதுவே, வாருங்கள் மகிழ்ந்து களிகூருவோம்.

## திருப்பலி ஒப்புக்கொடுப்பதன் நோக்கம்

★ இறைவனுக்கு ஆராதனை செய்தல்.
★ இறைவனுக்கு நன்றி கூறுதல்.
★ பாவங்களுக்கு பரிகாரம் செய்தல்
★ ஆன்ம, உடல் தேவைகளைப் பெற்றுக்கொள்ளுதல்.

## மூன்றாம் கட்டளைக்கு எதிரான செயல்கள்

★ ஞாயிறு தினத்திலும், கடன் திருநாட்களிலும் திருப்பலியில் பங்கேற்காமல் இருத்தல்.

★ திருப்பலியில் செயலூக்கமின்றி இருத்தல்.

★ திருப்பலி நேரத்தில் பராக்கிலும், வீணாக மற்றவரோடு பேசுவதிலும் கையடக்க தொலைபேசி பயன்படுத்துவதிலும் பத்திரிகை வாசிப்பதிலும், ஈடுபட்டு மற்ற வர்களுக்கு இடையூறாகவும் இருத்தல்.

★ ஞாயிறு தினத்திலும், கடன் திருநாட்களிலும் திருப்பலியில் பங்கு கொள்ளாமல் சுற்றுலாக்களிலும், விருந்துபசாரங்களிலும் பங்கு கொள்ளுதல்.

★ பண ஆசையினால் வியாபாரத்திலும், மேலதிக வேலையிலும் (O.T) ஈடுபடுதல்.

★ திருப்பலிக்கு நேரம் பிந்தி வருதலும், திருப்பலி முடியும் முன்பே ஆலயத்தை விட்டு வெளியேறுதலும்.

★ ஞாயிறு தினத்தில் பிறருக்கு உதவக்கூடிய சந்தர்ப்பங்களை நழுவவிடுதல்.

★ ஞாயிறு திருப்பலி, மறைக்கல்வி வகுப்புக்கு போகாமல் வேறு வகுப்புகளுக்குச் செல்லல்.

## செயற்பாடு

1. லூக் 10:27 இப் பகுதியை இருமுறை நன்றாக வாசித்து தியானிக்கவும். அதனால் கிடைத்த இறை செய்தியை எழுதவும்.

2. பிறருக்குப் பட்டப்பெயர் வைப்பது கிறிஸ்தவர்களுக்கு பொருத்த மான செயலா? கலந்துரையாடவும்.

3. இறையன்புக்கு பிரதியன்பு காட்டக்கூடிய செயல்கள் பத்து எழுதுக.

4. இலங்கை கத்தோலிக்கர் அனுசரிக்கும் எட்டு கடன் திரு நாட்களை யும், அதற்குரிய தினங்களையும் பட்டியற்படுத்துக.



**வாழ்க்கைக்கு**

- ★ ஏனைய எல்லாவற்றையும் விட இறைவனுக்கு முக்கியத் துவம் கொடுப்பேன்.
- ★ பிறருக்கு பட்டப்பெயர் வைக்காதிருப்பேன்
- ★ ஞாயிறு திருப்பலியில் பங்குகொள்வேன்.

# 17 அன்பின் சமுதாயம்

**இன்னமுதூட்டி என்னை வளர்த்த அம்மா**
**எந்த வேளையிலும் அவள் என்னோடு கண் விழிப்பாள்**
**என்ன துன்பத்திலும் என்னோடு பங்கெடுப்பாள்**
**என் தேவனே எந்தன் அன்பு அம்மாவைக் காத்திடுவாய்**

**வியர்வை சிந்தி என்னை வளர்த்திட உழைப்பார்.**
**எனது வாழ்வு சிறந்திட உயர்த்தியாகம் செய்திடுவார்**
**எனது எதிர்காலம் ஒளிமயமாக்கும்**
**என் தேவனே எந்தன் அப்பாவைக் காத்திடுவாய்**

**நான்காம் கட்டளை : பெற்றோரை மதித்தல்**

*உன் கடவுளாகிய ஆண்டவர் உனக்களிக்கும் நாட்டில் உன் வாழ்நாள்கள் நீடிக்கும்படி உன் தந்தையையும் உன் தாயையும் மதித்து நட.*

*விப 20 : 12*

இல்லம் தூய்மையான இடமாகும். ஏனெனில், கிறிஸ்து பிறந்ததும், வளர்ந்ததும் குடும்பத்திலேயே ஆகும். திருக்குடும்பம் எல்லாக் குடும்பங்களுக்கும் முன் மாதிரியான குடும்பமாகும். திருக்குடும்பத்தின் முன்மாதிரிகையைப் பின்பற்றி தாய், தந்தை, பிள்ளைகளுக்கிடையேயுள்ள தொடர்பை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

சமுதாயத்தில் மிகச்சிறிய அலகு குடும்பமாகும். குடும்பத்தில் தாய், தந்தை, பிள்ளைகளுக்கிடையே உள்ள தொடர்பு, அன்பை உருவாக்குகின்றது. குடும்பம் என்னும் சமுதாய நிறுவனத்தில் சமூகத் தொடர்புகளை வளர்த்து சமுதாயத்தில் பொறுப்புடையவராக, வாழ மனிதரால் முடிகின்றது. ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டு, மற்றவர் மீது அக்கறையும், அன்பும் உடையவர்களாக வாழும் குடும்பத்தின் மூலம் சமுதாயத்திற்குகந்த நல்ல அங்கத்தவர்களை உருவாக்க பெற்றோரால் முடியும்.



**படம் 17.1**

**அன்பான குடும்பத்தில் பிள்ளைகள் பெறும் மகிழ்வும், வெற்றியும்.**

தூய பவுல் எபேசியருக்கு எழுதிய திருமுகத்தில் பெற்றோருக்கும் பிள்ளைகளுக்கும் இவ்வாறு அறிவுரை கூறுகிறார்.

*''பிள்ளைகளே, உங்கள் பெற்றோருக்கு கீழ்ப்படியுங்கள். ஆண்டவரின் அடியாருக்கு இதுவே ஏற்புடையது. உன் தந்தையையும் தாயையும் மதித்து நட என்பதே வாக்குறுதியை உள்ளடக்கிய முதலாவது கட்டளை.'' ''இதனால் நீ நலம் பெறுவாய்;...... தந்தையரே, உங்கள் பிள்ளைகளுக்கு எரிச்சலை மூட்டாதீர்கள். மாறாக அவர்களை ஆண்டவருக்கு ஏற்ற முறையில் கண்டித்து திருத்தி அறிவு புகட்டி வளர்த்து வாருங்கள்.'' (எ.பே 6:1 -4)*

பெற்றோர் தங்கள் பிள்ளைகளை இறைவனின் பிள்ளைகளாக மதித்து அவர்களின் தனித்துவத்தைப் பேண வேண்டும். விண்ணகத் தந்தையின் விருப்பத்திற்கிணங்க இறைக்கட்டளைகளை நிறைவேற்றுவதற்கு பெற்றோர் பிள்ளைகளை வழிநடத்த வேண்டும். அதேபோல், பிள்ளைகள் பெற்றோருக்கு செய்ய வேண்டிய கடமைகளும் பொறுப்புக்களும் உண்டு.

## பெற்றோரின் கடமைகளும் பொறுப்புக்களும்

பிள்ளைகளை அன்பு செய்வதும், அவர்களுக்குப் பாதுகாப்பு அளிப்பதும், நற்பண்பும், அறிவும் உள்ள பிள்ளைகளாக வளர்ப்பதும், பெற்றோரின் கடமையும் பொறுப்பும் ஆகும்.




## பிள்ளைகளின் கடமைகளும் பொறுப்புக்களும்

பிள்ளைகள் பெற்றோருக்கு பாசத்தையும் மரியாதையையும் காட்டி, அவர்களுக்கு நன்றியும் பணிவும் செலுத்தி, கீழ்ப்படிய வேண்டும். தம் பெற்றோருக்கு மரியாதை செலுத்துவதன் வழியாக குடும்ப வாழ்வில் நல்லிணக்கமும், தூய்மையும் வளர பிள்ளைகள் பங்களிப்புச் செய்கிறார்கள். தம் பெற்றோர் துன்பம், நோய், தனிமை, முதுமை ஆகியவற்றால் அல்லலுறும் போது வளர்ந்த பிள்ளைகள், அவர்களுக்குப் பொருளாதார ஆதரவு அளித்து உறுதுணையாக இருக்க வேண்டும்.

*கத்தோலிக்க திருச்சபை மறைக்கல்வி நூல் 2214 - 2220*



**படம் 17.2**
**அன்பும் மரியாதையும்**

‘பிள்ளைகளே உங்கள் பெற்றோருக்கு முற்றிலும் கீழ்ப்படியுங்கள். ஆண்டவரைச் சார்ந்தவர்களுக்கு இதுவே தகும்’

*கொலோ 3 : 20*

‘பிள்ளாய்! உன் தந்தை தந்த நற்பயிற்சியைக் கடைப்பிடி; உன் தாய் கற்பிப்பதை தள்ளி விடாதே;’

*நீதிமொழி 1 : 8*

‘பிள்ளைகளை விடத் தந்தையரை ஆண்டவர் மிகுதியாக மேன்மைப்படுத்தியுள்ளார்; தந்தையரை மேன்மைப்படுத்துவோர் நீடுழிவாழ்வர். ஆண்டவருக்குப் பணிந்து நடப்போர் தங்கள் அன்னையருக்கு மதிப்பு அளிப்பர்.’

*சீராக் 3 : 2 - 6*

உன் தந்தையை உன் முழு உள்ளத்துடன் மதித்து நட; உன் தாயின் பேறு காலத்துன்பத்தை மறவாதே. அவர்கள் உன்னைப் பெற்றெடுத்தார்கள்; அதற்கு ஈடாக உன்னால் எதையும் செய்ய முடியாது என்பதை நினைவில் இருத்து.’

*சீராக் 7 : 27 - 28*

**தந்தையையும் தாயையும் மதித்துநட என்ற கட்டளைக்கு எதிரான செயல்கள்**

★ பெற்றோர், பெரியோரை உதாசீனப்படுத்தல், அவர்களை அவமதித்தல்.

★ பெற்றோரை துன்புறுத்தல், அடித்தல், மனம் நோகப் பேசுதல்.

★ பெற்றோரைக் கைவிடுதல், தனிமைப்படுத்தல், வயோதிபர் இல்லத்தில் சேர்த்தல்.

★ ஆசிரியர்களுக்கு, பெரியோருக்கு கீழ்ப்படியாமை, அவர்களின் மனம் நோகச் செய்தல்.

★ பெற்றோர் கொடுக்கும் சுதந்திரத்தை தவறாகப் பயன்படுத்தல், அவர்களை ஏமாற்றுதல்.

★ பெற்றோர், பெரியாரின் எதிர்பார்ப்புக்களை அலட்சியப்படுத்தல்.

★ நாட்டின், சமூகத்தின், நிறுவனத்தின், பாடசாலையின் சட்டங்களை அவமதித்தல்.

★ தங்களிடம் ஒப்படைத்த பொறுப்புக்களை நிறைவேற்றத் தவறுதல், பின்வாங்குதல்.

அன்பினால் வாழும் குடும்ப சமூகத்திலிருந்து அன்பு சமுதாயம் உருவாகின்றது. இவ்வாறான சமுதாயத்தில் இருந்து உருவாகும் ஆட்சியாளர்கள், மக்கள் சேவைக்காக இடைவிடாது, ஆழமான அர்ப்பணிப்புடன் அன்பின் சமுதாயத்தைக் கட்டியெழுப்புவர். இத்தகைய சமுதாயத் தலைவர்கள் கீழ்க்காணும் கிறிஸ்துவின் படிப்பினைகளைத் தமதாக்கிக் கொள்வர்.

*''உங்களுள் பெரியவராக இருக்க விரும்புகின்றவர் உங்கள் தொண்டராய் இருக்கட்டும்'' (மத். 20 : 26)*

நல்லொழுக்கமுள்ள சமுதாயத்தை உருவாக்கும் பணியில் ஈடுபடும் ஆட்சியாளர்கள் தமது சேவையைப் பெறும் நாட்டு மக்களுக்கும், நாட்டு மக்கள் தமது ஆட்சியாளர்களுக்கும் செய்ய வேண்டிய கடமைகளும் பொறுப்புக்களும் பல உள்ளன.

## அரச அதிகாரிகளின் பொறுப்புக்களும் கடமைகளும்

★ தமது தலைமைத்துவத்தில் வழங்கப்படும் பொறுப்புக்களை நேர்மையுடனும், ஒழுங்காகவும் நிறைவேற்றல்.

★ தமது நாட்டிற்கு செய்ய வேண்டிய சேவையைக் குறைவின்றிச் செய்தல்.

★ தமது சேவையைப் பெறும் நாட்டு மக்களுக்கு நீதியுடன் கூடிய இரக்கம் காட்டுதல்.

★ சமுதாயத்தினால் கிட்டும் புகழையும், மதிப்பையும் எதிர்பார்த்துப் பணி புரியாதிருத்தல்.

★ தமது சேவை தேவைப்படும் எவ்வேளையும், காலம் பாராது, நேரம் கருதாது, சேவைக்குத் தன்னை அர்ப்பணித்தல்.

★ பரிசுத்த திருச்சபையின் அதிகாரிகளுடன் ஒன்றிணைந்து தமது தலைமைத்துவத்தின் பணியை சீராக்கிக் கொள்ளல்.

★ நாட்டு மக்களின் அடிப்படை உரிமைகளைப் பாதுகாத்தல்.

★ மக்களின் சுதந்திரத்தை மதித்தல்.

★ திறமைகளுக்கேற்ப தொழில்வாய்ப்புக்களையும், பதவி உயர்வுகளையும் வழங்கல்.

**நாட்டு மக்களின் கடமைகளும் பொறுப்புக்களும்**

★ *அதிகாரிகளை மதித்தல், கீழ்ப்படிதல் (பத்துக் கட்டளைக்கு எதிரான சந்தர்ப் பங்களில் அதிகாரிகளுக்கு கீழ்ப்படிய அவசியமில்லை)*

★ *மனச்சான்றின்படி வாக்குரிமையைப் பயன்படுத்தல்.*

★ *உரிய வரியைச் செலுத்துதல்.*

★ *அரச உடமைகள், பொதுச்சொத்துக்களை சொந்த தேவைக்காக பயன்படுத்துவதைத் தவிர்த்துக் கொள்ளல் அவற்றைப் பேணிப் பாதுகாத்தல்.*

★ *ஊதியத்திற்கு அடிமையாகாமல், நேர்மையாகப் பணியாற்றுதல்.*

★ *ஆட்சியாளர்களைப் பாராட்ட வேண்டிய சந்தர்ப்பங்களில் பாராட்டுதல், அவர் களின் பணிக்கு உதவுதல்.*

★ *ஆட்சியாளருக்காக இறைவனிடம் செபித்தல்.*

*திருவிவிலியப் படிப்பினைகளின்படி நான்காம் கட்டளையைக் கடைப்பிடித்து தமது வாழ்வில் வாழ்வதன் மூலம், அன்பைக் குடும்பத்தில் மட்டுமன்றி சமுதாயத்திலும் அனுபவிக்க முடியும். அந்த அன்பினால் பிறருக்காக அர்பணிப்புடன் வாழ்வதற்கும், இடைவிடாது உழைப்பதற்கும், எமக்கு ஆற்றலும் விருப்பம் ஏற்படும். மகிழ்ச்சியாக, ஒற்றுமையாக வாழவும் முடியும். இவ்வாறாக நபர் ஒருவர் ஒரு குடும்பம் அல்லது ஒரு குழு எனஅர்ப்பணத்துடன் வாழும் போது அவர்களது வாழ்வு பிறருக்கும், குடும்பங்களுக்கும், சமுதாயத்திற்கும் நல்லதொரு முன்மாதிரிகையாக இருக்கும். அம் முன்மாதிரிகையான தலைவன் நல்ல பணியாளனாகி பணி செய்வதற்கு பிறரையும் தூண்டுவதற்கு வழிசமைக்கும்.*

## செயற்பாடு

1. பிள்ளையாகிய நீர் பெற்றோருக்கான உமது கடமைகளை நிறைவேற்றிய சந்தர்ப்பங்கள் ஐந்து எழுதுக.
2. உமது பெற்றோர் உமக்காக தமது கடமைகளை நிறைவேற்றிய சந்தர்ப்பங்கள் ஐந்து தருக.
3. வளர்ந்தவர் என்ற மட்டில் எதிர்காலத்தில் உமது பெற்றோருக்காக செய்யக்கூடிய செயல்கள் ஐந்து தருக.
4. I. பத்திரிகைகள் சிலவற்றை தேடி எடுத்துக் கொள்ளுங்கள். அரச அதிகாரிகள் தமது கடமைகளையும் பொறுப்புக்களையும் நிறை வேற்றிய சந்தர்ப்பங்கள் ஐந்தினை தேடி எழுதுங்கள்.
   II. அரச அதிகாரிகள் தமது கடமைகளையும், பொறுப்புக்களையும் நிறைவேற்றத் தவறிய சந்தர்ப்பங்கள் ஐந்து எழுதுக.
   III. நாட்டு மக்கள் தமது கடமைகளையும், பொறுப்புக்களையும் நிறைவேற்றிய சந்தர்ப்பங்கள் ஐந்து எழுதுக.
   IV. நாட்டு மக்கள் தமது கடமைகளையும், பொறுப்புக்களையும் நிறைவேற்றத் தவறிய சந்தர்ப்பங்கள் ஐந்தினை தேடி எழுதுக.



**வாழ்க்கைக்கு**

கடமைகளை சரிவர நிறைவேற்றி
அன்பின் வாழ்வு வாழுங்கள்.

# 18 மானிட வளங்களைப் பாதுகாப்போம்

தலவில் தூய அன்னம்மாள் திருத்தலத்தில் திருவிழா திருப்பலி முடிவுற்று சற்று நேரத்தில் ஒலிபெருக்கி மூலம் ஒரு செய்தி அறிவிக்கப்பட்டது. ''கடலில் குளித்துக்கொண்டிருந்த நபர் ஒருவர் ஆபத்துக்குள்ளாகியுள்ளார். அவரது உயிரைக் காப்பாற்ற ஓடிவாருங்கள். அவரைக் காப்பாற்றுமாறு செபியுங்கள்''. இச்செய்தியைக் கேட்டதும் மக்களிடையே ஏற்பட்ட பரபரப்பின் மத்தியில் ஒருவர் ஓடிச்செல்வதைக் கண்டேன். அங்கிருந்தவர்கள் எல்லோரும் இறைவனை நோக்கி மன்றாடினர். ஒருவர் மட்டுமல்ல, ஆலயச்சூழலில் இருந்து பலர் அவ்வுயிரைக் காப்பாற்ற ஓடிவந்ததாக பின்னர் அறிய முடிந்தது. சற்று நேரத்தில் மீண்டும் ஒலிபெருக்கி மூலம் ''கடலில் ஆபத்துக்குள்ளாகியவர் காப்பாற்றப்பட்டுள்ளார், இறைவனுக்கு நன்றி'' என மிகப் பெரும் மகிழ்ச்சியோடு அறிவிக்கப்பட்டது.

(இது ஓர் உண்மைச் சம்பவம்)

★ தமது உயிரையும் பொருட்படுத்தாது அந்த உயிரைக் காப்பாற்ற பலர் முன் வந்தமைக்கான காரணம் யாது?

★ நீந்த முடியாதவர்கள் ஏன் அந்த உயிருக்காக செபித்தனர்?

## 1. இறைவன் தம் உருவிலும் சாயலிலும் மனிதனைப் படைத்தார்.

அப்பொழுது கடவுள், ''மானிடரை நம் உருவிலும், நம் சாயலிலும் உண்டாக்குவோம். அவர்கள் கடல் மீன்களையும், வானத்துப் பறவைகளையும், கால்நடைகளையும், மண்ணுலகு முழுவதையும், நிலத்தில் ஊர்வன யாவற்றையும் ஆளட்டும்'' என்றார். கடவுள் தம் உருவில் மானிடரைப் படைத்தார்; கடவுளின் உருவிலேயே அவர் களைப் படைத்தார்; ஆணும் பெண்ணுமாக அவர்களைப் படைத்தார். கடவுள் அவர்களுக்கு ஆசி வழங்கி, ''பலுகிப் பெருகி மண்ணுலகை நிரப்புங்கள், அதை உங்கள் ஆற்றலுக்கு உட்படுத்துங்கள், கடல் மீன்கள், வானத்துப் பறவைகள், நிலத்தில் ஊர்ந்து உயிர் வாழ்வன அனைத்தையும் ஆளுங்கள்'' என்றார்.

(தொநூ 1:26-28)

## 2. உயிர் மூச்சைக் கொடுத்தார்

*அப்பொழுது ஆண்டவராகிய கடவுள் நிலத்தின் மண்ணால் மனிதனை உருவாக்கி, அவன் நாசிகளில் உயிர் மூச்சை ஊத, மனிதன் உயிர் உள்ளவன் ஆனான்.*

*(தொநூ 2:7)*

## ஐந்தாம் கட்டளை - கொலை செய்யாதே

*கொலை செய்யாதே. (விப 20:13)*

இயேசு ஐந்தாம் கட்டளை தொடர்பாக புதியதொரு கருத்தினை முன்வைத்தார்.

*''கொலை செய்யாதே; கொலை செய்கிறவர் எவரும் தண்டனைத் தீர்ப்புக்கு ஆளாவர்'' என்று முற்காலத்தவர்க்குக் கூறப்பட்டிருப்பதைக் கேள்விப் பட்டிருக்கிறீர்கள். ஆனால் நான் உங்களுக்குச் சொல்கிறேன்; ''தம் சகோதரர் சகோதரிகளிடம் சினங்கொள்கிறவர் தண்டனைத் தீர்ப்புக்கு ஆளாவார்; தம் சகோதரரையோ சகோதரியையோ 'முட்டாளே, என்பவர் தலைமைச் சங்கத் தீர்ப்புக்கு ஆளாவார்; 'அறிவிலியே' என் பவர் எரிநரகத்துக்கு ஆளாவார்.*

*(மத். 5 : 21 - 22)*

அதுமட்டுமன்றி அவர் அதனைத் தமது அன்றாட வாழ்க்கை மூலம் செயலில் காட்டினார்.

*அப்பொழுது இயேசு அவரிடம், ''உனது வாளை அதன் உறையில் திரும்பப் போடு. ஏனெனில், வாளை எடுப்போர் அனை வரும் வாளால் அழிந்து போவர். (மத். 26:52)*

## உயிரைக் காப்போம்

- ★ போதைப்பொருள், மதுபானம், புகைத்தல் ஆகியவற்றை ஒழிப்போம்.
- ★ ஏனையோரையும் அதிலிருந்து பாதுகாப்போம்.



**படம் 18.1 ஆபத்துக்களிலிருந்து காப்பாற்றுதல்.**

## உயிர்களை மதிப்போம்

*அதற்கு ஆண்டவர், ''நீ என்ன செய்துவிட்டாய்! உன் சகோதரனின் இரத்தத்தின் குரல் மண்ணிலிருந்து என்னை நோக்கிக் கதறிக் கொண்டிருக்கிறது. இப்பொழுது, உன் கைகள் சிந்திய உன் சகோதரனின் இரத்தத்தைத் தன் வாய்திறந்து குடித்த மண்ணை முன்னிட்டு, நீ சபிக்கப்பட்டிருக்கின்றாய். (தொ.நூ 4:10-11)*

*உங்கள் உயிராகிய இரத்தத்திற்கு நான் ஈடு கேட்பேன். ஒரு மனிதனின் இரத்தத்தை எவர் சிந்துகிறாரோ அவரது இரத்தம் வேறொரு மனிதரால் சிந்தப்படும். ஏனெனில், கடவுள் மனிதரைத் தம் உருவில் உண்டாக்கினார். (தொ.நூ 9:5-6)*

*மனித உயிர் மிகப் புனிதமானது என்பதால் அது மதிக்கப் படவேண்டும். மனித உயிர் அதன் தொடக்க முதலே இறைவனுடைய படைப்புச்செயலை உள்ளடக்கியது. அதன் ஒரே இலக்கான படைத் தவருடன் மிகச் சிறந்த வகையில் உறவுகொண்டுள்ளது. குற்றமில்லா மனித உயிரை எவரும் நேரடியாக அழிக்கக்கூடாது. இது மனிதரின் மாண்பிற்கும் படைத்தவரின் தூய்மைக்கும் மிகவும் முரணானது. ''குற்றமற்றவரையும், நேர்மையாளரையும் கொலை செய்ய வேண் டாம்''*

*கத்தோலிக்க திருச்சபை மறைக்கல்வி நூல் 2259 - 2260*

நமது உடல் நலனில் போதுமான அக்கறை கொள்ளவேண்டும். அடுத்தவரின் உடல் நலனிலும் அக்கறை காட்டவேண்டும். ஆனால் உடல் வழிபாடும் அதன் பராமரிப்பில் எவ்வகை மிகைப்படுத்தலும் தவிர்க்கப்பட வேண்டும். மேலும் உடல்நலனுக்கும், உயிருக்கும் மிகப்பெரிய கேட்டினை விளைவிக்கும் போதைப் பொருள்களைப் பயன்படுத்துவது தவிர்க் கப்பட வேண்டும். உணவு, மதுபானம், போதைப் பொருள், மருந்து ஆகியவைகளை மட்டுமீறிப் பயன் படுத்துவதும் தவிர்க்கப்பட வேண்டும்.

*(கத்தோலிக்க திருச்சபை மறைக்கல்வி நூல் 2288 - 2291)*

### ஐந்தாம் கட்டளைக்கு எதிரான செயல்கள்

★ கொலைசெய்தல், அதற்கு உடந்தையாக இருத்தல், திட்டம் தீட்டுதல்.

★ நற்பெயரைக் கெடுத்தல், தூற்றுதல், இழிவுபடுத்துதல்.

★ எதிர்கால முன்னேற்றத்தை தடைசெய்தல்.

★ ஒதுக்கி வைத்தல் / மனதைப் புண்படுத்தல்.

★ போதைப்பொருள் பாவித்தல்.

★ தினமும் தொடர்ச்சியாக மதுஅருந்ததல், புகைப்பிடித்தல்.

★ மனிதனுக்கும் சூழலுக்கும் ஒவ்வாத வியாபாரங்களில் ஈடுபடுதல்.

★ சுற்றாடலை மாசுபடுத்தல். (நீர், காற்று, இரைச்சல்)

★ மற்றவர்களைக் கொலைசெய்து சொத்துக்களைச் சேர்த்தல்.

★ தனிப்பட்ட ஒருவரின் குற்றத்தைப் பகிரங்கப்படுத்தல்.

★ கருச்சிதைவு செய்தல்.

★ தற்கொலை செய்தல். அதற்கு முயற்சித்தல்.

★ சூழலை அழித்தல்.

★ பழிவாங்கும் எண்ணத்துடன் மற்றவர்களைத் துன்பப்படுத்தல்.

★ பொய் வழக்குத்தொடரல்.

★ ஒருவர் மீது அநியாயமாகக் குற்றஞ்சாட்டுதல்.

★ குற்றமற்றவர்களை விடுவிக்கும் வாய்ப்பு இருந்தும் அதைச் செய்யாதுவிடுதல்.

★ அச்சுறுத்தல் / கொலைமிரட்டடல்.

★ தொற்றுநோய்களைப் பரப்புதல்.

★ உடல்நலத்தைப் பேணாதிருத்தல்.

★ சீரான உணவுகளை உட்கொள்ளாமை, சிகிச்சைகளைப் பெறாமை.

★ சிறுவர்களைப் பாடசாலைக்கு அனுப்பாது தமது தேவைக்காகப் பயன்படுத்தல்.

★ சந்தர்ப்பம் இருந்தும் ஒற்றுமைக்காக செயற்படாதிருத்தல்.

★ சமாதானத்தை ஏற்படுத்த முன்வராமை.

★ மட்டுமீறிய கொழுப்பு, சீனி, உப்புக் கலந்த உணவுகளை உண்ணல்.

★ போசனப்பிரியம்

★ தொலைத் தொடர்புச்சாதனங்களைத் தவறான முறையில் கையாளுதல்.

**கருக் கலைப்பு**

தாயின் கருவில் இருக்கும் கருவை அழித்தல் கருக் கலைப்பாகும். உயிரை அழித்தல் என்னும் மாபெரும் பாவத்தை இது சாரும். கருவுற்ற நேரம் முதல் உயிர் இறைவனுக்கு உரிமையாதலால் அது மாபெரும் கொலைக் குற்றமாகும். இது தொடர்பாக திருவிவிலியம் பின்வருமாறு கூறப்படுகிறது.

எனக்கு அருளப்பட்ட ஆண்டவரின் வாக்கு; 'தாய் வயிற்றில் உன்னை நான் உருவாக்கு முன்பே அறிந்திருந்தேன்; நீ பிறக்கு முன்பே உன்னைத் திருநிலைப்படுத்தினேன்; மக்களினங் களுக்கு இறைவாக்கினனாக உன்னை ஏற்படுத்தினேன் ''
(எரே.1:4-5)

என் எலும்பு உமக்கு மறை வானதன்று; மறைவான முறை யில் நான் உருவானதையும் பூவு லகின் ஆழ் பகுதிகளில்நான் உருப் பெற்றதையும் நீர் அறிந்திருந்தீர்.
(திபா 139:15)



**18.2 கரு**

**நேரடிக் கருக்கலைப்பு**

இதனை நோக்கமாகவோ, வழிமுறையாகவோ கொண்டு விரும்பிச் செய்வதும், அதற்கு உடந்தையாக இருப்பதும் பாவம். இப்பாவத்திற்கு திருச்சபையிலிருந்து நீக்கம் எனும் தண்டனை இயல்பாகவே உரியது. ஏனெனில், மனித உயிர் கருவில் உருவான நேரம் முதல் முழுமையாக மதிக்கப்பட வேண்டும். அதன் மாண்பு பாதுகாக்கப்பட வேண்டும்.

*கத்தோலிக்க திருச்சபை மறைக்கல்விநூல் 2270 - 2272*

கருக் கலைப்பு என்னும் பாவத்திற்கு, ஒப்பரவு அருளடையாளத்தில் மன்னிப்பு வழங்க, குருவானவர் ஆயரின் அனுமதியைப் பெற்றிருக்க வேண்டும். எனவே, ஒருவர் கருச்சிதைவு என்னும் பாவத்திற்கு மன்னிப்பு பெறச் செல்லுமிடத்து மீண்டும், அவர் ஒப்புரவு அருளடையாளத்தில் குருவானவரைச் சந்திப்பதற்கான ஒரு தினத்தை குரு குறிப்பிடுவார். குறித்த தினத்திற்கு முன் குரு தமது ஆயரைச் சந்தித்து, அப்பாவத்திற்கு மன்னிப்பு வழங்கும் அனுமதியைப் பெற்றுக் கொள்வார். எனினும் சில யாத்திரைத் தலங்களில் ஒப்பரவு அருளடையாளத்தை வழங்கும்போது, கருச்சிதைவு என்னும் பாவத்திற்கு மன்னிப்பு வழங்கும் முழுமையான அனுமதியை ஆயர் குருக்களுக்கு வழங்கினாலும் கருக்கலைப்பு பாவமாகும்.

## தற்கொலை செய்தல்

தற்கொலை செய்தல் தனக்கும், அயலானுக்கும், இறைவனுக்கும் எதிராகச் செய்யும் பாவமாகும். ஒருவர் அயலாருடன் கொண்டிருந்த உறவு அவருக்கு எதிரான பாவமாக அமைவதற்கு காரணம் அயலாரது உறவை தான்தோன்றித்தனமாக முறித்துக் கொள்வதாகும்.

இறைவனால் அருளப்பட்ட உயிர்மட்டில் நாம் ஒவ்வொருவரும் அவர் திருமுன் பொறுப்புடையவர்களாவோம். இறைவனே உயிர்களுக்கெல்லாம் அதிபதி. இறைவன் எமக்குத் தந்த வாழ்வை நன்றியுடன் ஏற்று, இறைவனின் மகிமைக்காகவும், எமது ஆன்ம மீட்புக்காகவும் அந்த வாழ்வைப் பாதுகாத்துக் கொள்வது எமது கடமையாகும். நாம் எமது உயிரைத் தாங்கிநிற்பவர்களே ஒழிய அதற்கு உரிமையுடையவர்கள் அல்ல. இறைவனுக்குச் சொந்தமான வாழ்வை நாம் அழித்துக்கொள்ள அது எங்களுடையது அல்ல. எமது உயிரை அழிப்பது இறையன்பிற்கு எதிராகச் செய்யும் மிகப் பெரிய பாவமாகும். (க.தி.ம 2280 - 2281)

(கதிம 2280-2281)

எமது அயலவர்களது உயிரைப் பாது காத்துக் கொள்ள எம்மை அர்ப்பணிப் போம்.

**செயற்பாடு**

★ ‘மனித உயிர் இறைவனுக்கு மட்டுமே சொந்தம்’ என்பதையும், தன்னுயிரையும் பிறரினது உயிரையும் பாதுகாக்க வேண்டும் என்பது பற்றியும் 150 சொற்களில் ஒரு கட்டுரை வரைக.



**வாழ்க்கைக்கு**

*நான் எனது உயிரை அன்பு செய்கின்றேன். மற்றவர்களின் உயிரையும் அன்பு செய்கின்றேன்.*

# 19 தூய உள்ளம் - மாசற்ற வாழ்க்கை

குலமுதுவர் யாக்கோபுவின் மகன் யோசேப்பு போத்திபாரின் வீட்டில் சேவையில் அமர்த்தப்பட்டிருந்த வேளை அவர் பார்வைக்கு அழகிய இளைஞனாக இருந்தமையினால், அவரில் மயங்கிய போத்திபாரின் மனைவி அவரைத் தன் வசப்படுத்திக்கொள்ள பல முயற்சிகளைச் செய்தாள். அது பலன்கொடுக்காததால் ஒருநாள் யாரும் இல்லாத வேளை அவரை வற்புறுத்தி, அவள் பிடித்துக்கொண்ட போதும், அவளிடமிருந்து யோசேப்பு தப்பி ஓடினார். போத்திபார் வந்ததும், யோசேப்பு தன்னுடன் சரசம் பண்ண வந்ததாக, அவள் அவர் மேல் பொய்க்குற்றம் சுமத்தியதால், போத்திபார் அவரைச் சிறையிலிட்டார்.

''தீமையினூடாக நன்மையை விளைவிக்கும் இறைவன்'' யோசேப்பிற்கு நேரிட்ட இந்த ஆபத்தை பிற்காலத்தில் மாபெரும் வெற்றியாக மாற்றினார். யோசேப்புவிடம் இருந்த மாசற்ற தூய தன்மையும், அவரது தூய வாழ்க்கையைப் பாதுகாப்பதில் இருந்த அர்ப்பணிப்புமே அவர் எதிர்கொண்ட எல்லாவித சவால்களையும் வெற்றிபெற உதவின.

★ **யோசேப்பு போத்திபாரின் மனைவியின் விருப்பத்திற்கு இணங்கியிருப்பின், அவர் மீறும் கட்டளைகளாவன,**

**1. ஆறாவது கட்டளை**

**விபசாரம் செய்யாதே**

**(விப 20:14)**

**2. ஒன்பதாம் கட்டளை**

**''பிறர் மனைவியை கவர்ந்திட விரும்பாதே, பிறர் மனைவி, அடிமை, அடிமைப்பெண், மாடு, கழுதை அல்லது பிறர்க்குரியது எதையுமே கவர்ந்திட விரும்பாதே''**

**(விப 20:17)**

இக்கட்டளைகள் தொடர்பாக தூய பவுல் இவ்வாறு கற்பிக்கின்றார்.

*எனவே பரத்தைமையை விட்டு விலகுங்கள். மனிதர் செய்யும் எப்பாவமும் உடலுக்குப் புறம்பானது. ஆனால் பரத்தைமையில் ஈடுபடுவோர் தம் சொந்த உடலுக் கெதிராகவே பாவம் செய்கின்றனர். உங்கள் உடல் நீங்கள் கடவுளிடமிருந்து பெற்றுக்கொண்ட தூய ஆவி தங்கும் கோவில் என்று தெரியாதா? நீங்கள் உங்களுக்கு உரியவரல்ல.' (1 கொரி. 6:18-19).*

## தூய மரிய கொறற்றி



19.1 தூய மரிய கொறற்றி

தந்தையின் மரணத்திற்குப் பின் தனது அன்னையோடு வீட்டுப் பொறுப்புக்களை ஏற்ற தூய மரிய கொறற்றி, தனது சகோதர சகோதரிகளோடு இறைவனுக்கு உகந்ததொரு வாழ்க்கையை நடத்தி வந்தாள். ஒரு நாள் அவள் வீட்டில் தனித்திருந்த வேளை அங்கு வந்த அலெக்சாண்டர் அவளைப் பாவச்செயலுக்கு உடன்பட தூண்டினான். அதனை அவள் எதிர்த்தமையால், அவன் அவளைக் கத்தியால் குத்தினான். அவள் இறக்குமுன் தனது அன்னையை விளித்து ''அம்மா நான் முதன் முறையாக நற்கருணை பெற்றபோது, இறக்க நேர்ந்தாலும் எனது, இறைவாழ்வை இழந்துவிட மாட்டேன்'' என இயேசுவிடம் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றினேன்'' எனக்கூறி கண்மூடினாள். இறக்கும்போது அவளுக்கு பன்னிரெண்டு வயது ஆகும்.

### ஒழுக்கம்

ஆறாம் ஒன்பதாம் கட்டளைகளுக்கு எதிராகப் பாவம் செய்யத்தூண்டும் அனைத்துச் செயல்களையும் தவிர்த்து தன்னையும் பிறரையும் நன்னடத்தையுடன் வாழச்செய்வதே ஒழுக்கம் ஆகும். ஒருவரது நடத்தை, ஆடை ஆபரணங்கள் பிறரைப் பாவத்தில் விழச் செய்யுமெனில், தனதும் பிறரினதும் நன்மை கருதி, அவற்றில் கவனம் செலுத்துவது அவசியமாகும். மேலும் இவை தொடர்பாக கத்தோலிக்க திருச்சபையின் மறைக்கல்வி நூல் கற்பிப்பதை ஆராய்வோம்.

*கற்பு என்பது ஒருவர் தம்முடைய பாலினத்தன்மையை ஆக்கபூர்வமாகத் தம்முள் முறைப்படுத்தல் ஆகும்.*

*ஒருவர் மற்றவரோடு கொள்ளும் உறவில் பாலினத் தன்மை முறைப்படுத்தப்படும்போது அது உண்மையிலேயே மனிதத்தன்மை ஆகிறது. கற்பு எனும் அறநெறி நற்பண்பு, இறைவனின் அருள்கொடையும், தூய ஆவியாரின் கனியும் ஆகும்.*

*கற்பு எனும் நற்பண்பு தற்கையளிப்பிற்கான சுதந் திரத்தின் வெளிப்பாடு எனும் வகையில் தன்னையே அடக்கி ஆளும் பயிற்சி ஆகும். பல கட்டங்களில் பெறப்படும் தொடர்பயிற்சி தன்னை அடக்கி ஆளும் நோக்கத்தை நிறைவேற்ற அவசியமாகிறது.*

*(கத்தோலிக்க திருச்சபை மறைக்கல்வி நூல் 2338 - 2341)*

திருமணவாழ்வு இறை அருளினால் புனிதமாக்கப்படுகின்றது. திருமணத் தம்பதிகளுக்கிடையில் நிகழும் உடல் உறவு தூய்மையானது. ஏனெனில், அதன் வழியாக அவர்கள் இறைவனின் படைப்புச் செயலில் பங்கு கொள்கின்றனர். ஆயினும் திருமணத்திற்குப் புறம்பே அச்செயலில் ஈடுபடுதல் மனிதனுடைய உயர்ந்த பண்பை இழிவுபடுத்திக் கொள்வதாக அமைகின்றது.

''அவ்வாறே இளைஞரும் கட்டுப்பாடு உள்ளவராய் இருக்க அறிவுரை கூறு, நற்செயல்களைச் செய்வதில் எல்லா வகையிலும் நீயே முன்மாதிரியாய் இரு; நாணயத்தோடும் கண்ணியத்தோடும் கற்றுக்கொடு.''

*(தீத்து 2 : 6 - 7)*

- ★ கிறிஸ்தவனின் உடை - மரியாதையானதாக இருத்தல் வேண்டும்.
- ★ நல்லொழுக்கம் உடையவராக இருக்க வேண்டும்.
- ★ நலம் தரும் வார்த்தைகளைப் பேச வேண்டும்.
- ★ உணர்ச்சிகளுக்கு அடிமையாகாது வாழ வேண்டும்.
- ★ தமது வாழ்வைத் தூய்மையாகப் பாதுகாத்துக் கொள்ள, ஆன்ம வலிமையில் வளர வேண்டும்.

''விபசாரம் செய்யாதே எனக் கூறப்பட்டிருப்பதைக் கேள்விப்பட்டிருக்கிறீர்கள். ஆனால், நான் உங்களுக்குச் சொல்கிறேன் ஒரு பெண்ணை இச்சையுடன் நோக்கும் எவரும் தம் உள்ளத்தால் ஏற்கனவே அப்பெண்ணோடு விபசாரம் செய்தாயிற்று........''

*(மத் 5:27-28)*

'அவ்வாறே வயது முதிர்ந்த பெண்களும் தூய நடத்தை உடையவர்களாய், புறங்கூறாதவர்களாய், குடிவெறிக்கு அடிமை ஆகாதவர்களாய், நற்போதனை அளிப்பவர்களாய் இருக்குமாறு கூறு. இவ்வாறு கற்றுக் கொடுப்பதால் இளம் பெண்கள் தங்கள் கணவரிடமும் பிள்ளைகளிடமும் அன்பு காட்டி, கட்டுப்பாடும் கற்பும் உள்ளவர்களாய் வீட்டு வேலைகளைச் செவ்வனே செய்பவர்களாய்த் தங்கள் கணவருக்குப் பணிந்திருப்பார்கள். அப்பொழுதுதான் கடவுளுடைய வார்த்தை பழிப்புக்குள்ளாகாது.' *(தீத்து 2:3-5)*

மேற்குறிப்பிடப்பட்ட கட்டளைகளுக்கிணங்க வாழவேண்டுமெனில்

- திருமணத் தம்பதிகள் திருமண ஒழுக்க வாழ்வைப் பாதுகாக்கவேண்டும்.
- குடும்பங்கள் எதிர் கொள்ளும் எல்லாவித சவால்களையும் செபவாழ்வில் வெற்றி கொள்ள முடியும்.

திருமுழுக்குப் பெற்ற அனைவரும் ஒழுக்க வாழ்விற்கு அழைக்கப் பட்டுள்ளனர். இயேசு தமது முன்மாதிரிகையான வாழ்வை முன்வைத்தே மலைப் பொழிவில் போதித்தார். கிறிஸ்தவர்களாகிய நாம் அனைவரும் ஒழுக்கமுள்ள முன்மாதிரிகையானவர்களாக வாழ்வதற்கு திருமுழுக்கின் மூலம் வாக்குறுதி கொடுத் துள்ளோம். இவ்வாறு வாழ்வதன் மூலம் இறை ஆசீரை நிறைவாகப் பெறுவதோடு விண்ணுலக வாழ்வை உரிமையாக்கிக் கொள்ள முடியும்.

'தூய்மையான உள்ளத்தோர் பேறுபெற்றோர் ஏனெனில், அவர்கள் கடவுளைக் காண்பர்.'

*மத் 5:8*

**6ம், 9ம் கட்டளகளுக்கு எதிரான செயல்கள்**

★ திருமண வாக்குறுதியை மீறல் (திருமணத் தம்பதிகள் தம்மிடையே ஒருவருக் கொருவர் பிரமாணிக்கமின்மை).

★ இச்சைகளுக்கு இடங்கொடுத்தல் (புலன் அடக்கமின்மை).

★ பிறரின் உடலைத் தனது திருப்திக்காக உரிமையாக்கிக் கொள்ளல்.

★ காம எண்ணங்களுக்கு இடமளித்தல் (இச்சையோடு பார்த்தல்).

★ சிறுவர் துஷ்பிரயோகம்.

★ காம இச்சைகளைத் தூண்டும் வகையில் ஆடைகள் அணிதல் (அரைகுறை ஆடை கள் அணிதல்).

★ தவறான உறவுகளை வளர்த்தல்.

★ பரத்தைமையில் ஈடுபடுவோரோடு பாலியல் தொடர்பு வைத்திருத்தல்.

★ கெட்ட நூல்களை வாசித்தல், நீலப் படங்களைப் பார்த்தல், அந்தப்படங்களை பரிமாறல், இணையத்தளத்தினூடாக ஆபாச படங்களைப் பார்த்தல்.

★ கெட்ட வார்த்தைகளைப் பேசுதல்.

★ செயற்கையான குடும்பக்கட்டுப்பாடு முறைகளைக் கையாளுதல்.

★ தரக்குறைவான பேச்சுக்களை அடிக்கடி பேசுதல்.

நல்லொழுக்கம் உள்ளவர்களாக வாழ



19.2 செபிக்கவும்



19.3 திருவிவிலியத்தை வாசிக்கவும்



19.4 திருப்பலியில் பங்குபற்றவும்



19.5 அருளடையாளங்களைப் பெற்றுக்கொள்ளவும்

## செயற்பாடு

1. *பின்வரும் பகுதிகளைத் திருவிவிலியத்தில் தேடி உமது பயிற்சிக் கொப்பியில் எழுதித் தியானிக்கவும்.*



2. இறைவார்த்தையைக் கடைப்பிடித்து **“தூய உள்ளம், மாசற்ற, வாழ்க்கை’’** எனும் தலைப்பில் கவிதை ஒன்று எழுதுக.



**வாழ்க்கைக்கு**

தீயவற்றைப் பார்த்தல், கேட்டல், பின்பற்றுதல், பேசுதல் ஆகியவற்றை ஒழிப்போம்.

# 20 விண்ணுலகில் குறையாத செல்வத்தை தேடிக்கொள்ளுங்கள்

**கிறிஷான்** : *பாதர்! இறையாட்சியை பெற்றுக்கொள்வதற்கு எவ்வாறு தனியார் சொத்துக்களை பயன்படுத்திக்கொள்ள முடியும்?*

**குரு** : *மகனே! சமுதாயத்தில் சிலர் செல்வந்தர்கள், சிலர் ஏழைகள். இறைவன் ஒருவருக்குச் செல்வத்தை கொடுத்திருப்பது அதன் வழியாக இறையாட்சியைப் பெற்றுக்கொள்வதற்காகும்.*

**கிறிஷான்** : *பாதர்! அது எப்படி? எனக்கு விளங்கவில்லை.*

**குரு** : *மகனே! இத் திருவிவிலியப் பகுதிகளை நன்கு வாசியும். அப்போது உமக்கு விளங்கும்.*

*'உங்கள் உடைமைகளை விற்றுத் தர்மம் செய்யுங்கள்; இற்றுப்போகாத பணப்பை களையும் விண்ணுலகில் குறையாத செல் வத்தையும் தேடிக் கொள்ளுங்கள்; அங்கே திரு டன் நெருங்குவதில்லை; பூச்சியும் அரிப்பது இல்லை.' (லூக். 12:33)*

*'உலகச் செல்வத்தைப் பெற்றிருப்போர் தம் சகோதரர் சகோதரிகள் தேவையில் உழல்வதைக் கண்டும் பரிவு காட்டவில்லையென்றால் அவர்களிடம் கடவுளின் அன்பு எப்படி நிலைத்திருக்கும்?'*

*(1 யோவா. 3:17)*

*இவ்வாறான திருவிவிலியப் பகுதிகள் மட்டுமன்றி 7ம், 10ம் இறைகட்டளைகள் வழியாகவும் தனியார் சொத்துக்களைக் கையாள வேண்டிய முறை பற்றி இறைவன் எமக்குக் கற்பிக்கின்றார்.*

## 7 வது கட்டளை

**"களவு செய்யாதே"**

## 10 வது கட்டளை

**பிறர் உடைமையை விரும்பாதே**

*'பிறர் வீட்டைக் கவர்ந்திட விரும்பாதே; பிறர் மனைவி, அடிமை, அடிமைப்பெண், மாடு, கழுதை, அல்லது பிறர்க்குரியது எதையுமே கவர்ந்திட விரும்பாதே.'*

*(வி.ப 20:17)*

### தனியார் சொத்துரிமைபற்றித் திருச்சபை கற்பிப்பது

*பிறருக்கு உரியதை அநீதியான முறையில் பெற்றுக்கொள்ளல், வைத்துக் கொள்ளுதல், ஆசைப்படுதல் ஏழாம் பத்தாம் கட்டளைகளுக்கு எதிரான பாவங்கள் எனத் திருச்சபை கற்பிக்கின்றது.*

எல்லா மனிதர்க்கும் தமது குடும்பத்தினது பராமரிப்பிற்காக போதுமான சொத்துக்களை சொந்தமாக வைத்திருக்கும் உரிமை உள்ளதென்பதே திருச்சபையின் போதனையாகும். இதன்படி கடவுளால் படைக்கப்பட்டுள்ள செல்வம் எல்லாம் அனைத்து மக்களதும் பொதுநலனுக்காகவே படைக்கப்பட்டுள்ளபடியால், அது அவர்கள் அனைவர் மத்தியிலும் நீதி நியாயப்படி பகிர்ந்தளிக்கப்பட வேண்டியதாயுள்ளது. தம்மிடமுள்ளதை ஒருவர் பயன்படுத்தும்போது அது தனது நலனுக்காகவே மட்டுமல்லாது தம் அயலவர்களின் நன்மைக்காகவும் இருக்கவேண்டுமென்பதை உறுதிசெய்துகொள்ள வேண்டும். எளியோருக்கு உதவி செய்ய மனிதர் கடமைப்பட்டுள்ளனர். அப்படிச்செய்யும்போது தமது தேவைக்கும் அதிகமாக உள்ள செல்வத்தில் மட்டுமல்லாது, நமது தேவைக்கென ஒதுக்கப்பட்டதிலும் கூட நாம் உதவ நேரிடும். *(பெரிய குறிப்பிடம் 361)*

பிறரின் சொத்துக்களைப் பாதுகாத்தல் தொடர்பாகப் பின்வரும் படிப்பினைகள் மட்டில் எமது கவனத்தைச் செலுத்துவோம்.

''திருடர், பேராசையுடையோர், குடி வெறியர், பழிதூற்றுவோர், கொள்ளையடிப் போர் ஆகியோர் இறையாட்சியை உரிமையாக்கிக் கொள்வதில்லை.'

*(1கொரி.6:10)*

*7ஆம், 10ஆம் கட்டளைகளைக் கடைப்பிடிக்க நாம் எம் அயலவர்களது உடைமைகளைப் பறித்தெடுக்காமல், முறையாக கடனைத் திருப்பிக்கொடுத்து, வியாபாரத்தில் நேர்மையைக் கடைப்பிடித்து, தொழிலாளர்களுக்கு தகுந்த சம்பளம் கொடுத்து, கிடைக்கும் சம்பளத்திற்கேற்ப பணிசெய்து, ஒப்பந்தங்களுக்கேற்ப திட்டங்களை நிறைவேற்றி, இன்னொருவரிடமிருந்து பெற்ற பொருட்களையோ அல்லது இன்னொருவருக்குச் சொந்தமானதையோ கண்டெடுக்கும்போது அதைத் திருப்பிக் கொடுப்பது ஆகியவை நாம் இக்கட்டளைகளுக்கேற்ப செய்ய வேண்டியவையாகும். (பெரிய குறிப்பிடம் 358)*



**20.1 பாவத்திற்கு மன்னிப்பு வேண்டல்**

உரிமையாளரின் நியாயமான விருப்பத்திற்கு எதிராக அவரின் உடைமைகளை கவர்ந்து கொள்வதும் பயன்படுத்துவதுமாகிய திருட்டை ஏழாம் கட்டளை தடைசெய்கிறது.

*(கத்தோலிக்க திருச்சபை மறைக்கல்வி நூல் 2412)*

ஏழைகளை அன்பு செய்தல் தொடர்பாக ஏழாம், பத்தாம் கட்டளைகள் மூலம் இறைவன் எமக்குக் கட்டளையிடுகின்றார்.

பேறுபெற்றோர் பற்றிய இயேசுவின் போதனையும் ஏழைகள் மீது எப்பொழுதும் அக்கறைகொண்ட அவரது எடுத்துக் காட்டும், ஏழைகள் மீது அன்பு கொள்ள எம்மை தூண்டுகின்றன. ''மிகச்சிறியோராகிய என் சகோதரர், சகோதரிகளுள் ஒருவருக்கு நீங்கள் செய்ததையெல்லாம் எனக்கே செய்தீர்கள்'' என இயேசு கூறினார். வறுமைக்கு எதிராகவும்,பண்பாடு, அறநெறி, சமயம், ஆகியவற்றில் நிலவுகின்ற பல்வேறு குறைபாடுகளுக்கு எதிராகவும் மேற்கொள்ளப்படும் போராட்டத்தின் வழியாக ஏழைகள் மேல் உள்ள அன்பு வெளிப்படுத்தப்படுகிறது. ஆன்மாவையும், உடலையும் சார்ந்த இரக்கச் செயல்களும் பல நூற்றாண்டுகளாக உருவாக்கப்பட்டுள்ள பல்வேறு பிறரன்பு நிறுவனங்களும் ஏழைகள் மட்டில் தனிப்பட்ட அன்பிற்கு தெளிவான சாட்சிகள் ஆகும். இதுவே இயேசுவின் சீடர்களுக்கான தனிப்பண்பும் ஆகும்.
*(கத்தோலிக்க திருச்சபை மறைக்கல்வி நூல் 2444-2446)*



**20.2 ஏழைகளுக்கு உதவுதல்**

மனிதன் சொத்துக்களுக்காக அல்ல. சொத்துக்கள் மனிதனுக்காகவே. இறைவன் மனிதனுக்கு அளித்த சொத்துக்களை நீதியான முறையில் பயன்படுத்தி பிறருக்கு உதவவேண்டும். நீதியான முறையில் கையாழுவதன் மூலம் நாம் மேலும் மேலும் இறைவனின் ஆசீரைப் பெறமுடியும். அத்துடன் எம்மிடமுள்ள தனிச் சொத்துக்களைப் போலவே, அறிவுசார் உடைமைகளையும் மற்றவர்களோடு பகிர்ந்துகொள்ள வேண்டும்.

திருடர் இனித் திருடாமல் இருக்கட்டும். மாறாக, தேவையில் உழல்வோருக்குப் பகிர்ந்து கொடுக்கத் தங்களிடம் பொருள் இருக்கும் வகையில், தாங்களே தங்கள் கைகளால் நேர்மையோடு பாடுபட்டு உழைக்கட்டும்.
*(எபே. 4:28)*

## 7 ஆம் 10ஆம் கட்டளைக்கு எதிரான செயல்கள்

★ களவெடுத்தல்.

★ வஞ்சனையாகப் பிறருக்குரியதை அபகரித்தல்.

★ பிறரது உடைமைகளை அழித்தல்.

★ பிறரது உடைமைகளை பலாத்காரமாகப் பெற்றுக்கொள்ளல்.

★ பிறருடைய காலத்தை வீணாக்கல்.

★ உழைப்பிற்கேற்ப கூலி வழங்காமை, குறைந்த வேதனத்திற்கு வேலை வாங்குதல்.

★ தனது தொழிலைச் சரியாக நிறைவேற்றாதிருத்தல்.

★ அதிக இலாபம், வட்டி, கையூட்டு பெற்றுக்கொள்ளல்.

★ பெறுமதிவாய்ந்த பொருட்களைக் குறைந்த விலையில் வாங்குதல்.

★ தரம் குறைந்த பெறுமதியற்ற பொருட்களைக் கூடிய விலைக்கு விற்றல்.

★ பிறரின் பதவிகள், உரிமைகளைத் தட்டிப்பறித்தல்.

★ கபடமாகப் போட்டிகளில் வெற்றிகொள்ளல்

★ பொதுச் சொத்துக்களைத் தனியார் தேவைகளுக்குப் பயன்படுத்தல்.

★ பிரவேசக் கட்டணமின்றி பொதுப்போக்குவரத்து வாகனங்களில் பயணித்தல்.

★ வருமானவரி, வரிப்பணம், மின், தொலைபேசிக் கட்டணம் செலுத்தாதிருத்தல்.

★ திருமணம், பிறப்பு, நற்சான்று ஆகியவற்றுக்கான பத்திரங்களை தவறான வழி களில் பெற்றுக்கொள்ளல்.

★ பரீட்சைகளில் பார்த்து எழுதியும் மாற்றம் செய்தும் சித்திபெறல்.

★ கள்ள வாக்குரிமை வழங்குதல்.

★ பொதுத்தொலைபேசி, வாகனங்கள் என்பவற்றை சொந்தத் தேவைக்காகப் பயன்படுத்தல்.

## செயற்பாடு

1. பின்வரும் பகுதிகளை திருவிவிலியத்திலிருந்து தேடி, எடுத்து உமது பயிற்சிக் கொப்பியில் எழுதி தியானியுங்கள்.

   2 கொரி 8:9

   இணைச்சட்டம் 25:15-16

   யாக்கோபு 5:4

   ஆமோஸ் 8:4-7

2. 'கிறிஸ்தவ பிள்ளையாகிய நான் பத்துக்கட்டளைகளில் 7ஆம், 10ஆம் கட்டளைகளைச் சரியாக நிறைவேற்றுவேன்' என்னும் தலைப்பில் சிறுவர் பத்திரிகைக்கு ஆக்கம் ஒன்று எழுதுக.



**வாழ்க்கைக்கு**

உலக, அறிவுசார் செல்வங்களை தினமும் பிறரோடு பகிர்ந்து கொள்க.
பிறரோடு பகிர்ந்து கொள்ளக் கிடைத்த சந்தர்ப்பத்துக்காக இராச்செபத்தில் இறைவனுக்கு நன்றி கூறுக.

# 21 உண்மையுள்ளவர்களாக வாழ்வோம்


21.1 அனனியாவிடம் விசாரித்தல்.


21.2 அனனியா இறத்தல்

அனனியா என்னும் பெயருள்ள ஒருவன் இருந்தான். அவன் தன் மனைவி சப்பிராவுடன் சேர்ந்து தன்னுடைய நிலத்தை விற்றான். விற்ற தொகையில் ஒரு பகுதியைத் தன் மனைவி அறியத் தனக்கென்று வைத்துக்கொண்டு, மறு பகுதியைத் திருத்தூதரின் காலடியில் கொண்டுவந்து வைத்தான். அப்பொழுது பேதுரு, ''அனனியா, நீ நிலத்தை விற்ற தொகையின் ஒரு பகுதியை உனக்கென்று வைத்துக்கொண்டு தூய ஆவியாரிடம் பொய் சொல்லும்படி சாத்தான் உன் உள்ளத்தை ஆட்கொண்டதேன்? அது விற்கப்படுவதற்கு முன்பு உன்னுடையதாகத்தானே இருந்தது? அதை விற்ற பின்பும் அந்தப்பணம் உன்னுடைய உரிமையாகத்தானே இருந்தது? பின்பு ஏன் நீ இச்செயலுக்கு உன் உள்ளத்தில் இடமளித்தாய்? நீ மனிதரிடமல்ல, கடவுளிடமல்லவா பொய் சொன்னாய்'' என்று கூறினார். அவர் கூறியதைக் கேட்டதும் அனனியா கீழே விழுந்து உயிர்விட்டான். இதைக் கேள்வியுற்ற அனைவரையும் பேரச்சம் ஆட்கொண்டது. இளைஞர்கள் எழுந்து வந்து அவனைத் துணியால் மூடிச் சுமந்துகொண்டு போய் அடக்கம் செய்தார்கள். ஏறக்குறைய மூன்று மணி நேரத்திற்குப் பின் அவன் மனைவி உள்ளே வந்தாள். நிகழ்ந்தது எதுவும் அவளுக்குத் தெரியாது. பேதுரு அவளைப் பார்த்து, ''நிலத்தை இவ்வளவுக்குத்தானா விற்றீர்கள்? சொல்'' என்று கேட்க, அவள் ''ஆம், இவ்வளவுக்குத்தான் விற்றோம்'' என்று பதிலளித்தாள். மீண்டும் பேதுரு அவளைப் பார்த்து,


21.3 சப்பிராவின் மரணம்

*''தூய ஆவியாரைச் சோதிக்க நீங்கள் உடன்பட்டதேன்? இதோ! உன் கணவனை அடக்கம் செய்தவர்கள் கதவருகில் வந்துவிட்டார்கள். அவர்கள் உன்னையும் வெளியே சுமந்து செல்வார்கள்'' என்றார். உடனே அவள் அவர் காலடியில் விழுந்து உயிர்விட்டாள். இளைஞர்கள் உள்ளே வந்து அவள் இறந்து கிடப்பதைக்கண்டு வெளியே சுமந்து கொண்டு போய் அவள் கணவனுக்கு அருகில் அடக்கம் செய்தார்கள். திருச்சபையார் யாவரையும், இதைக் கேள்வியுற்ற அனைவரையுமே பேரச்சம் ஆட்கொண்டது.*

*(திப 5: 1-11)*

## இதைப்பற்றி சிந்தித்துப் பாருங்கள்.

அனைவரையும் ஏமாற்ற முடியுமென அனனியாவும், சப்பிராவும் நினைத்தார்கள். தூய ஆவியின் வல்லமையால் தூய பேதுரு உண்மையை அறிந்து கொண்டார். அவர்களுடைய நேர்மையின்மையைத் தூய பேதுரு வெளிப்படுத்தினார். இறைவனுக்குப் பொய் சொன்னவர்களுக்குப் பயங்கர தீர்வு கிடைத்தது. இது ஒரு சோகக் கதையாகும். திருச்சபையின் உறுப்பினர்களாகிய இவர்கள் இருவரும், தூய ஆவிக்கு எதிராக பொய் சொல்லி, மற்றவர்கள் முன் நற்பெயரைப் பெற்றுக்கொள்ள முயன்றார்கள். அவர்கள் கூறிய பொய் சிறியதாகத் தோன்றினாலும், அது பாரதூரமான செயலாகும்.

அனனியாவும், சப்பிராவும் உண்மையை மறைத்து பாவச் செயலைப் புரிந்தார்கள். இச்செயலுக்கு ஆதிக் கிரேக்கச் சொல்லின் கருத்து ' பொய் முகம் அணிந்து நாடகம் நடித்தலாகும்'.

இறைவன் உண்மையுள்ளவராகையால் அவருடைய பிள்ளைகளாகிய நாமும் உண்மையும் நேர்மையுள்ளவர்களாக இவ்வுலகில் வாழ்வது அவரது விருப்பமாகும்.

*''பிறருக்கு எதிராகப் பொய்ச்சான்று சொல்லாதே'' (விப 20:16).*

## உண்மைக்குள் வாழுதல்

*உண்மைகளுக்கெல்லாம் ஊற்றாக இருப்பவர் இறைவனே என பழைய ஏற்பாடு சான்று பகர்கிறது. அவருடைய வார்த்தை உண்மையுள்ளது. அவருடைய திருச் சட்டம் உண்மையுள்ளது. எல்லாத் தலைமுறையினருக்கும் அவர் பிரமாணிக்கம் உடையவர் இறைவன் உண்மையுள்ளவராக இருப்பதால் அவருடைய மக்கள் அனைவரும் உண்மையில் வாழ அழைக்கப்படுகிறார்கள்.*

*(கத்தோலிக்க திருச்சபை மறைக்கல்வி நூல் 2465)*

எட்டாவது இறைகட்டளை மூலம் கூறப்படுவது: உண்மையைக் கடைப்பிடிப்பதும், உண்மைக்குச் சான்று பகர்வதுமாகும். நாம் உண்மையுடையவர்களாக வாழ வேண்டுமெனில், எப்பொழுதும் மனச்சான்றின் குரலுக்குச் செவிமடுக்க வேண்டும்.

*இறைவனின் முழு உண்மையும் கிறிஸ்துவில் வெளிப் படுத்தப்பட்டுள்ளது. அவர் அருளிலும் உண்மையிலும் நிறைந்து உண்மைக்குள் வாழ்பவர். அவரைப் பின்பற்றுவோர் உண்மையைப் பேசி உண்மையில் வாழ்வர். இறைவார்த்தையைக் கேட்டு அதன்படி எமது வாழ்க்கையை அமைத்துக் கொள்வோமாகில் நாமும் அவரது சீடர்களாவோம். சொல்லிலும், செயலிலும் நாம் உண்மையுள்ளவர்கள் என்பதை எடுத்துக் காட்ட வேண்டும். உண்மையை மறைத்து பொய்மைக்கு துணை போகக் கூடாது. சமூகத்தில் வாழும்போது உண்மைக்குப் பிரமாணிக்கமாக இருக்க வேண்டும். (க.தி.ம 2466 - 2470)*

## உண்மைக்குச் சான்று பகர்தல்

இயேசு தமது வாழ்வின் மூலம் உண்மைக்குச் சான்று பகர்ந்தார்.

*பிலாத்து அவரிடம், ''அப்படியானால் நீ அரசன்தானோ?'' என்று கேட்டான். அதற்கு இயேசு, ''அரசன் என்று நீர் சொல்கிறீர். உண்மையை எடுத்துரைப்பதே என்பணி. இதற்காகவே நான் பிறந்தேன்; இதற்காகவே உலகிற்கு வந்தேன். உண்மையைச் சார்ந்தவர் அனைவரும் என் குரலுக்குச் செவிசாய்க்கின்றனர்'' என்றார். (யோவான் 18:37)*

பொதுவாழ்விலும், தனிவாழ்விலும் கிறிஸ்தவர்கள் தமது செயற் பாட்டின் ஒவ்வொரு துறையிலும் நற்செய்தியின் உண்மைக்குச் சான்று பகரவேண்டும். அவசியம் ஏற்படின் தமது வாழ்வையே தியாகம் செய்ய வேண்டும். மறை சாட்சியமே நம்பிக்கையின் உண்மைக்குத் தலைசிறந்த சாட்சியாகும்.

*(கத்தோலிக்க திருச்சபை மறைக்கல்வி நூல் 2471 - 2474)*

## எட்டாம் கட்டளைக்கு எதிரான பாவங்கள்

★ பொய் பேசுதல்.

★ கோள் சொல்லுதல்.

★ வதந்தி பரப்புதல்.

★ துவேசம், ஏமாற்றுதல், வஞ்சித்தல், நேர்மை இன்மை, பொறாமை, தூற்றுதல்.

★ தொழில் இரகசியங்களைப் வெளிப்படுத்தல்.

★ தன் குற்றங்களைப் பிறர் மேல் சுமத்துதல்.

★ சுய இலாபத்தை மட்டும் கருத்திற் கொள்ளல்.

★ பெற்றோர், ஆசிரியர், அதிகாரிகளை ஏமாற்றுதல்.

★ சுய கௌரவத்திற்காகப் பிறரைக் காட்டிக்கொடுத்தல்.

★ பொய் வாக்குறுதி வழங்குதல்.

★ பிறருக்குப் பொய்கூறி அலைக்கழித்தல்.

★ ஒப்புரவில் குற்றங்களை மறைத்தல்.

★ தவறானதைக் கற்பித்தல், பிறரை ஏமாற்றுதல்.

★ பொய் வதந்திகளால் ஒருவருடைய நற்பெயரைக் கெடுத்தல்.

★ மற்றவர்களைப் பற்றிப் பசப்புதல், முகஸ்துதி கூறுதல்.

★ அளவுக்கு மீறி தன்னைப் புகழ்தல்.

★ பிறருடைய முன்னேற்றத்திற்கு தடையாக இருத்தல்.

★ பிறருடைய கருத்தைத் தனது கருத்தாகக் கூறுதல்.

## இரகசியம் பேணலின் முக்கியத்துவம்

அரசியல் வாதிகள், அரச பணியாளர்கள், படைவீரர், சட்டத்தரணிகள், வைத்தியர்கள் ஆகியோர் உத்தியோகபூர்வ கடமைகள் தொடர்பாக இரகசியங்களைப் பாதுகாக்க கடமைப்பட்டுள்ளனர். ஏனெனில் அவர்கள் குறித்த விடயங்களைப் பாதுகாப்பது தொடர்பாக சத்தியப்பிரமாணம் அல்லது உறுதிமொழி எடுத்துள்ளனர்.

உறுதிமொழியை மீறி இரகசியத்தை வெளிப்படுத்துவதால், பின்வரும் நபர்களுக்கு ஆபத்து நேரிடக்கூடும்.

1. தகவல்களை வழங்கியவர்.
2. தகவல்களை பெற்றுக்கொண்டவர்
3. மூன்றாம் நபர் (வேறுநபர்)

மேற்குறிப்பிட்ட நபர்கள் எவருக்கும் ஆபத்து ஏற்படாதிருப்பின் தகுந்த காரணத்திற்காக இரகசியத்தை வெளியிடுவது தவறு அல்ல. எனினும் மிகவும் கவனமாகவும், சாமர்த்தியத்துடனும் அதனை மேற்கொள்வது சாலச் சிறந்ததாகும்.

(கதிம 2491)

### செயற்பாடு

1. அனனியா, சப்பிரா மேற்கொண்ட செயல்களிலிருந்து உமக்குக் கிட்டும் செய்திகள் மூன்று எழுதுக.
2. எட்டாம் கட்டளைப்படி செய்யவேண்டியவை, செய்யத்தகாதவை பற்றி வெவ்வேறாக அட்டவணைப்படுத்துக.
3. நீர் உமது வாழ்வில் உண்மைக்குச் சான்று பகர்ந்த ஒரு சந்தர்ப்பத்தை எழுதுக.
4. பின்வரும் விடயங்களைக் கருத்தில் கொண்டு **‘உண்மையுள்ளவர்களாக வாழ்வோம்’** என்னும் தலைப்பில் 200 சொற்களில் கட்டுரை ஒன்று வரைக.
   அ. உண்மையில் வாழுதல்.
   ஆ. இரகசியங்களைப் பாதுகாப்பதன் முக்கியத்துவம்.
   இ. எட்டாம் கட்டளைக்கு எதிரான பாவங்கள்.



**வாழ்க்கைக்கு**

குடும்பத்தில் ஒவ்வொருவரும்
நேர்மையாக உண்மையுள்ளவர்களாக
வாழ்வோம்!

# 22 திருவழிபாட்டு ஆண்டு

திருவழிபாடு என்பதற்கு ஆங்கிலத்தில் பயன்படுத்தப்படும் சொல் (Liturgy) என்பதாகும். இது லிட்டர்ஜியா (LEITOURGIA) என்னும் கிரேக்கச் சொல்லிலிருந்து பிறந்ததாகும். அதாவது லாஒஸ் (LAOS), எர்கோன் (ERGON)என்னும் இரு சொற்களிலிருந்து உருவானது. லாஒஸ் என்பது மக்கள் எனப் பொருள்படும். எர்கோன் என்பது வேதனம் எதுவும் பெறாது செய்யும், முக்கியத்துவம் வாய்ந்த பணியைக் குறிக்கின்றது. அதன்படி லிட்டர்ஜியா என்பது மக்களுக்காக, மக்கள் சார்பாக வேதனம் எதுவும் பெறாது செய்யும் பணியாகும். அக்காலத்தில் இடம்பெற்ற பிரபல்யமான திருவிழாக்களும், கட்டாய அரச பணிகளும் லிட்டர்ஜியா எனக் கருதப்பட்டன. இதனை சமயக் கண்ணோட்டத்தில் நோக்கும் போது அது இறைவனுக்குச் செய்யும் வழிபாடாகும். திருத்தந்தை XII ஆம் பத்திநாதர் ''இறைவனின் நடுநிலையாளர்'' என்னும் சுற்றுமடல் இல. 20 இல் திருவழிபாடு பற்றி பின்வருமாறு கூறுகின்றார்.

''திருச்சபையின் தலையாகிய கிறிஸ்துவும் மறையுடல் உறுப்புகளாகிய இறைமக்களும் இணைந்து இறைவனுக்குச் செலுத்தும் பகிரங்க, முழுமையான வழிபாடே திருவழிபாடு ஆகும். அதனால் அவ்வழிபாடு மேலான செயலாகிறது'' (இறைவனின் நடுநிலையாளர் இல. 20)

இரண்டாம் வத்திக்கான் சங்கத்தின் திருவழிபாடு பற்றிய கொள்கைத் திரட்டு இல. 7 இல் திருவழிபாடு பற்றி பின்வருமாறு கூறப்படுகிறது.

இயேசு கிறிஸ்துவின் மறையுடல் தலையாலும் அதன் உறுப்புக் களாலும் வெளிப்படையான முழுவழிபாடு நடத்தப்படுகின்றது. இதனால் தான், திருவழிபாட்டுக் கொண்டாட்டம் ஒவ்வொன்றும் திருப்பணியாளராகிய கிறிஸ்துவினுடையவும், திருச்சபை என்னும் அவரது உடலினுடையவும் பணி என்னும் முறையில் அனைத்திலும் உயர்ந்த திருச்செயல் ஆகின்றது.

திருவழிப்பாட்டை மூன்று பிரதான பகுதிகளாகப் பிரிக்கலாம்.

1. திருப்பலி
2. அருளடையாளங்கள்
3. திருப்புகழ்மாலை

கிறிஸ்துவின் பாஸ்கா மறைபொருளையும், மீட்பின் செயலையும் எக் காலத்திற்கும் நினைவூட்டவும், அதனை உண்மையாகவே வாழவைக்கவும், திரு வழிபாட்டு ஆண்டு இறைமக்களுக்கு உதவுகின்றது. சாதாரண வருடத்தைப் போல் திருவழிபாட்டு ஆண்டும் 52 வாரங்களைக் கொண்டது.

ஞாயிறு திருப்பலிக்கான நற்செய்தி வாசகங்கள் முதலாம், இரண்டாம், மூன்றாம் ஆண்டு எனப் பிரிக்கப்பட்டுள்ளன. மூன்று ஆண்டுகளிலும் நற்செய்தி நூல்கள் பின்வருமாறு பயன்படுத்தப்படுகின்றன.

முதலாம் ஆண்டு - **தூய மத்தேயு நற்செய்தி**
இரண்டாம் ஆண்டு - **தூய மாற்கு நற்செய்தி**
மூன்றாம் ஆண்டு - **தூய லூக்கா நற்செய்தி**

யோவான் நற்செய்தி தவக்காலத்திலும் பாஸ்காக்காலத்திலும் பயன் படுத்தப்படும். திருவழிபாட்டு வாரத்தின் விசேடமான நாள் ஞாயிறு தினமாகும். அன்றைய தினம் பாஸ்கா மறைபொருள் கொண்டாடப்படுகின்றது.

## திருவழிபாட்டு ஆண்டுக் காலச்சக்கரம்



# திருவழிபாட்டு ஆண்டின் திருநாட்கள்



## திருவருகைக் காலம்

வருகைக்காலம் என்பது வருகைக்காக காத்திருக்கும் காலமாகும். அந்த வகையில் திருவருகை என்பது இயேசுகிறிஸ்துவின் வருகையைக் குறிக்கின்றது. இதன்படி திருவருகைக்காலம் என்பது எதிர்நோக்கின் காலமாகும். இயேசு கிறிஸ்துவின் வருகைக்காக உண்மையான வாழ்க்கை மாற்றத்தை ஏற்படுத்திக் கொள்ள இக்காலம் அழைப்பு விடுகின்றது.

திருவருகைக் காலத்தில்

★ இயேசுக் கிறிஸ்துவின் இரண்டாவது வருகைக்கு ஆயத்தம் செய்கிறோம்.
★ இயேசு கிறிஸ்துவின் வரலாற்று வருகையை நினைவு கூருகின்றோம்.

### திருவருகைக் காலத்தின் பிரதான பகுதிகள் இரண்டாகும்.

1. கார்த்திகை 27 ஆம் திகதிக்கும் மார்கழி 3 ஆம் திகதிக்கும் இடைப்பட்ட காலப்பகுதிக்குள் வரும் திருவருகைக் காலத்தின் முதல் ஞாயிறு தினத்திலிருந்து மார்கழி 16 ஆம் திகதி வரை இயேசு கிறிஸ்துவின் இரண்டாம் வருகைக்கு அதாவது **பருசியாவிற்கு** (PAROUSIA) ஆயத்தம் செய்யும் காலமாகும்.
2. மார்கழி 17 ஆம் திகதி முதல் 24 ஆம் திகதி வரையான காலத்தில் இயேசு கிறிஸ்துவின் வரலாற்று வருகையை அதாவது முதல் வருகையை நினைவுகூர ஆயத்தம் செய்யும் காலமாகும்.

திருவருகைக் காலத்தில் முக்கிய திருநாள் - மார்கழி 8 திருவழிபாட்டு ஆண்டு அதிகார பூர்வமாக ஆரம்பிப்பது திருவருகைக் காலத்தின் முதல் ஞாயிறு தினத்துடனாகும். மார்கழி 8 மரியாவின் அமல உற்பவ பெருவிழா (மார்கழி 8 ஞாயிறு தினமெனில் இவ்விழா மார்கழி 9ம் திகதி கொண்டாடப்படும் இது கடன் திருநாளாகக் கொண்டாடப்படும்) திருவருகைக் காலத்தில் கொண்டாடப்படும். முக்கியமான திருவிழாவாக மரியாள் மாசில்லாமல் உற்பவித்த இத் திருநாள் விளங்குகின்றது. மார்கழி மாதம் 8 ஆம் திகதி ஞாயிறு தினமாயின் இவ்விழா 9 ஆம் திகதி கொண்டாடப்படும். இது ஒரு கடன்திருநாள் ஆகும்.

## கிறிஸ்து பிறப்புக்காலம்

இக்காலம் கிறிஸ்துவின் பிறப்புத் திருவிழாவோடு ஆரம்பமாகி, திருக் காட்சித் திருவிழாவின் பின்வரும் சனிக்கிழமை அதாவது இயேசுவின் திருமுழுக்கு திருவிழாவை நினைவுகூரும் நாளுக்கு முன்வரும் சனிக்கிழமை முடிவடையும். இக்காலத்தில் இயேசுவின் பிறப்புக்கும், குழந்தைப் பருவத்தின் பிரதான நிகழ்வுகளுக்கும், பாஸ்கா மறைபொருளோடு உள்ள தொடர்பு என்பது நினைவு கூரப்படுகிறது.

### கிறிஸ்து பிறப்புக்காலத்தில் கொண்டாடப்படும் பிரதானமான திருவிழாக்கள்.

★ மார்கழி 25 கிறிஸ்துவின் பிறப்பு பெருவிழா.
★ மார்கழி 25 இன் பின்வரும் ஞாயிறு திருக்குடும்பப் பெருவிழா.
★ தை 1 இறை அன்னையாம் மரியாவின் பெருவிழா.
★ திருக்குடும்பத் திருவிழாவுக்குப் பின்வரும் ஞாயிறு திருக்காட்சிப் பெருவிழா.

## தவக்காலம்

விபூதிப் புதன் முதல் பெரிய வியாழன் வரை அனுசரிக்கப்படும் தவக்காலத்திற்கு பின்வரும் விளக்கங்கள் கொடுக்கப்படுகின்றன.

★ இயேசு பகிரங்க வாழ்வை ஆரம்பிக்கும் முன்னர் பாலைவனத்தில் செப, தவ வாழ்வில் ஈடுபட்ட காலமாகும்.
★ மனம் வருந்தி ஆன்ம வலிமையும் வாழ்வில் மாற்றத்தையும் ஏற்படுத்திக் கொள்ளும் காலமாகும்.
★ எமது திருமுழுக்கு வாழ்வில் புத்தெழுச்சியை ஏற்படுத்தும் காலமாகும். அதாவது பாவத்தில் மரித்து புதுவாழ்வில் பிறக்கும் காலமாகும்.
★ உலகியல் ஆசைகளில் மற்றும் சுயநலத்தில் மரித்து இறைவனில் சுதந்திர மக்களாக வாழும் காலமாகும்.

ஒறுத்தல் முயற்சிகளில் ஈடுபடல், தானதருமங்கள் செய்தல், அகதிகளுக்கு உதவுதல், மன்னித்தல், திருமணித்தியாலம், சிலுவைப்பாதை போன்ற பக்தி முயற்சிகளில் ஈடுபடுவதற்கு பரிசுத்த திருச்சபை எமக்கு அழைப்பு விடுக்கின்றது. வளர்ந்தோர் திருமுழுக்குப் பெறுபவர்களை ஆயத்தப்படுத்தும் இறுதிக் காலம் தவக்காலமாகும். இக்காலத்தில் ''அல்லேலுயா'', ''குளோறியா'' (வானவர் கீதம்) பாடுவது தவிர்க்கப்படுகிறது.

## பரிசுத்த வாரம்

குருத்தோலை ஞாயிறு தொடக்கம் பாஸ்கா ஞாயிறு (உயிர்த்த ஞாயிறு) வரையான காலம் பரிசுத்த வாரமாகும்.

### பரிசுத்த வாரத்தின் முக்கியமான திருவழிபாடுகள்

★ குருத்தோலை ஞாயிறு → கிறிஸ்து அரசராக எருசலேமுக்கு வருகை தந்ததை நினைவுகூரல்.

★ பெரிய வியாழன் → எண்ணெய் ஆசீர்வதிக்கப்படும். கிறிஸ்துவின் இறுதி இராவுணவைக் கொண்டாடும் மாலைத் திருப்பலி நடைபெறும்.

★ பெரிய வெள்ளி → கிறிஸ்துவின் பாடுகளையும், மரணத்தையும் நினைவு கூரல்.

★ அல்லேலூயா சனிக்கிழமை → கிறிஸ்துவின் உயிர்ப்பைக் கொண்டாடும் பாஸ்கா இரவுத் திருப்பலி நடைபெறும்.

*பெரிய வியாழன், பெரிய வெள்ளி, அல்லேலூயா சனிக்கிழமை ஆகிய மூன்று நாட்களும் மிகவும் புனிதமான நாட்களாகக் கொள்ளப்படுகிறது.*

## பாஸ்கா காலம்

*பாஸ்கா ஞாயிறுடன் பாஸ்காக்காலம் ஆரம்பமாகின்றது. பாஸ்கா ஞாயிறன்று கிறிஸ்துவின் உயிர்ப்பு விழா கொண்டாடப்படுவதுடன், அது திருவழிபாட்டு ஆண்டின் முக்கியமானதும், முதன்மையானதுமான பெருவிழாவாகும். பாஸ்காக் காலம் உயிர்ப்பின் காலமாகவும் அறிமுகப்படுத்தப்படுகிறது.*

*பாஸ்கா ஞாயிறு தினத்திலிருந்து நாற்பது நாட்களுக்குப் பின் கிறிஸ்துவின் விண்ணேற்பு விழா கொண்டாடப்படுகிறது.*

*கிறிஸ்துவின் விண்ணேற்புத் பெருவிழாவிலிருந்து பத்து நாட்களுக்குப் பின் தூய ஆவியின் வருகைப் பெருவிழா (பெந்தகோஸ்தே விழா) கொண்டாடப்படுகின்றது. பெந்தகோஸ்து விழாவுடன் பாஸ்காக் காலம் நிறைவு பெறுகின்றது.*

*உயிர்ப்பு காலத்தில் கிறிஸ்துவின் உயிர்ப்பு, அவர் காட்சி கொடுத்தமை, அவரின் விண்ணேற்பு, பெந்தகோஸ்து தினம் (தூய ஆவியின் வருகை) என்பன நினைவு கூரப்படுகின்றன.*

## பொதுக்காலம்

*பொதுக்காலம் 34 ஞாயிறு தினங்களைக் கொண்டுள்ளது. திருவழிபாட்டு ஆண்டில் பொதுக்காலம் இரண்டு பகுதிகளைக் கொண்டுள்ளது.*

### பொதுக்காலத்தின் முதற்பகுதி

*கிறிஸ்துவின் திருமுழுக்கு விழாவைக் கொண்டாடும் ஞாயிறு தினத்தின் மறுநாள் தொடக்கம் விபூதிப் புதனுக்கு முதல் நாள் வரையான காலம் முதற் பகுதிக்குரியது.*

### பொதுக்காலத்தின் இரண்டாம் பகுதி

*தூய ஆவியின் திருவிழாவைக் கொண்டாடும் ஞாயிறு தினத்தின் மறுநாள் தொடக்கம் திருவருகைக் காலத்தின் முதல் ஞாயிறு வரையான காலம் இரண்டாம் பகுதிக்குரியது.*

*இக்காலத்தில் கிறிஸ்துவின் பகிரங்க வாழ்வு அவரின் புதுமைகள், போதனைகள் என்பன நினைவு கூறப்படுகின்றன. முக்கியமாக பொதுக்காலத்தில் கிறிஸ்தவர்கள் கிறிஸ்து பெற்றுத் தந்த மீட்பை நினைவு கூறுகின்றனர். இக்காலத்தில் மரியன்னையின், புனிதர்களின் விழாக்கள் கொண்டாடப்படுகின்றன.*

### பொதுக்காலத்தில் கொண்டாடப்படும் முக்கியமான விழாக்கள்

★ இலங்கை அன்னையின் பெருவிழா (மாசி 4)
★ பரிசுத்த திரித்துவத்தின் பெருவிழா (கிறிஸ்துவின் திருவுடல் திரு இரத்தப் பெருவிழா)
★ தூய நற்கருணைத் திருவிழா
★ திரு இருதயத்தின் திருவிழா
★ சகல புனிதர்களின் பெருவிழா (கார்த்திகை - 01)
★ இறந்தவர்களை நினைவுகூரும் தினம் (கார்த்திகை 02)
★ கிறிஸ்து அரசர் பெருவிழா

| நிறம் | காலம் | கருத்து | பயன்படுத்தும் நாட்கள் |
|---|---|---|---|
| வெள்ளை | நத்தார் காலம் உத்தான காலம் | தூய்மை, மகிமை, நித்தியம் என்ற கருத்தைத் தருகின்றது. | கிறிஸ்துவின், தேவ அன்னையின், புனிதர்களின் விழாக்களின் போது. |
| சிவப்பு | | மறை சாட்சிகளையும், அல்லது விசுவாசத்திற்கு சான்று பகர்ந்தவர்களையும் அடையாளப்படுத்துகின்றது. நெருப்பு, இரத்தம் கருத்தை தருகின்றது. | துய ஆவியின் விழா, மறை சாட்சிகளின் விழா, குருத்தோலை ஞாயிறு, பெரிய வெள்ளிக்கிழமை. |
| பச்சை | பொதுக்காலம் | எதிர்நோக்கு, புதுவாழ்வு, வளர்ச்சி என்ற கருத்தைத் தருகின்றது. | திருவருகைக்காலம், தவக்காலம் தவிர்ந்த முக்கிய விழாக்கள் அல்லாத ஏனைய எல்லா ஞாயிறு தினங்களிலும். |
| ஊதா | திருவருகைக் காலம், தவக்காலம். | மனஸ்தாபத்தினதும், நம்பிக்கையினதும் அடையாளம். | திருவருகைக் காலத்திலும், தவக் காலத்திலும், இறந்தவர்களுக்கான திருப்பலியின் போதும் பயன்படுத்தப்படும். |

## செயற்பாடு

1. **"இறைவனின் நடுநிலையாளர்"** என்னும் சுற்றுமடல் இல 20 இன் படி திருவழிபாட்டின் கருத்தைக் குறிப்பிடுக.

2. கீழே தரப்பட்டுள்ள தலைப்பின் கீழ் **"திருவழிபாட்டு ஆண்டு"** தொடர்பாக சிறு புத்தகம் ஒன்றினை தயாரிக்குக.
   1. அறிமுகம் (திருவழிபாட்டு ஆண்டு தொடர்பாக).
   2. திருவழிபாட்டு ஆண்டின் காலங்கள்.
   3. ஒவ்வொரு காலத்திற்குமுரிய நிறங்களும் அவற்றின் கருத்துக்களும்.
   4. ஒவ்வொரு காலத்துக்குமுரிய விழாக்கள்.
   5. உமது பங்கின் விழா.

3. திருவருகைக் காலத்தின் மூலம் உமது வாழ்க்கைக்குக் கிடைக்கும் செய்திகள் இரண்டினைத் தருக.

4. உமது பங்கில் திருவழிபாட்டு வழிபாடுகளை கருத்துள்ளதாக செயற்படுத்த நீர் முன்வைக்கும் ஆலோசனைகள் ஐந்து எழுதுக.



**வாழ்க்கைக்கு**

திருவழிபாட்டு ஆண்டிலுள்ள விழாக்களில் குடும்பமாக அர்த்தத்துடன் பங்கு பற்றவும்.

# 23 திருப்பலி

**அர்ச்சனை மலராக ஆலயத்தில் வருகின்றோம்**
**ஆனந்தமாய் புகழ்கீதம் என்றும் பாடுவோம்**
**அர்ப்பணித்து வாழ்ந்திட அன்பர் உன்னில்**
**வளர்ந்திட ஆசையோடு அருள் வேண்டி பணிகின்றோம்.**

**தாயின் கருவிலே உருவாகும் முன்னரே**
**அறிந்து எங்களை தேர்ந்த தேவனே**
**பாவியாயினும் பச்சைப் பிள்ளையாயினும்**
**அர்ச்சித்திருக்கின்றீர் கற்பித்திருக்கின்றீர்**
**மனிதராகப் புனிதராக வாழப் பணிக்கின்றீர்**
**பிறரும் வாழ எங்கள் வாழ்வைக் கொடுக்க அழைக்கின்றீர்**
**அஞ்சாதே என்று எம்மை காத்து வருகின்றீர்.**

**சிந்தித்துப் பாருங்கள்**

1. இப்பாடல் உங்களை எதற்காக அழைக்கிறது?
2. இப்பாடல் எச் சந்தர்ப்பத்தில் பாடப்படுகிறது?
3. திருவிவிலியத்தில் திருப்பாடல் 122 ஐ வாசித்து சிறிது நேரம் சிந்தியுங்கள்.
4. திருப்பாடல் 122 மூலம் உமக்குக் கிடைக்கும் செய்திகள் எவை?

திருவழிபாட்டில் அதி உயர்ந்த வழிபாடு திருப்பலி ஆகும். கத்தோலிக்கராகிய எமக்கு திருப்பலியைப் போல் முக்கியத்துவம் வாய்ந்தது வேறெதுவுமில்லை. அருள் வரப்பிரசாதங்கள் பெருக்கெடுத்துவரும் ஊற்றாக திருப்பலி இருக்கின்றது. ஆகையால் அதன் புனிதத்தன்மையை, மகத்துவத்தை, உன்னதத்தை, மேன்மையை பாதுகாப்பது எமது கடமையாகும்.

கிறிஸ்துவின் பாஸ்கா மறைபொருள் நினைவாகத் திருப்பலி கொண்டா டப்படுகிறது. கத்தோலிக்கர் எல்லா ஞாயிறு தினங்களிலும், கடன் திருநாட்களிலும் தவறாது திருப்பலியில் பங்குபற்ற வேண்டும். ஒரே குடும்பமாக முழுத் திருப்பலியில் பங்குபற்றுவது முக்கியமானதாகும். இறைகட்டளைகளும், திருச்சபையின் கட்டளைகளும் இவற்றை எமக்குக் கற்பிக்கின்றன.

திருப்பலியின் பிரதான பகுதிகள் இரண்டு.

1. இறைவார்த்தை வழிபாடு

2. நற்கருணை வழிபாடு

## திருப்பலியின் ஒழுங்குமுறைகள்

1. ஆரம்பச் சடங்கு
2. இறைவார்த்தைச் சடங்கு
3. பீடத்தை ஆயத்தம் செய்யும் சடங்கு
4. நற்கருணைச் சடங்கு
5. மறைபரப்புப் பணிக்கு வழியனுப்பும் சடங்கு

## 1. ஆரம்பச்சடங்கு நிகழ்வுகள்

i. வருகைப்பாடல்
ii. வாழ்த்துக் கூறுதல்
iii. முன்னுரை
iv. மனத்துயர் வழிபாடு
v. ஆண்டவரே இரக்கமாயிரும்
vi. வானவர் கீதம் (உன்னத கீதம்)
vii. சபை மன்றாட்டு

i. **வருகைப்பாடல்**



**23.1**

**திருப்பலியின் வருகைப் பவனி**

திருப்பலி வருகைப் பாடலுடன் ஆரம்பமாகிறது. வருகைப்பாடல், திருவழிபாட்டு ஆண்டு நாட்காட்டிற்குப் பொருத்தமாகத் தெரிவு செய்யப்படுவதோடு, இறைமக்களின் ஒற்றுமையை வெளிப்படுத்தவும், வருகைப்பவனி பயணிக்கவும் பாடப்படுகிறது.

வருகைப்பாடலுடன் வருகைப்பவனி ஆரம்பமாகும். வருகைப்பவனியில் தூபம், திருச்சிலுவையுடன் இருபக்கமும் மெழுகுவர்த்தி ஏந்திய பீடப்பணியாளர்கள், திருப்பலியில் பல்வேறு பணிகளில் ஈடுபடுவோர், நற்செய்தியை உயர்த்திச் செல்பவர். இறுதியாக திருப்பலியை நிறைவேற்றும் குரு ஆகியோர் இடம்பெறுவர்.

இப்பவனியானது இறைமக்கள் ஒரு யாத்திரைப் பயணத்தை நோக்கி சென்று கொண்டிருப்பதை நினைவுபடுத்துகிறது. வருகைப் பவனியில் பங்குபற்றும் அனைவரும் பலிப்பீடத்தின் முன், பயபக்தியோடு முழந்தாள் படியிட்டு அல்லது சிரந்தாழ்த்தி ஆராதனை செலுத்துவர்.

**திருப்பலியில் ஆரம்பத்தில் காணப்படும் மேன்மை மிகு அடையாளங்கள்,**

1. எரியும் விளக்கு
2. சிரம் தாழ்த்தி வணங்குதல்.
3. பலிபீடத்தை முத்திசெய்தல்
4. தூபம் காட்டுதல்

ii. **வாழ்த்துக் கூறுதல்**

திரித்துவ ஆராதனையின் பின் குருவானவர் இறைமக்களுக்கு வாழ்த்து தெரிவிப்பார்.

iii. **முன்னுரை**

பின்வரும் விடயங்களை உள்ளடக்கியதாக முன்னுரை சுருக்கமாக அமைதல் வேண்டும்.

1. பக்தியுடன் திருப்பலியில் பங்குபற்றத் தூண்டுதல்.
2. அன்றைய தின கொண்டாட்டத்தில் ஈடுபடச் செய்தல்.
3. திருவழிபாட்டுக்காலத்துக்குரிய இறைவார்த்தையின் செய்தியை எடுத்துக் காட்டுதல்.
4. அன்றைய தின விசேட கருத்துக்கள் இருப்பின் அவற்றைச் சுருக்கமாக முன்வைத்தல்.

iv. **மனத்துயர் வழிபாடு**

இவ்வழிபாட்டை மூன்று விதமாக செய்யலாம்.

1. மனத்துயர் மன்றாட்டு (எல்லாம் வல்ல இறைவனிடம்.......)
2. கிறிஸ்து மையப் பிரார்த்தனை (ஆண்டவரே இரக்கமாயிரும்)
3. ஆசிநீர் தெளித்தல் (மன்னிப்பு பாடல் ஒன்று பாட முடியும்)

v. **ஆண்டவரே இரக்கமாயிரும் (கீரியே)**

vi. **வானவர் கீதம் (குளோறியா)**

ஞாயிறு, திருவிழாத் திருப்பலிகளின் போது இது பாடப்படும். தபக்காலத்திலும் திருவருகைக் காலத்திலும் வானவர் கீதம் பாடப்பட மாட்டாது. ஆயினும் இக் காலங்களில் வரும் திருவிழாத் திருப்பலிகளில் மட்டும் பாடப்படும்.

vii. **சபை மன்றாட்டு**

தலைமை தாங்கும் குருவின் முதல் சபை மன்றாட்டு இதுவாகும். கூடியுள்ள மக்களின் எல்லா வேண்டுதல்களும் கருத்துக்களும் ஒன்றுசேர்ந்து சபையின் முதல் வரான குருவானவரால் இறைவனுக்கு ஒப்புக் கொடுக்கப்படுகிறது. இதனால் இது பொது மன்றாட்டு அல்லது சபை மன்றாட்டு என அழைக்கப்படுகிறது.

## 2. இறைவார்த்தை வழிபாடு



23.2 நற்செய்தியை எடுத்துரைத்தல்

**இறைவார்த்தையின் வழிபாட்டு பகுதிகள்**

*1. முதல் வாசகம்* → இறைவார்த்தைக்குச் செவிமடுப்போம்
*2. பதிலுரைப்பாடல்* → இறைவார்த்தையின் மூலம் பதிலளிப்போம்
*3. இரண்டாம் வாசகம்* → இறைவார்த்தைக்குச் செவிமடுப்போம்
*4. ஆர்ப்பரிப்பு* → இயேசுக்கிறிஸ்துவை வாழ்த்தி வரவேற்போம்.
*5. நற்செய்தி வாசகம்* → இயேசுகிறிஸ்துவுக்கு செவிசாய்ப்போம்
*6. மறை உரை* → இறைவார்த்தையை வாழ்வாக்குவோம்.
*7. நம்பிக்கை அறிக்கை* → எமது நம்பிக்கையை அறிக்கையிடுவோம்.
*8. நம்பிக்கையாளரின் மன்றாட்டு* → தேவைகளுக்காக மன்றாடுவோம்.

## 3. பீடத்தை ஆயத்தம் செய்யும் சடங்கு



23.3 பீடத்தை ஆயத்தம் செய்தல்

இச்சடங்கு காணிக்கைப் பவனியுடன் ஆரம்பமாகும். **இது இரண்டு உப பிரிவுகளைக் கொண்டுள்ளது.**

1. காணிக்கைப் பவனியும், காணிக்கை ஒப்புக் கொடுத்தலும்
2. காணிக்கை மீது மன்றாட்டு.

**காணிக்கை கொடுப்பதன் நோக்கங்கள் மூன்று (3)**

1. அப்பமும் இரசமும் கொண்டு வருதல்
2. ஏழைகளுக்குக் கொடுக்கக்கூடிய காணிக்கைப் பொருட்களைக் கொண்டு வருதல்.
3. திருச்சபையின் தாபரிப்பிற்காக காணிக்கை கொடுத்தல்.

திருப்பலியில் காணிக்கை சேகரிப்பு காணிக்கைப் பவனியின் ஒரு பகுதியாகும். காணிக்கைப் பவனியில் அடையாளப்படுத்தும் பொருட்களை எடுத்துச் செல்வது தவிர்க்கப்பட வேண்டும். அது முறையற்றது. காணிக்கைகளில் அப்பமும் இரசமும் மட்டுமே பீடத்தின் மீது வைக்கப்படும்.

## 4. நற்கருணை வழிபாடு



**23.4 நற்கருணை வசீகர வேளை**

இவ்வழிப்பாட்டின் பிரதான பகுதிகள் மூன்று.

1. நற்கருணை மன்றாட்டு.
2. இயேசு கற்பித்த செபம், சமாதான வாழ்த்துக் கூறுதல், அப்பம் பிட்குதல்.
3. நற்கருணை பகிர்ந்தளித்தல், நற்கருணை விருந்தின் பின் செபம்.

★ **நற்கருணை மன்றாட்டு**

திருப்பலியின் பிரதான மன்றாட்டு இதுவாகும். முழுமையாக இறைவனுடன் இணையும் செபமாகும். கிறிஸ்து வழியாக தூய ஆவியின் துணையோடு செபிக்கும் செபமாகும்.

★ **இயேசு கற்பித்த செபம்**

தற்போது பாவனையிலுள்ள இயேசு கற்பித்த செபம் நற்கருணை வழிபாட்டில் இரண்டாவது பகுதியாக சொல்லப்படுகிறது. இது திருத்தந்தை முதலாம் கிறகோரியாரால் திருப்பலியில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.

★ **சமாதான வாழ்த்துக் கூறுதல்**

இயேசு கிறிஸ்து தமது உயிர்ப்பின் பின் சீடர்களுக்குத் தோன்றி நிலையான சமாதான வாழ்த்தைக் கூறினார். அதே நிலையான சமாதானத்தை திருப்பலியின் போது நாம் ஒருவருக்கொருவர் அறிவித்துக் கொள்கிறோம்.

★ **அப்பம் பிட்குதல்**

அப்பம் பிட்குதல் கிறிஸ்து தம்மையே பிட்டுப் பகிர்ந்தமையை அடையாளப்படுத்துகிறது.



**23.5 திவ்விய நற்கருணை வழங்கல்**

நற்கருணை விருந்தில் நாம் பங்குபற்றுவதனால் ஒரே குடும்பத்தின் உறுப்பினர்களாகின்றோம். முடிவில்லா வாழ்வில் விண்ணக விருந்தின் முன்னடையாளமாக இது அமைகிறது. இவ்விருந்து உலக கத்தோலிக்க திருச்சபையோடு நாம் பங்கு கொள்வதையும் அடையாளப்படுத்துகிறது.

## 5. மறைபரப்புப் பணிக்காக வழி அனுப்பும் சடங்கு

இறுதி ஆசீரினால் எம்மை வழியனுப்பி வைப்பது மறைபரப்புச் செயற்பாட்டுக்காகவே ஆகும். இறைவார்த்தைக்கு செவிமடுத்து, கிறிஸ்துவின் திருவுடலால் ஊட்டம் பெற்று கிறிஸ்துவின் மறையுடலாக பிணைக்கப்பட்ட எம்மை வழியனுப்பி வைப்பது, கிறிஸ்துவின் அன்பின் செய்தியை வாழ்வாக்கி சான்று பகர்வதற்கே ஆகும்.

**திருப்பலிக்கு தலைமைதாங்கும் குருவானவரின் செபம் மூன்று (3)**

1. சபை மன்றாட்டு.
2. காணிக்கை மீது மன்றாட்டு.
3. நன்றி மன்றாட்டு.

## செயற்பாடு

1. திருப்பலியின் பிரதான பகுதிகள் எவை?
2. திருப்பலியின் சடங்குகளைப் பெயரிடுக.
3. ஆரம்பச் சடங்கின் பகுதிகளை ஒழுங்குமுறையில் எழுதுக.
4. திருப்பலியின் பிரதான மன்றாட்டு எது?
5. திருப்பலியின்போது பின்வரும் சந்தர்ப்பங்களில் பாடக்கூடிய பாடல்கள் 2 வீதம் குறிப்பிடுக.
   அ) வருகைப் பவனி
   ஆ) காணிக்கைப் பவனி
   இ) திருவிருந்து உட்கொள்ளும்போது
   ஈ) திருப்பலி முடிவில்
6. **பின்வரும் தலைப்புக்களில் விசுவாசிகள் மன்றாட்டு ஒவ்வொன்று எழுதுக.**
   அ. திருச்சபையின் தேவைகளுக்காக.
   ஆ. உலக மீட்புக்காகவும் மக்கள் தலைவர்களுக்காகவும்.
   இ. துன்புறுவோருக்காக.
   ஈ. பங்கு மக்களுக்காக.
7. திருப்பலி வழிபாட்டை அர்த்தமுள்ளதாக்குவதற்கு நீர் முன்வைக்கக் கூடிய ஆலோசனைகள் 5 தருக.



**வாழ்க்கைக்கு**

தகுந்த ஆயத்தத்தோடும், பக்தியுடனும்
திருப்பலியில் பங்குபற்றுவோம்.
ஆறுதலை, மகிழ்ச்சியை, அமைதியைப்
பெற்றுக் கொள்வோம்.

# 24 உன்னத குருவின் வேண்டுதல்



24.1 இயேசுவின் இறுதி இரா உணவு

இயேசு இறுதி இராவுணவின்போது நிறைவேற்றிய செயல்கள்.

1. தேவ நற்கருணையை ஏற்படுத்தினார்.
2. குருத்துவம் என்ற அருளடையாளத்தை ஏற்படுத்தினார்.
3. திருத்தூதர்களின் பாதங்களைக் கழுவினார்.
4. உன்னத குருவின் வேண்டுதலினூடாக இறை தந்தையிடம் வேண்டினார்.

இயேசு தம் சீடர்களுடன் சகிதம் இறுதி இராவுணவு வேளையில் இறை தந்தையிடம் செய்த வேண்டுதலே உன்னத குருவில் வேண்டுதலாகும். அது யோவான் நற் செய்தி 17ஆம் அதிகாரத்தில் இடம்பெற்றுள்ளது. இதில் இயேசுவின் தூதுரைப்பணியின் சுருக்கம் உள்ளடக்கப்பட்டுள்ளது. உன்னத குருவின் வேண்டுதல் மூன்று பகுதிகளைக் கொண்டுள்ளது.

## 1. தமக்காக வேண்டுதல்

இயேசு பரலோக தந்தையிடமிருந்து இவ்வுலகிற்கு வந்து தமது தூதுரைப் பணியை நிறைவேற்றிதால், இறை மகனாகிய தம்மை மகிமைப்படுத்தும்படி வேண்டுதல் செய்கிறார்.

இவ்வாறு பேசியபின் இயேசு வானத்தை அண்ணாந்து பார்த்து வேண்டியது, ‘‘தந்தையே, நேரம் வந்துவிட்டது. உம்மகன் உம்மை மாட்சிப்படுத்துமாறு நீர் மகனை மாட்சிப்படுத்தும்.

ஏனெனில், நீர் அவரிடம் ஒப்படைத்தவர்கள் அனைவருக்கும் அவர் நிலைவாழ்வை அருளுமாறு மனிதர் அனைவர் மீதும் அவருக்கு அதிகாரம் அளித்துள்ளீர். உண்மையான ஒரே கடவுளாகிய உம்மையும் நீர் அனுப்பிய இயேசுக் கிறிஸ்துவையும் அறிவதே நிலைவாழ்வு. நான் செய்யுமாறு நீர் என்னிடம் ஒப்படைத்திருந்த வேலையைச் செய்து முடித்து நான் உம்மை உலகில் மாட்சிப்படுத்தினேன். தந்தையே, உலகம் தோன்றும் முன்பே நீர் என்னை மாட்சிப்படுத்தியுள்ளீர். இப்போது உம் திருமுன் அதே மாட்சியை எனக்குத் தந்தருளும்.

*(யோவா 17 : 1 - 5)*

## 2. திருத்தூதர்களுக்காக வேண்டுதல்

இயேசு தாம் தெரிந்துகொண்ட சீடர்கள் இறைவனுக்குரியவர்களே. அவர்களை இயேசுவுக்கு தெரிவு செய்து கொடுத்தவரும் இறைவனே. எனவே அச்சீடர்களைப் பாதுகாத்தருளும்படி இயேசு வேண்டுதல் செய்கிறார்.

நீர் இவ்வுலகிலிருந்து தேர்ந்தெடுத்து என்னிடம் ஒப்படைத்த மக்களுக்கு நான் உமது பெயரை வெளிப்படுத்தினேன். உமக்கு உரியவர்களாய் இருந்த அவர்களை நீர் என்னிடம் ஒப்படைத்தீர். அவர்களும் உம் வார்த்தைகளைக் கடைப்பிடித்தார்கள். நீர் எனக்குத்தந்தவை அனைத்தும் உம்மிடமிருந்தே வந்தவை என்பது இப்போது அவர்களுக்குத் தெரியும். ஏனெனில் நீர் என்னிடம் சொன்னவற்றையே நான் அவர்களிடமும் சொன்னேன். அவர்களும் அதை ஏற்றுக்கொண்டு நான் உம்மிடமிருந்து வந்தேன் என்பதை உண்மையில் அறிந்துகொண்டார்கள். நீரே என்னை அனுப்பினீர் என்பதையும் நம்பினார்கள். அவர்களுக்காக நான் வேண்டுகிறேன். உலகிற்காக அல்ல. மாறாக நீர் என்னிடம் ஒப்படைத்தவர்களுக்காகவே வேண்டுகிறேன். அவர்கள் உமக்கு உரியவர்கள். ‘‘என்னுடையதெல்லாம் உம்முடையதே: உம்முடையதும் என்னுடையதே. அவர்கள் வழியாய் நான் மாட்சி பெற்றிருக்கிறேன். இனிநான் உலகில் இருக்கப்போவதில்லை.

*அவர்கள் உலகில் இருப்பார்கள். நான் உம்மிடம் வருகிறேன். தூய தந்தையே! நாம் ஒன்றாய் இருப்பது போல் அவர்களும் ஒன்றாய் இருக்கும்படி நீர் எனக்கு அளித்த உம் பெயரின் ஆற்றலால் அவர்களைக் காத்தருளும். நான் அவர்களோடு இருந்தபோது நீர் எனக்களித்த உம் பெயரின் ஆற்றலால் அவர்ளைக் காத்து வந்தேன்; நன்கு பாதுகாத்தேன். அவர்களுள் எவரும் அழிவுறவில்லை. மறைநூலில் எழுதியுள்ளது நிறைவேறும் வண்ணம் அழிவுக்குரியவன் மட்டுமே அழிவுற்றான். ‘‘இப்போது உம்மிடம் வருகிறேன். என் மகிழ்ச்சி அவர்களுள் நிறைவாக இருக்கும்படி நான் உலகில் இருக்கும் போதே இதைச் சொல்கிறேன். உம் வார்த்தையை நான் அவர்களுக்கு அறிவித்தேன். நான் உலகைச் சார்ந் தவனாய் இல்லாதது போல், அவர்களும் உலகைச் சார்ந்தவர்கள் அல்ல. ஆதலால் உலகம் அவர்களை வெறுக்கிறது. அவர்களை உலகிலிருந்து எடுத்துவிட வேண்டுமென்று நான் வேண்டவில்லை; தீயோனிடமிருந்து அவர்களைக் காத்தருள வேண்டுமென்றே வேண்டுகிறேன். நான் உலகைச் சார்ந்தவனாய் இல்லாதது போல் அவர்களும் உலகைச் சார்ந்தவர்கள் அல்ல. உண்மையினால் அவர்களை உமக்கு அர்ப்பணமாக்கியருளும். உமது வார்த்தையே உண்மை. நீர் என்னை உலகிற்கு அனுப்பியது போல, நானும் அவர்களை உலகிற்கு அனுப்புகிறேன். அவர்கள் உண்மையினால் உமக்கு உரியவர் ஆகும்படி அவர்களுக்காக என்னையே உமக்கு அர்ப்பணமாக்குகிறேன். (யோவா. 17:6 - 19)*

## 3. திருச்சபையின் ஒற்றுமைக்காக வேண்டுதல்

*திருத்தூதர்கள் வழியாகவே எதிர்காலத்தில் இயேசுவை அநேகர் அறிந்து கொள்வர். ஆயினும் அவர்கள் மத்தியில் பிளவுகள், எதிர்ப்புக்கள் உண்டாகி திருச்சபை பல பிரிவுகளாக்கப்படும். என்பதை அவர் அறிந்திருந்தார். எனவே அவர்கள் அனைவரையும் ஒன்றுசேர்க்கும்படி இயேசு பிதாவை வேண்டினார். உன்னத குருவின் வேண்டலில் பிரதான கருத்து ஒற்றுமை பற்றியதாகும்.*

''அவர்களுக்காக மட்டும் நான் வேண்டவில்லை; அவர்களுடைய வார்த்தையின் வழியாக என்னிடம் நம்பிக்கை கொள்வோருக்காகவும் வேண்டுகிறேன். எல்லாரும் ஒன்றாய் இருப்பார்களாக! தந்தையே, நீர் என்னுள்ளும் நான் உம்முள்ளும் இருப்பதுபோல் அவர்களும் ஒன்றாய் இருப்பார்களாக! இதனால் நீரே என்னை அனுப்பினீர் என்று உலகம் நம்பும். நாம் ஒன்றாய் இருப்பதுபோல் அவர்களும் ஒன்றாய் இருக்குமாறு நீர் எனக்கு அருளிய மாட்சியை நான் அவர்களுக்கு அளித்தேன். இவ்வாறு நான் அவர்களுள்ளும் நீர் என்னுள்ளும் இருப்பதால் அவர்களும் முழுமையாய் ஒன்றித்திருப்பார்களாக. இதனால் நீரே என்னை அனுப்பினீர் எனவும் நீர் என்மீது அன்பு கொண்டுள்ளதுபோல் அவர்கள் மீதும் அன்பு கொண்டுள்ளீர் எனவும் உலகு அறிந்து கொள்ளும். ''தந்தையே, உலகம் தோன்றுமுன்னே நீர் என்மீது அன்புகொண்டு எனக்கு மாட்சி அளித்தீர். நீர் என்னிடம் ஒப்படைத்தவர்கள் என் மாட்சியைக் காணுமாறு அவர்களும் நான் இருக்கும் இடத்திலேயே என்னோடு இருக்க வேண்டும் என விரும்புகிறேன். நீதியுள்ள தந்தையே, உலகு உம்மை அறியவில்லை: ஆனால் நான் உம்மை அறிந்துள்ளேன். நீரே என்னை அனுப்பினீர் என அவர்களும் அறிந்து கொண்டார்கள். நான் அவர்களோடு இணைந்திருக்கவும் நீர் என்மீது கொண்டிருந்த அன்பு அவர்கள்மீது இருக்கவும் உம்மைப்பற்றி அவர்களுக்கு அறிவித்தேன்: இன்னும் அறிவிப்பேன்''.

*(யோவா. 17:20 -26)*

## கிறிஸ்தவ சபையின் ஒன்றிப்பு

இயேசு ஏற்கனவே அறிந்திருந்தபடி காலப்போக்கில் திருச்சபை பல கூறுகளாகப் பிரிந்திருந்தது. அச்சபையை பிரதான இரு பகுதிகளாகப் பிரிக்கலாம்.

1. ஏற்றுக்கொள்ளப்பட்ட கிறிஸ்தவ சபை.
2. அடிப்படைவாதக் குழுக்கள் (பிரிவினைச் சபைகள்)

## கத்தோலிக்க திருச்சபையால் ஏற்றுக்கொள்ளப்பட்ட சபைகள் 7 ஆகும்

1. இலங்கைச் சபை (இங்கிலாந்து சபை / அங்கிலிக்கன் சபை)
2. மெதடிஸ்த சபை
3. பப்டிஸ்ற் சபை
4. புரட்டஸ்தாந்து சபை (ஒல்லாந்து)
5. பிரஸ்பிட்டேரியன் சபை
6. தென் இந்திய திருச்சபை
7. கிரேக்க ஒத்தடொக்ஸ் சபை

மீட்பின் திட்டம் முழு மனுக்குலத்திற்கும் உலக முடிவுவரை நிறைவேறும் பொருட்டு, இவ்வுலகில் மீட்பின் அடையாளமாக திருத்தூதர் தூய பேதுருவின் தலைமையில் திருச்சபை நிறுவப்பட்டது. ஒரே ஒரு திருச்சபைதான் அவரால் நிறுவப்பட்டது. அதன்பின்னர் பல பிரிவினைகள், பிளவுகள் திருச்சபைக்குள் ஏற்பட்டிருந்தன. இவ்வாறான பிளவுகளுடன் செயற்படுவது கிறிஸ்துவின் நோக்கம் அல்ல. வரலாற்று ரீதியில் ஏற்பட்ட பிரிவினைகளை நோக்கும் போது, அதற்கான காரணங்கள் பல இருந்தாலும், மனிதனுடைய பலவீனமும் பாவநாட்டங்களுமே முக்கிய காரணங்களாகக் காணப்படுகின்றன.

இயேசுவின் உன்னத குருவின் வேண்டுதலின்போது அவர் தம்மைப் பின்பற்றுபவர்களுக்காகவும், ஒற்றுமைக்காகவும், ஒருமைப்பாட்டுக்காகவும் செபித்தார். (யோவான் 17 : 20 - 21) ஒரே கிறிஸ்து இயேசுவை வழிபட்டு ஆராதித்து அவரது நற்செய்திக்கு சான்று பகரும், கிறிஸ்தவர்களாகிய எமது கடமை, யாதெனில் இன்று பல சபைகளாகவும் குழுக்களாகவும் பிரிந்து வாழும் கிறிஸ்தவர்களை ஒன்றுபடுத்தி திருத் தூதர்கள் வழிவந்த கத்தோலிக்க (உலக) திருச்சபையைக் கட்டியெழுப்புவதாகும். ‘‘கத்தோலிக்க திருச்சபையால் ஏற்றுக்கொள்ளப்பட்ட ச பைளோடு ஒன்றிணைந்து (Econmensm) இதனைச் செய்ய முடியும். கத்தோலிக்க திருச்சபையின் இரண்டாம் வத்திக்கான் சங்க ஒன்று கூடலின் வழியாக கிறிஸ்தவ சபையின் சமாதானத்தை முன்னிட்டு, **இரண்டு பிரதான** விதித்தொகுப்புகள் வெளியிடப்பட்டுள்ளது.
அவையாவன,

1. கீழைத்தேய கத்தோலிக்க திருச்சபை தொடர்பான விதித்தொகுப்புக்கள்.
2. கிறிஸ்தவ சபையின் ஒன்றிப்பை (ஒற்றுமையை) வளர்ப்பதற்கான விதித்தொகுப்புக்கள்.

கிறிஸ்தவ சபைகள் கலந்துரையாடியதன் விளைவாக சபைகளின் ஒற்றுமைக்காக அண்மைக் காலங்களில் மேற்கொள்ளப்பட்ட செயற்பாடுகள் சில கீழே தரப்பட்டுள்ளன.

★ அனைத்துலக சபைகளோடு தொடர்புகொண்டு ஒவ்வொரு வருடமும் கிறிஸ்தவ ஒன்றிப்புக்காக செபிக்கும் வாரமாக ஜனவரி 18 - 25 வரை பிரகடனப்படுத்தப்பட்டது.
★ சமய சமூக செயற்பாடுகளின் போது நட்புடன் செயலாற்றுதல்.
★ இறையியல் ஒன்றிப்பினை அடிப்படையாகக் கொண்டு, நிகழ்த்தப்படுகின்ற கலைகள், மறைசார் கலந்துரையாடல்களில் கலந்து கொள்ளல்.
★ இலங்கை வாழ் கத்தோலிக்க ஆயர் குழுமமும், ஏற்றுக்கொள்ளப்பட்ட கிறிஸ்தவ சபைகளும் ஒன்று சேர்ந்து 1983ல் சிங்கள மொழியிலும் 1995 தமிழ் மொழியிலும் திருவிவிலியத்தை பொது மொழி பெயர்ப்புச் செய்தனர்.

**செயற்பாடு**

1. *யோவா 17:1-26 வரையுள்ள பகுதியை கவனமாக வாசித்து தியானிக்கவும். அதிலுள்ள செய்திகளை எழுதுக.*
2. *உன்னத குருவின் வேண்டலில் மூன்று பிரிவுகளையும் தருக.*
3. *கிறிஸ்தவ சபையின் ஒற்றுமையை வளர்க்கக் கூடிய செயற்பாடுகள் இரண்டு எழுதுக.*



**வாழ்க்கைக்கு**

ஏற்றுக்கொள்ளப்பட்ட சபைகளோடு ஒற்றுமையாக செயற்படுதல்.

# 25 கெத்சமனியில் செபித்தல்



25.1 இயேசு கெத்சமனி தோட்டத்தில் செபித்தல்

**அக்னஸ் :** ஆ! தெரேசா அழகானதொரு படம். ஏன் இதைக் கொண்டு வந்தீர்.

**தெரேசா :** இன்று கெத்சமனியில் செபித்தல் பற்றிய பாடம் அல்லவா. எனவே தான் நான் இதைக் கொண்டு வந்தேன். இயேசு கெத்சமனியில் எப்படி செபித்தார் என்பதைக் காட்டும் படம் இது.

**அக்னஸ் :** இயேசு தனியாக கெத்சமனிக்கு சென்றாரா?

**தெரேசா :** இல்லை, இல்லை அவர் தமது திருத்தூதர்களையும் அழைத்துக் கொண்டே கெத்சமனி தோட்டத்திற்கு சென்றார். திருத்தூதர்களில் பேதுரு யாக்கோபு, யோவான் ஆகிய மூவரையும் தம்மோடு சேர்ந்து இருந்து செபிப்பதற்காக அழைத்துச் சென்றார். ஆயினும் அவர்கள் செபிப்பதற்குப் பதிலாக தூங்கிக் கொண்டிருந்தார்கள்.

**அக்னஸ் :** ஆ! அப்படியா நானும் அநேக நாட்களில் செபிக்காமல் சோம்பேறித்தனத்திற்கு இடம்கொடுத்து நித்திரை செய்யப் போய் விடுவேன். நீயும் அப்படித்தானே?

**தெரேசா :** நான் ஒவ்வொருநாளும் செபமாலை சொல்லி விட்டுத்தான் நித்திரைக்குச் செல்வேன். ஆனால் அன்று இயேசு தம் சீடர்களுக்கு மூன்று தடவை செபிக்கும்படி சொன்னார். ஆனால் அவர்கள் செபிக்காமல் தூங்கினார்கள்.

**அக்னஸ் :** நானும் உன்னைப்போல் எந்நாளும் செபமாலை செபிக்க முயற் சிப்பேன்.

**தெரேசா :** ஞாபகமா? உனக்கு எமது மறை ஆசிரியர் என்ன சொன்னார் என்று, எம் வாழ்வில் எத்தருணத்திலும் செபிப்பது இறைபிள்ளைக்குரிய பண்பாகும்.

**அக்னஸ் :** அதோ! ஆசிரியர் வகுப்பிற்கு வருகிறார். நாம், ஆசிரியரிடம் பூங்காவனத் தின் செபத்தைப்பற்றிக் கேட்டு மேலும் அறிந்து கொள்வோம்.

கெத்சமனி தோட்டத்தில் செய்த செபத்தின் (மாற் 14 : 32 - 42) மூலம், எமது வாழ்க்கையின் அனைத்து முக்கியமான சந்தர்ப்பங்களையும் செபத்துடன் ஆரம்பிக்க வேண்டும் என்பதே இறைவன் எமக்குத் தரும் செய்தியாகும். கெத்சமனி தோட்டம் எருசலேம் நகரத்திற்கு முன்னால், ஒலிவ மலையின் மேற்குதிசைப் பாதையில் உள்ளது. இயேசு, உன்னத குருவின் வேண்டலின் பின் (யோவா 18 : 1) திருத்தூதர்களோடு கெத்சமனி என்னும் இடத்திற்கு வந்து, சீடர்களை நோக்கிக் கூறியதாவது,

''நான் இறைவனிடம் வேண்டும் வரை நீங்கள் இங்கே அமர்ந்திருங்கள்.'' (மாற் 14 : 32)

''எனது உள்ளம் சாவுவருமளவுக்கு ஆழ்துயரம் கொண்டுள்ளது. நீங்கள் இங்கேயே தங்கி விழித்திருங்கள்''. (மாற் 14 : 34)

சற்று அப்பால் சென்று தரையில் விழுந்து இறை தந்தையை நோக்கி இவ்விதம் செபித்தார்.

''அப்பா, தந்தையே எல்லாம் உம்மால் இயலும். இத் துன்பக் கிண்ண த்தை என்னிடமிருந்து அகற்றும். ஆனாலும் என் விருப்பப்படி அல்ல. உம் விருப்பப்படி நிகழட்டும்''........ மாற் . 14 : 36

கெத்சமனி செபத்தில் மூன்று விடயங்கள் அடங்கியுள்ளன.

1. இறை இயேசுவின் உண்மையான மனிதத் தன்மை. (மனித சுபாவம்)
2. இறைவனுக்கும் கிறிஸ்துவுக்கும் இடையே உள்ள நெருங்கிய உறவு.
3. இயேசுவின் திருப்பாடுகள்.

இயேசு கெத்சமனி செபத்தின் மூலம் இறை சித்தத்தை நிறைவேற்றவும் அதற்கு முகங்கொடுக்க வேண்டிய சக்தியையும் பெற்றுக்கொண்டார். ஆனால் திருத்தூதர்கள் செபத்தின் மூலம் சக்தியைப் பெற்றுக் கொள்ளாததினால் பாவச்சோதனையில் விழுந்தார்கள். யூதாசும், அவனோடு தலமைக்குருக்கள், மறைநூல் அறிஞர், மூப்பர் ஆகியோர் அனுப்பிய மக்கள் கூட்டம் இயேசுவைப் பிடிக்க வந்தபோது இயேசுவைக் கைவிட்டு அவ்விடத்தை விட்டு அகன்று சென்றதும், தலமைக்குருவின் பணியாளராகிய மால்குசின் காதை வெட்டியதும், பேதுரு இயேசுவை மறுதலித்ததும் செபிக்காததனால் ஏற்பட்ட பிரதிபலன்கள் என்பதை சான்றுகளாக எடுத்துக் காட்டலாம்.

இயேசுவின் திருப்பாடுகளில் கெத்சமனி அனுபவம் முக்கிய இடம் வகிக் கின்றது. பெற்றோருடன் பிள்ளைகள் உரையாடுவதுபோல், இறைமக்களாகிய நாமும் இறைவனுடன் உரையாட முடியும். இறைமகனாகிய இயேசு எல்லா சந்தர்ப்பங்களிலும் தந்தையோடு உரையாடினார். மகனே, மகளே கிறிஸ்தவ வாழ்வில் செபமானது முக்கிய அம்சமாக அமைய வேண்டும். கிறிஸ்தவ வாழ்வு செபத்திலேயே தங்கியுள்ளது. செபத்திற்காக ஒரு விசேட இடத்தை எம் இல்லங்களில் அமைப்பது, எமது செபவாழ்விற்கு பெரும் உதவியாக அமையும்.



25.1
**செபித்தல்**

→ செபிக்கும் பழக்கத்தை எனது அனுதின வாழ்வின் ஒரு செயலாக அமைத்துக் கொள்வேன்.

→ குடும்பமாக ஒன்று சேர்ந்து ஒவ்வொரு நாளும் செபமாலையைச் செபிப்பேன்.

→ திருமணித்தியாலம், செபவழிபாடுகளில் கலந்து கொண்டு எனது ஆன்மீக வாழ்வை வளரச் செய்வேன்.

→ ஒவ்வொரு நாளும் ஒரு குறித்த நேரத்தில் செபிக்கும் பழக்கத்தை உருவாக்கிக் கொள்வேன்.

## செயற்பாடு

1. 'செபிப்பதன் மூலம் வலிமையைப் பெற்று பாவச் சோதனையை வெற்றிகொள்வோம்' எனும் தலைப்பில் ஒரு கட்டுரை வரையவும்.
2. கெத்சமனி செபத்தில் அடங்கியுள்ள விசேட விடயங்கள் மூன்று தருக.
3. மாற் 14 : 36 பகுதியை கவனமாக வாசித்து, தியானித்து அதன்மூலம் உமக்குக் கிடைக்கும் செய்தியை எழுதுக.
4. பாவச்சோதனையை வெற்றிகொள்ளும் வலிமையை வேண்டி செபம் ஒன்று எழுதுக.



**வாழ்க்கைக்கு**

பாவச் சோதனைகளை வெற்றி கொள்ள தினமும் குடும்பமாக ஒன்று சேர்ந்து செபிக்கவும்.